# தாழம்பூ





திருவரசு புத்தக நிலையம்

சு. சமுத்திரம்

# தாழம்பூ

சு. சமுத்திரம்




13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.

முதற் பதிப்பு : டிசம்பர், 1992
திருவரசு இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 2001

விலை ரூ. 60.00

❖ Title : **THAALAMBU**
❖ Author : Su. Samuthiram
❖ Language : Tamil
❖ Subject : Novel
❖ Edition : Second Edition,
December, 2001
❖ Pages : xii + 292 = 304

❖ Published by : **THIRUVARASU PUTHAKA NILAYAM**
13. Deenadayalu Street,
Thyagaraya Nagar
Chennai - 600 017.

❖ Price : **Rs. 60.00**

Printed at : Malar Printers 044-8224803

# ஜனரஞ்சகமும் சமுத்திரமும்...

தமிழ் இலக்கிய உலகில், ஒரு சிலரின் விமர்சனத் தாக்குதலுக்கு இலக்காகி இருக்கும் ஒரு எழுத்தாளர் சு. சமுத்திரம். இவருடைய படைப்புகள் விமர்சனத்திற்கு உட்படும் போதெல்லாம், இவரைச் சாடுபவர்தம் எழுத்தாணியிலிருந்து எம்பிக் குதிக்கும் கேள்வி இதுதான்.

**"ஜனரஞ்சகமாக எழுதுவது இலக்கியமாகுமா?"**

ஜனரஞ்சகமும் இலக்கியமும் சம்பந்தப்பட்ட ஒரு கேள்வி சமுத்திரத்தின் ஒவ்வொரு படைப்போடும் சம்பந்தப்பட்டிருக்கிறது.

ஜனரஞ்சகம் என்றால் என்ன?

ஜனரஞ்சகம் என்ற சொல்லை குறிப்பிட்ட ஒரு பொருளில் புரிந்துகொள்ள வேண்டும். அந்தச் சொல்லைப் பாமரத் தனத்தோடு சம்பந்தப்படுத்திக் கொள்வதோ, பாவிப்பதோ, அல்லது அவ்வாறு செய்து கொச்சைப்படுத்துவதோ சற்றும் சரியல்ல. ஜனரஞ்சகம் என்ற சொல், எல்லாத் தரப்பினரும் எளிதில் படித்துப் புரிந்து கொள்ளக் கூடியது என்ற அளவிலேயே இங்குக் குறிப்பிடப்படுகிறது.

ஜனரஞ்சகம் என்ற சொல்லை, ஒரு ஆரோக்கியமான பார்வையில் புரிந்து கொண்டே,0 சமுத்திரம் என்ற எழுத்தாளரைப் பார்க்க வேண்டும்.

ஜனரஞ்சகமாக எழுதுவது என்பது, படிக்கும் மக்கள் புரிந்துகொள்ளும் வகையில் எழுதுவது என்பதுதான். எழுதுகிறவன் சிந்தனையில் தெளிவு இருந்தால், எழுத்தில் தெளிவு இருக்கும். அதை வாசகன் புரிந்து கொள்வான். இப்படி எழுத்தாளனை, வாசகன், உரையாசிரியர் உதவி இல்லாமல் புரிந்து கொள்வதால், அந்தப் படைப்பு 'கனத்தை' இழந்துவிடாது. ஒருவர், தனக்கே தெளிவில்லாமல் எழுதுவது, தன் இலக்கு என்ன என்பது தனக்கே தெரியாமல் எழுதுவது, அதன் விளைவாகப் படிப்பவன் சிரமப்படுவது, இதில் "ஏதோ" இருக்கும் என்ற பிரமையைத் தன்னுள் விரித்துக்கொண்டு, தன் சிரமத்தையே இலக்கியத் தரமாகப் பாவிப்பது இவை எல்லாம் இலக்கிய அதிகாரமாகும்.

இலக்கியத் தெளிவும் இலக்கியத் தரமும் முரண்பட்டவை அல்ல!

படைப்பின் புரிதலும் படைப்பின் கனமும் வெவ்வேறானவை அல்ல!

ஒரு எழுத்தாளருக்கு, தான் நினைப்பதைச் சரியாகச் சொல்லத் தெரியாது போனால், அவர் தேர்ந்த எழுத்தாளனாக இருக்க முடியாது.

ஒருவரது, மொழிப் பலவீனம், அந்த மொழியின் பலவீனமாக மாறும்; அதை மறைக்க - அதாவது பலவீனத்தையே பலமாக்கச் செய்யப்படும் முயற்சியே, இலக்கியக் கனம், இலக்கியத் தரம் என்ற கண்டுபிடிப்புகள். தன்னைத் தற்காத்துக் கொள்வதற்கு எதிரியின் மீது ஏவும் அஸ்திரமே, தெளிந்த நீரைப் பார்த்து ஆழமில்லை என்பது.

பாரதி, பாரதிதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், கண்ணதாசன் - இவர்கள் எல்லாம் ஜனரஞ்சகமாக எழுதியவர்கள் தான். மக்களை மனதிலேயே வைத்துக்கொண்டு எழுதியவர்கள் தான். ஜனரஞ்சகமாக எழுதியதால், இவர்கள் படைப்புகளில் இலக்கியத் தரம், வறுமையை எய்திடவில்லை.

V

என்றாலும், ஜனரஞ்சக எதிர்ப்பாளர்கள் எதற்கும் துணிந்தவர்கள், தங்களைப் பாதுகாத்துக்கொள்ள பாரதி, பாரதிதாசன், பட்டுக்கோட்டையார், கண்ணதாசன் ஆகியோரையும் கைகழுவி விடுவார்கள். அவர்களுக்கும் இலக்கியத் தரம் இல்லை என்று "சுத்த" வாதம் செய்து விடுவார்கள். அவசியமானால் "கம்பனுக்கும்" கல்தா கொடுப்பார்கள்.

சுமார் 15 ஆண்டுகளுக்கு முன் "கார்க்கி" பத்திரிகையை அன்று நடத்திய கவிஞர் இளவேனில் ஒரு வேடிக்கையைச் செய்தார், வார்த்தைகளை வைத்து விளையாடி, ஒரு புதுக் கவிதை எழுதினார். அதன் பொருள், அவருக்கே தெரியாது. ஆனால், ஏதோ ஒரு கலையம்சமோ அல்லது கருத்து அம்சமோ இருப்பதுபோல் ஒரு பாசாங்கு செய்யும் அந்தக் "கவிதை" கணையாழிக்கு அனுப்பப் பட்டது. எழுதியவரின் பெயர் அசத்தலாக இருந்தால்தான் கவிதைக்கு மவுசு என்று கருதி, கவிஞர். இளவேனில், அருப சொரூபன் என்ற பெயரில் அனுப்பி வைத்தார். எழுதியவருக்கே தெரியாத பொருள், கணையாழி ஆசிரியருக்குப் புரிந்தது. அந்த கவிதையை தனது பத்திரிக்கையில் வெளியிட்டார். பின்னர் இளவேனில், இவர்களின் பொய் முகத்தை சுட்டிக் காட்டினார். புரியாமல் எழுதினால், அதை இவர்கள் உயர்ந்தது என்று அங்கீகரிப்பார்கள் என்பது நிரூபித்துக் காட்டப்பட்டது.

இந்த நிகழ்ச்சி, இவர்களின் இலக்கியத்தரம், கனம், ஆழம் முதலியவை இவர்களின் போலித்தனத்திற்கு ஒரு அரித்தார அலங்கோலத்தையே காட்டும்.

ஒரு படைப்பு ஜனரஞ்சமாக இருப்பாதலேயே, தன் இலக்கியத் தரத்தை இழந்து விடாது என்பது திண்ணம். ஒரு படைப்பின் ஜனரஞ்சக அம்சம், அதன் இலக்கிய அந்தஸ்துக்கும் குறுக்கே நிற்காது.

இப்படிச் சொல்வதால் ஜனரஞ்சகப் படைப்பெல்லாம் இலக்கியத்தரமானது என்று சொல்வதாக, கோணல்வாதம் செய்யக் கூடாது. ஜனரஞ்சக படைப்புக்களிலும் பல படைப்புகளுக்கு இலக்கியத்தரம் இருப்பதில்லை. இலக்கியத்தரம் என்பது, பல அம்சங்களை ஒருங்கிணைப்பதைப் பொறுத்ததாகும்.

ஜனரஞ்சகமாக எழுதுவதாலேயே, ஒரு எழுத்தாளனை ஓரம் கட்டப்பார்ப்பது இலக்கிய தர்மம் அல்ல என்பதே இங்கு வலியுறுத்தப்படுகிறது.

சரோசா, ஒரு குப்பத்துக்காரி. திருடுதல், சாராயம் காய்ச்சுதல், அவளுக்குத் தொழில். பெற்றோரை இழந்த அவளுக்கு ஆறுதல், அவள் பாட்டன். அவரைக் காப்பாற்றும் பொறுப்பு அவளுக்கு. இளங்கோ என்ற இளைஞன் வீட்டில் திருடி மாட்டிக்கொள்கிறாள். காவல் துறையில், இளங்கோவின் நண்பருக்கு இருக்கும் செல்வாக்கால், காவல் நிலையத்தில் உதைபடுகிறாள் சரோசா. செய்த குற்றத்துடன் செய்யாத குற்றமும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. செய்யாத குற்றத்திற்குச் சரோசா, தண்டிக்கப்படுவதை விரும்பாத இளங்கோ, தன் காதலி பாமா, பூக்காரி ருக்குமணி ஆகியோர் உதவியுடன், சரோசாவைக் காவல் நிலையத்தில் இருந்து சிறை மீட்கிறான்.

ஆனால் இந்தப் பின்னணியை உணராத சரோசா, தன் குப்பத்து ஆட்கள் மூலம், இளங்கோவைப் பழி வாங்குகிறாள். குப்பத்து ரவுடிகள் இளங்கோவை அடித்துக் குற்றுயிராய்த் தூக்கி எறிகிறார்கள். பூக்காரி ருக்குமணி காப்பாற்றுகிறாள். பின்னர் சரோசா உண்மையை அறிகிறாள்.

சாராயத் தொழிலில் இருந்து சரோசாவை விலக வைத்து இளங்கோ, தன் அலுவலகத்திலேயே ஒரு தாற்காலிக வேலை வாங்கித் தருகிறான். தங்களை விட்டுப் போவதை விரும்பாத

சாராயக்கும்பலோ, அவளை ஒழிக்க விரும்புகிறது. இதனால், காவல்துறையை அந்த கும்பல் ஏவி விட்டு சரோசா மீது செய்யாத கொலைப்பழியை தலையில் சுமத்துகிறது. என்றாலும், அரசு அலுவலகத்தில் வேலைபார்க்கும் இன்னொரு தொழிலாளியான முனியம்மா, சரோசாவைக் காப்பாற்றச் சமதர்ம மாதர் மன்றத்திற்கு அழைத்துக்கொண்டு செல்கிறாள். அந்த மாதர் மன்றம், சரோசாவை வென்றெடுக்கிறது. அவள் அதில் ஐக்கியமாகிறாள். இதுதான் கதை.

குப்பம், மத்தியதர வாழ்க்கை, அலுவலகம், காவல் துறை இவை அத்தனையின் குறுக்கு வெட்டுத்தோற்றத்தை, சமுத்திரம் கண்முன் நிறுத்துகிறார். இந்த நான்கில் சிதைவையும், சீரழிவையும் சித்திரிக்கும் சமுத்திரம், அங்கே மனிதாபிமானம் சுடர்விடுவதையும் சுட்டிக்காட்டுகிறார். குப்பத்தில் ஒரு சரோசா, மத்தியதர வர்க்கத்தில் ஒரு இளங்கோ, அலுவலகத்தில் ஒரு முனியம்மா, காவல் துறையில் ஒரு திருமலையப்பன் - இவர்கள் தத்தம் வாழ்க்கைச் சூழலிலிருந்து "மானுடம்" காப்பவர்கள். அதாவது 'சமன் செய்து சீர்தூக்குகிறார்' சமுத்திரம்.

சமதர்ம மாதர் மன்றம், நாவலில் திணிக்கப்பட்டிருப்பது போன்ற ஒரு உணர்வு ஏற்படுகிறது. இது, பின் சிந்தனையாகவும் இருக்கக்கூடும். சரோசாவைச் சமதர்ம மாதர் மாமன்றத்திற்கு முனியம்மாள் அழைத்துச் செல்கிறாள். ஆனால் முனியம்மாள் இத்தகைய சிந்தனையும் பார்வையும் உடையவள் என்பதை முன்னாலே ஆசிரியர் சுட்டிக் காட்டியிருக்க வேண்டும்.

நாவல் முழுவதும் சமுத்திரத்தின் நடையில் ஒரு கிண்டல், குத்தல், கேலி... இந்த 'பாணி' நாவல் முழுவதும் சமுத்திரம் 'இருக்கிறார்' என்பதைச் சொல்லிக்கொண்டே இருக்கிறது. சாதாரணமாகப் படைப்பிலக்கியத்தில், ஆசிரியர் இருக்கிறார் என்ற உணர்வு துருத்திக்கொண்டு நின்றால் அது கலையம்சத்தைப்

பலவீனப்படுத்தும். ஆனால் சமுத்திரத்தின் நாவலில் அந்தப் பலவீனம் இல்லை.

பாத்திரப்படைப்பும், நடையும் நாவலுக்குப் பெருமை சேர்க்கும் அம்சங்கள்.

சரோசா, தாழம்பூவாக இருக்கலாம். தாழம்பூவையே தலையில் சூட இயக்கம் இருக்கலாம். ஆனால் சமுத்திரம், மல்லிகைப்பூ தான், அதைத் தலையில் சூடத் தயக்கம் காட்டினால், தலையில் தான் கோளாறு.

**ச. செந்தில் நாதன்**<br>
**தலைவர்,**<br>
**தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்,**<br>
**சென்னை.**

**டிசம்பர், 1992.**

# என்னுரை

1992-ஆம் ஆண்டில் இந்த நாவலை, இதே பெயரில் தினத்தந்தியில் தொடர்கதையாக எழுதினேன். ஆகையால், அந்த வாசகர்களுக்குரிய எளிய நடையில் முதல் தடவையாக ஒரு சமூக பிரச்சனை குறித்து எழுதப்பட்டது.

இந்த நாவலுக்கான நிகழ்வு, என் கண் முன்னாலயே நடந்தது. எங்கள் பகுதிப் பக்கம், இந்தப் படைப்பில் வரும் சரோசாபோல இரும்பு இத்தியாதிகளை திருடுவதும், தட்டி கேட்பவர்களை தலைகளில் தட்டுவதுமாக இருந்த ஒரு சேரிப் பெண்ணைப் பற்றிய சித்தரிப்புதான். இவள், தனது தாத்தாவிடம் காட்டிய பரிவையும் நான் ஒரு தடவை கண்டிருக்கிறேன். அந்த மனிதர், இந்த நாவலில் வருவதுபோலவே காட்சி அளிப்பார்.

சென்னை தொலைக்காட்சியிலும், வானொலியிலும் செய்தி ஆசிரியராகப் பணியாற்றிய நான், இந்த இரு நிறுவனங்களிலும் கேசுவல்கள் எனப்படும் அரசின் அன்றாட கூலி அலுவலர்கள், நிரந்தர அலுவலர்களால் எப்படி பாடாய்ப்படுத்தப்படுகிறார்கள் என்பதை அறிவேன். பெரும்பாலும் இந்த நாவலில் வருவதுபோலவே அவர்கள் நடத்தப்படுகிறார்கள். ஆனாலும், இவர்களுக்கு நான் மனிதாபிமானமிக்க அலுவலராகவே செயல்பட்டேன். இவர்களில் பட்டதாரிகள் உட்பட்ட பலர், இன்னும் என் வீட்டிற்கு வருகிறார்கள். இந்த நட்புரிமைதான் இவர்களை பற்றி எழுத எனக்கு தகுதி வழங்கியுள்ளது.

ஒரு சேரிப் பெண்ணை பற்றிய பரிதாப சித்தரிப்போடு, அரசின் அன்றாடக் கூலி அலுவலர்களின் அனுதாப

சித்தரிப்போடும் இரட்டை நோக்கத்தோடு, இந்த நாவலை எழுதினேன். கூடவே, கள்ளச்சாராயம் காய்க்கப்படும் 'கலையை' சம்பந்தப்பட்ட இடங்களுக்கு நேரில் போய் தெரிந்து கொண்டேன்.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத் தலைவர் தோழர். செந்தில்நாதன், முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக எனது குடும்ப நண்பர். அவர் அண்ணன் ச. ராசமாணிக்கமும் நானும், நேருதாசன், பகத்சிங், தமிழ்மணி, தர்மலிங்கம், பலராமன் போன்ற தோழர்களும் சேர்ந்து, 1958-ம் ஆண்டு வாக்கில் தேசிய முழக்கம் என்ற பத்திரிகையை நடத்தியிருக்கிறோம். இவர்களோடு, தோழர் செந்தில்நாதனும் அந்தக் காலகட்டத்தில், என் சிந்தனையில் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியவர்.

தோழர். செந்தில்நாதனின் அணிந்துரை, அடிப்படை மக்களைப் பற்றிய இந்த படைப்பிற்கு வலிமை சேர்க்கிறது. ஜனரஞ்சகத்தைப் பற்றி அவர் குறிப்பிட்டிருக்கும் கருத்து, இந்தக் காலகட்டத்தில் ஒரு கருத்துப் போராகவே நடை பெற்று வருகிறது. இது, இப்போது தீவிரமான கட்டத்தை எட்டியுள்ளது. தரமான வாசகர், எந்தப் பக்கம் முகம் திருப்புவது என்று புரியாமல் தவிக்கிறார். மேட்டுக்குடி எழுத்தாளர்கள், இவரது முகத்தை பளவந்தமாக திரும்பப் பார்க்கிறார்கள். என்னைப் போன்ற எழுத்தாளர்களும், தோழர் செந்தில்நாதன் போன்ற சமூகச் சிந்தனையாளர்களும் இந்த வன்முறை திருப்பிலிருந்து வாசகர்களை, மீட்டெடுக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம்.

மக்கள் எழுத்து என்பது மலிவு எழுத்தல்ல, மாறாக எந்த மக்களிடம் நிகழ்வுகளையும், மொழியாடல்களையும் உள்வாங்குகிறோமோ, அவற்றை, அந்த மக்களுக்கே, விஞ்ஞான பூர்வமாக, அவர்களின் மானுட நம்பிக்கையை

உறுதிப்படுத்தும் வகையில் திருப்பிக் கொடுப்பதே மக்கள் எழுத்தாளர்களின் பெரும் பொறுப்பாகிறது. இதற்கு, இந்த தாழம்பூ, பத்தாண்டுகளுக்கு முன்பே தாள் திறந்தது.

தோழர் செந்தில்நாதன் சுட்டிக்காட்டுவதுபோல், சமதர்ம மாதர் மன்றம் இட்டுக்கட்டப்பட்டதுதான். பத்தாண்டுகளுக்கு முன்பு ஆங்காங்கே நடந்த பெண்ணியப் போராட்டங்களை உள்வாங்கித்தான் இந்த 'மன்றத்தை' படைப்பில் கொண்டு வந்தாலும், சம்பந்தப்பட்ட பெண்ணிய அமைப்புகள்கூட இந்தப் படைப்பைப் பற்றி அலட்டிக்கவில்லை.

திருவாங்கூர் சமஸ்தானத்தில் 19-ஆம் நூற்றாண்டில், நம் முதாட்டிகள் மாராப்பு போட உரிமை கேட்டு முப்பத்தைந்தாண்டு காலம் நடத்திய தோள்சீலைப் போராட்டமே இன்றைய பெண்ணிய இலக்கிய மீட்புகளில் இடம் பெறாதபோது, இந்தப் படைப்பு இடம் பெற வேண்டும் என்று நான் நினைப்பது ஒரு முடநம்பிக்கை மாதிரிதான்.

இந்தப் படைப்பு வெளியாகக் காரணமாக இருந்த தினத்தந்திக்கு - குறிப்பாக அதன் இயக்குனர் திரு. சிவந்தி ஆதித்தன் அவர்களுக்கும், அப்போதைய செய்தி ஆசிரியரும், மிகச் சிறந்த எழுத்தாளருமான தோழர். சண்முக நாதனுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தப் படைப்பை பல்வேறு கல்வியாளர்கள் தத்தம் ஆய்வுகளுக்காக கருப்பொருளாக எடுத்தாண்டிருக்கிறார்கள். பல்வேறு ஆய்வு அறிக்கைகள், எம்.பில்., - பட்ட அறிக்கைகள் வெளியாகி உள்ளன. இவர்களுக்கு, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது படைப்புகள் அனைத்தையும் கொண்டு செலுத்த முன்வந்திருக்கும் பெரியவர் திருநாவுக்கரசு அவர்களுக்கும்,

அவரது அருமை மகன் ராமு அவர்களுக்கும், நான் நன்றி கடன்பட்டுள்ளேன். இங்கே நான் குறிப்பிடுவதுபோல் நன்றி ஒரு கடன்தான். காரணம், எனது பழைய படைப்புகளை கொண்டு வருவதன் மூலம் இவர்களுக்கு புதிய வருவாய் வரப்போவதில்லை. ஆனாலும், என் மீதுகொண்ட அன்பாலும், என்னைப் போன்ற எழுத்தாளர்களின் மக்கள் வழி படைப்புகள் புதுப்பிக்கபட வேண்டும் என்ற சமூக நோக்காலும் பெரியவர் திருநாவுக்கரசு இந்த நாவலையும், இது போன்ற எனது இதரப் படைப்புகளையும் மீண்டும் மீண்டும் புதுப்பிக்கிறார். அவருக்கு ஆயிரம் தடவை நன்றி கூறினாலும் அது முழுமையாகாது.

வாசகப் பெருமக்கள் இந்தப் படைப்பு குறித்து தங்களின் விசர்சனத்தை தெரியப்படுத்தினால் அது என்னை ஊக்குவிக்கும்.

- சு. சமுத்திரம்

# 1

தோளுக்கு மேலே பின்புறமாய் வளைந்திருந்த ஒரு கையில் தொங்கிக்கொண்டிருந்த கோணிப் பை, அவளது முதுகுக்கு உறைபோல ஒட்டிக்கொண்டு, அங்குமிங்கும் ஆடியது. கண்ணாடி மாதிரியான கோணி, அடியில் கனத்துக்கிடந்தது. மறு கையோ மூன்றடி நீளமும், முருங்கக்காய் பருமானமும் கொண்ட ஒரு இரும்புக் கம்பியை, அங்குமிங்குமாய் ஆட்டிக் கொண்டிருந்தது. இரண்டு கைகளிலும் சர்தார்ஜி காப்புகள் மாதிரியான 'கங்கண' வளையல்கள். சட்டை என்று தள்ளவோ, ஜாக்கெட் என்று கொள்ளவோ முடியாத மேல் பாக உடுப்பு, முட்டிக் கைகள் வரை, முட்டி, இடுப்பு வரைக்கும் நீண்டு, இடையை பெல்ட்போல் சுற்றிக்கொண்டிருந்தது. அழுக்கே ஒரு நிறமாகக் கொண்டது போன்ற களிமண் நிற ஆடை. இடுப்புக்குக் கீழே இருந்து குதிகால்வரை வியாபித்த சிமெண்ட் நிறப் பாவாடை... அதில் இடையிடையே சதுரஞ் சதுரமான சின்னச்சின்ன கண்ணாடிகள். வாழைக் குலையிலிருந்து மேல்போக்காய் விடுபட்ட வாழை இலை போன்று மார்பில் பட்டும் படாமலும் இருந்த தாவணி. காதுகளில் கம்மல்களும், அந்தக் கம்மல்களில் தொங்கிய வளையங்களுமாய்...

சரோசா, அந்தப் பங்களாவில் 'படிதாண்டிய' பெண் போல் நாணிக்கோணி நின்ற தென்னை மரத்தில், கைக்கு எட்டாத உயரத்தில் ஒரு தேங்காய் குலை மீது கண் வைத்து எம்பி எம்பிக் குதித்தாள். அவள் கைபட்டு, கைபட்டு, அது மேலே போனதே தவிர அந்தக் கைக்குள் அடங்கவில்லை. ஏதோ, தப்பு செய்துவிட்டது போல தலையில் அடித்துவிட்டு, பிறகு கையில் இருந்த இரும்புக் கம்பியை ஓங்கி, ஒரு 'குலையில்' ஒரு போடு போட்டாள். ஐந்து

தேங்காய்கள் அந்த வீட்டுக்கு உள்ளேயும், ஆறு வெளியேயும் விழுந்தன. ஆறு தேரங்காயையும் பொறுக்கி கோணிக்குள் போட்டுக் கொண்டு, போகப் போனவளுக்கு, 'அம்மாம் பெரிசு' தேங்காய்களை வீட்டுக்குரியவர்களுக்கு விட்டுக் கொடுத்துப் போக மனமில்லை. கீழே குனிந்து, இரும்பு கேட்டின் ஓட்டைகள் வழியாக உள்ளே பார்த்தாள். வெளியே நடக்கும் எதையும் பார்க்கப் போவதில்லை என்பதுபோல, அந்த வீட்டுக்குள்ளேயே இருந்த சோபா செட்டு ஆசாமிகள் வாயும், வயிறுமாய், டி.வியும், கண்ணுமாய், சாய்ந்து கிடந்தார்கள்.

சரோசா, ஆமை நகர்வதுபோல, கேட்டை நகர்த்தி, உள்ளே போனபோது, தாழ்வாரத்தில் கட்டிப் போடப்பட்டிருந்த, சடைநாய், பலமாய் குரைத்தது. சமையல் அறைக்குள் தட்டுமுட்டு சாமான்களோடு, தடுமாறிக் கொண்டிருந்த மாமி, அது 'டி.வி. நாய்' என்று அனுமானித்து, எட்டிப் பார்க்கவில்லை. அந்தச் சமயம் பார்த்து மிக்ஸியை தட்டிவிட, அது போட்ட கூச்சலில், நாய் சத்தம் உள்ளே இருந்தவர்கள் காதில் உரசவில்லை. இதற்குள், சரோசா ஆறு தேங்காய்களோடு மேலும் ஐந்து தேங்காய்களையும் பையினுள் போட்டுக் கொண்டு, கைக்கு எட்டிய ஒரு கொய்யாப் பழத்தைப் பறித்து அணில் மாதிரி கொரித்துக் கொண்டு வெளியேறப் போனாள். அந்தச் சடை நாய் எம்பி எம்பிக் குலைத்தது. உடனே, இவள் உள்ளே கிடந்த தேங்காயை எடுத்து அதன் மேல் எறியப் போவதுபோல் பாவலா செய்தாள். அது நிசமாகவே ஒரு 'சடைதான்'; உடனே பம்மிக் கொண்டு, வாலாட்டியது.

சரோசா ,அந்த இரண்டாவது குறுக்குத் தெருவில் தெற்காக நடந்து, கிழக்காகத் திரும்பி நின்றாள். ஒரு குண்டுகுழி காலிமனை, தாலி மாதிரியான வேலிச் சுவரோடு வெறிச்சோடிக் கிடந்தது. அந்தப் பக்கமாகப் போனாள். வேலிச் சுவரைப் பிடித்தபடி எட்டிப்

பார்த்தாள். இரண்டாவது குறுக்குத் தெருவில், ஆள் அரவம் தெரியவில்லை. பகல் ஒரு மணி என்பதால், அதையே நள்ளிரவாக அனுமானித்து, பங்களாக்காரிகள் தூங்குகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டாள்.

காலிமனைச் சுவரில் வேல் வடிவத்திலும் சுண்ணாம்பு டப்பா வடிவத்திலும் குத்தி வைக்கப்பட்டிருந்த கண்ணாடிச் சிதறல்களை கையை வைத்து ஆட்டி ஆட்டி எடுத்துப் போட்டாள். பிறகு, இரும்புக் கம்பியால் கண்ணாடிச் சிதறல்களை குத்திக் குத்தி சிதறடித்தாள். கோணிப் பை சுவரில் தாவி லாவகமாக நின்றாள். அவளைப் போலவே நின்ற ஒரு பூனை, அவள் வாயில் தொங்கிய கோணிப்பையை மிகப் பெரிய கோரப்பல்லாக அனுமானித்து, அவள் தன்னைத்தான் பிடித்துத் தின்ன நிற்கிறாள் என்று பயந்து கீழே குதிக்க, அந்தப் பூனை தன்னைப் பிடிக்கத்தான் தாவுகிறது என்று ஒரு மைனா குருவி ஆகாயத்தில் பறக்க, சரோசா எதிர் வீட்டுப் பங்களாவை பார்த்துவிட்டு 'அடடே மயிலு' என்று வாய்விட்டுப் பேசினாள். பிறகு, தப்புக்குத் தண்டனை கொடுப்பது போல தலையில் லேசாய் அடித்துக் கொண்டு தன்பாட்டுக்குப் பேசினாள் :

"அட கண்றாவியே... பங்களாம்மா வீட்டு பச்சைப் புடவையை ஏதோவொரு 'குடச' வேலைக்காரி தோய்ச்சு, மாடிச் சுவர்ல போட்டிருக்காள். அது இன்னாடான்னா, தென்ன ஓல இடுக்கு வழியாய் பார்த்தால், மயிலு மாதிரி கீது. வாழ்வும் இது மாதிரி தானோ? அடடே! நான் கூட சினிமாவுக்கு வசனம் எழுதலாம்போல - சீ... அந்தப் பொழப்பு சொதப்புற பொழப்பு... எவனாவது காலுல, கையில விழுந்தா, நடிக்கறதப்பத்தி யோசிக்கலாம். இன்னும் ரஜினிகாந்த் மாதிரி பொம்மனாட்டிங்க யாரும் வரலியே..."

சரோசா, அந்தச் சுவருக்கு அடுத்தபக்கம், வாளி மாதிரி இருந்த வட்டச்சுவரில் அதன் குறுக்காய் நின்ற இரும்புப் பிடியை

பிடித்தபடியே ஒரு காலை நீட்டிப் போட்டாள். அப்போது கால் தடுமாறி, அவள் அந்தக் கிணற்றுக்குள்ளேயே விழுந்திருப்பாள். நல்லவேளை, அடுத்த காலையும், அங்கே போட்டு, கைப்பிடியை நழுவ விடாமல் 'சைடில்' குதித்தாள். ஏதோ ஒரு சினிமா ஸ்டண்ட் நடிகையை மனதில் நினைத்தபடி கைகால்களை உதறி விட்டுக்கொண்டாள். எதிரே, ஒரு பங்களா, கேட்க ஆளில்லாமல் கிடந்தது போல் இருந்தது. அந்த வீட்டுக்கார ஆசாமி குடும்பத்தோடு நேற்று 'தொம்மாந்தூண்டு காரில்' (மாருதி) பெட்டி படுக்கையோடு போனது போல் இருந்தது.

ஆப்பிரிக்க மக்களின் தலைமுடிபோல், தரையோடு சுருண்டு கிடந்த புற்கள் கால் உரச, தங்கரளிச் செடிகள் தோளுரச, கருவேல மரங்கள் தலையுரச, எருக்கம்பூக்கள் இடையுரச, அவள் அந்தப் பகுதி வழியாக நடந்து, மூன்றாவது குறுக்குத் தெருவில், நின்று நிதானித்த பிறகு, அந்தப் பங்களாவை நோக்கிப் போனாள்.

அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களால் ஏப்பம் விடப்பட்டு, இப்போது வாங்கியவருக்கு குழி வெட்டக்கூடப் போதாத அளவுக்குக் கிடந்த ஒரு காலி மனை வழியாக இரும்பு வேலி போட்ட அந்தப் பங்களாவை நெருங்கினாள். நான்கைந்து சிமெண்ட் தூண்களுக்கு இடையே, வலைபோல் சன்னஞ் சன்னமாய் பின்னப்பட்ட இரும்புக் கம்பிகளை, கொய்யாக்காயை கடித்துக் கொண்டே பசியோடு பார்த்தாள். தரையில் பலமாகக் கால் ஊன்றி, இரண்டு கைகளால், அந்த இரும்பு வலைக் கம்பிகளை இழுத்தாள். ஏற்கனவே மக்கிப் போயிருந்த இரும்புக் கம்பிகள், தொடப் பொறுக்காதவைபோல் சரிந்தன. கோணல்மாணலாய், வட்ட வட்டமான அந்தக் கம்பி வலைகளை புடவையை மடிப்பது போல் மடித்து, வளைத்து, கோணிப் பையின் வயிற்றுக்குள் போட்டாள். மூன்றடி நீளமுள்ள சிமெண்ட் தூண்களில் பின்னிக் கிடந்த இரும்புக் கம்பிகள் மட்டும் அவள்

இழுத்த இழுப்பிற்கு மசியவில்லை. அவள் உள்ளங்கையில் ரத்தம் வந்ததுதான் மிச்சம். அவளுக்கும் அதைப் பார்த்து ரத்தக் கோபம் வந்தது. இரும்புத் தடியை எடுத்து, சிமெண்ட் சுவர்களை தட்டித்தட்டி, மட்டந்தட்டி, அவற்றில் சுருண்டு கிடந்த கம்பிகளை குறுக்காகவும், நெடுக்காகவும் மடித்து 'காவலிலிருந்து' விடுவித்து கோணிப் பைக்குள் சிறைப்படுத்தினாள். பின்பக்கமுள்ள கதவைப் பெயர்க்கலாமா என்றும் யோசித்தபடி, தலையை தோளோடு சேர்த்து முன்னும் பின்னுமாக ஆட்டினாள். ஏதோ ஒரு சினிமாக்காரி, ஒரு படத்தில் இப்படி ஆட்டியதாக அவளுக்கு ஒரு ஞாபகம். பிறகு, 'சீ... பாவம்' என்று தனக்குள்ளேயே பேசியபடி, அந்த இடத்தைவிட்டு நிதானமாக வெளியேறப் போனபோது -

"ஏய்... நில்லுடி..."

சரோசா, கோணிப் பையை முதுகில் சாத்தியபடியே குரல் வந்த எதிர்த் திசையை நோக்கி ஏடாகூடமாய் பார்த்தாள். அங்கே குரல் கொடுத்துக்கொண்டிருந்தவளை விட, அந்த வீட்டின் முனையில் சவருக்கு மேலே உயர்ந்த பப்பாளிப் பழங்களே, அவள் கவனத்தைக் கவர்ந்தன.

"ஏய்... தடிமாடு... கோணிக்குள்ளே என்னடி வைச்சிருக்க? இங்க வாடி....!"

சரோசா, எதிர்த்திசையை எதிரித் திசையாகப் பார்த்தாள். பங்களா மாதிரி பெயர்ப் பலகையோ, நாயோ இல்லாமல், கிராமத்து வீடு மாதிரி 'பேஜாரான' சோடனைகளோடு, எருமை மாடு படுத்துக் கிடப்பது போல் இருந்த அந்த வீட்டை உற்றுப் பார்த்தாள். அதிலிருந்து வெளிப்பட்டவளின் தோற்றத்தைப் பார்த்து, சரோசா பதறவில்லையானாலும், பயந்து விட்டாள். வழக்கமான பங்களாக்காரிகள் மாதிரி இது தளதள - கொழுகொழுக்காரி இல்லை. இறுகிப்போன உடம்பு. இளையராசா

மெட்டு மாதிரி அடித்தொண்டைக் குரலு. 'படா காலு, படா கையி' ஒரு நாட்டுப்புறம், இந்த வீட்டுப் புறத்துக்கு வந்திருக்கு...

சரோசா, தனது அனுபவங்களை ஒட்டுமொத்தமாக உள்ளத்திற்குள் கொண்டு வந்தாள். முதலில், திருடிய இடத்தைவிட்டு எகிறணும். அப்பால அக்கம்பக்கத்து 'கஸ்மாலங்க' கூடும் முன்னால, கைகால விரிச்சுப்போட்டு ஓடாதது மாதிரியும், நடக்காதது மாதிரியும் போகணும். அதே சமயம், அந்த 'கெய்விக்கு' பயப்படாதது மாதிரியும் 'தில்லா'ப் பார்க்கணும். ஆனாலும், அதுக்கு மரியாதி கொடுக்கிறது மாதிரி தலைய ஒரங்கட்டி லேசாச் சிரிச்சு நழுவணும்.

சரோசா, பழைய அனுபவங்களை செயல்படுத்தும் வகையில், அவளை 'தில்லாய்' பார்த்து, சும்மாங்காட்டியும் சிரித்து, நடந்த போது, எதிர்வீட்டு அம்மா, அவளுக்குப் புதிய அனுபவத்தைக் கற்றுக் கொடுக்கப் போகிறவள் போல் 'சாலையில்' வந்து நின்றவளை இரண்டு கையையும் குறுக்காய் நீட்டி வழிமறித்து, வாயைப் பேசவிட்டாள்.

"ஏண்டி திருட்டு முண்ட! இந்த உடம்பை வைச்சுக்கிட்டு, இப்படி ஏண்டி பொழப்பு நடத்தறே? ஏண்டி ஆள் இல்லாத வீட்டுக்குள்ள போய் அடாவடியா இரும்புக் கம்பிய பிடுங்கற? இன்னும் என்னல்லாம் திருடினியோ? கோணிப் பைய திறந்து காட்டுடி. ஒன்ன மாதிரி திருடிங்கள, நடுரோட்டுல நிக்க வைச்சுச் சுடணும்."

எதிர்வீட்டம்மா, பேச்சோடு நிற்கவில்லை. ஐம்பது வயதிலும் அந்த இருபது வயதுக்காரியை வீழ்த்த முடியும் என்ற உறுதியோடு, சரோசாவின் கோணிப்பையை பறிப்பதற்காக கையை நீட்டினாள். உடனே சரோசா கோணி மூட்டையை உடம்புக்கு முன்னாலும் பின்னாலும், தலைக்கு மேலும் கீழும் அங்குமிங்குமாய் ஆட்ட, எதிர்வீட்டம்மா, அது சுற்றிய சுற்றுக்கு

ஏற்ப, கைகளை ஆகாயத்தில் துழாவ... அந்தக் கிழமும், இந்த இளமும் குச்சுப்புடி டான்ஸ் ஆடுவது போல் இருந்தது. அக்கம்பக்கத்து பங்களா ஜன்னல்களில் முகம் பதித்து நின்ற கண்கள், வாய்களையும் அகலமாக்கின. ஆனால், கண்கள்தான் தெரிந்தனவே தவிர, கால்கள் தெரியவில்லை. அவை எதிர்வீட்டு அம்மாவுக்கு ஆதரவாக வெளியே வரவும் இல்லை.

பங்களா பொம்மனாட்டிங்களோட பயந்த கண்களைப் பார்த்த சரோசாவுக்கு, லேசாய் தைரியம் வந்தது. 'கெய்விக்கு' நெத்தியடி கொடுத்தாத்தான், குயிக்கா போகலாம். 'இல்லாங்காட்டி' வம்புதான். சரோசா அவளை அடிக்கப் போவது போல், கையை ஓங்கியபடியே, கத்தினாள் :

"ஏய்... கெய்வி, நெஞ்சுல கீற மஞ்சாஞ் சோறு பிஞ்சிடும் பிஞ்சு. நானு இரும்புக் கம்பிய பொறுக்கறத பாத்தியாமே?"

"அடிப்பாவி! இரும்புக் கம்பிகள, சிமெண்ட் தூண்களை உடச்சி, கோணி மூட்டைக்குள்ள போட்டத நானே பார்த்தேன்! சீ... ஒனக்கு எதுக்குடி சேல? ஒனக்கு எதுக்குடி ஜாக்கெட்டு?"

"நீ இந்த வயசுல பிரா போடும் போது, நானு சின்னப் பொண்ணு சிங்காரிக்கப்படாதா? நல்ல நினைப்புமே உனக்கு. நானு பாவம் நாலு வீட்ல பேப்பர்ங்க பொறுக்கி கோணிக்குள்ள பூட்டு போய்க்கினே கீறேன். நீ இன்னடான்னா என்னப்போய் திருடின்னு சொல்ற?"

"அப்படின்னா, கோணிய திறந்து காட்டேண்டி..."

"ஏய்... கெய்வி, மரியாதியா அந்தாண்ட போ. இல்லாட்டி நடக்கறது வேற. அந்த வீட்டு, 'பிச்சாத்து', இரும்புக் கம்பிய பிச்சா என்னமே? வழி விடுறியா... இல்ல ஒத தின்னுறியா?"

எதிர்வீட்டம்மாவுக்கு, இன்னும் கிராமத்து மண் வாசனை போகவில்லைதான். ஆனாலும், அவளால் அடாவடியாய்

பேசத்தான் முடிந்ததே தவிர, அடிதடியில் இறங்க மனமில்லை. அதோடு, இவள் அசல் ரவுடி மாதிரி தெரியுது. ஆளுதவி கிடைக்குமா என்று அந்தம்மா, அக்கம்பக்கம் பார்த்தாள். அத்தனை ஜன்னல்களும், 'பட்டுபட்டு' என்று மூடின. "அடிப்பாவிகளா" என்று அனைத்து வீடுகளையும் ஒட்டு மொத்தமாகப் பார்த்துக் கத்தினாள். பிறகு வீட்டுக்குள், தனது அருந்தவப் புதல்வி மல்லிகா இருப்பது நினைவுக்கு வந்தது. சரோசாவை கோணிப் பையோடு சேர்த்துப் பிடித்துக்கொண்டு கத்தினாள். 'திருடி... திருடி... ஓடியாங்க... ஓடியாங்க..!

ஆனாலும், சில வீடுகளில் வாசல்கள் திறக்கப்பட்டு சில பெண்கள் அவற்றை அடைத்து நின்றார்கள். சிலர் வெளியே வந்தார்கள். ஆனால் வீதிக்கு வரவில்லை. காரணம், அவர்கள் வீடுகள் அசல் காம்பவுண்ட் சுவர்களால் அரண் கொண்டவை. இரும்புக் கம்பிகள் இல்லாத சுவர்க்காரிகள். அவர்கள் வந்த விதமும், பக்கத்து வீட்டுக் காரிகளை கையாட்டிக் கூப்பிட்ட தோரணையும் ஒரு சண்டை சினிமாவைப் பார்க்கப் போகிற ரசனையோடு நிற்பது போல் தோன்றியது. அந்த அம்மாவைப் பார்க்காமல் அந்தப் பெண்ணைப் பார்த்த பார்வை, அவளே வெற்றிபெற வேண்டுமென்று நினைப்பது போலவும் இருந்தது. எல்லோரையும் அடக்கி வைப்பது போல் அந்தத் தெருவே குலுங்கும்படி குரலெழுப்பும் அந்த அம்மாவுக்கு எதிர்க்குரல் கிடைத்துவிட்ட மகிழ்ச்சியை பரிமாறிக் கொள்வது போல் நின்றார்கள். சிலர் தொலைநோக்காய் பிரச்சினையை அணுகி வருத்தப்பட்டாலும், பலர் இந்த மாதிரியான சண்டைக்காக தத்தம் வீடுகளிலும் சில சில்லரைத் திருட்டுகள் நடந்தால்கூட பரவாயில்லை என்பது போல் பார்த்தார்கள்.

"ஏய் மல்லி! போலீசுக்கு போன் பண்ணிட்டு இங்க வாடி. முவள விடப்படாது. முதல்ல போன் போடு."

போலீஸ் என்றதும், சரோசாவுக்கு லேசாய் பயம் பிடித்தது. 'ஏரியா போலீஸ்' என்றால் பயமில்லை. ஒருவேளை அவசர போலீசுன்னா, ஆபத்தாச்சே.

உள்ளே, ஒரு மாத நாவலை மெய்மறந்து படித்து, ஒரு கற்பனைக் காதலனுடனோ, அல்லது நிசக் காதலனை நினைத்துக் கொண்டோ, ரசித்துக் கிடந்த மல்லிகா, வெளிவந்து எட்டிப் பார்த்துவிட்டு உள்ளே அவசர அவசரமாய் ஓடி, டெலிபோன் பக்கம் போனது தெரிந்தது. உடனே, அவள் அம்மாவும் திமிறிக்கொண்டிருந்த சரோசாவை வலுக்கட்டாயமாக, மூச்சுமுட்ட இழுத்துக் கொண்டிருந்தாள்.

சரோசா, வழிமறித்தவளை மல்லாக்கத் தள்ளப்போனாள். பிறகு அது கொலைக் கேசாகிவிடும் என்று அந்த நேரத்திலும் நினைத்து, அவள் ஒரு கையை பிடித்துத் திருகி, ஒரு ஓரமாகத் தள்ளி, அவள் இரண்டு கால்களையும் தனது கால்களால் தட்டிவிட்டு, கீழே ஆரஅமரக் கிடத்திவிட்டு, நடந்தாள்.

ஒரு கையை கீழே ஊன்றியபடி விழுந்த அந்தம்மா, அந்தக் கை ஒடிந்துவிட்டதா, அல்லது பிசகிவிட்டதா என்று தெரியாமல் அந்தக் கையையே பார்த்தபடி "அய்யோ, அம்மா, அய்யோ... அம்மா..." என்று அரற்றினாள். அவளால் எழுந்திருக்க முடியவில்லை. மல்லிகா அங்கே அலறியடித்து வந்து அம்மாவைத்தான் பிடித்தாளே தவிர, "அவளை பிடிடி, பிடிடி" என்று அந்த வேதனையிலும் ஒரு சாதனையை நடத்தச் சொன்ன தாய்காரியின் ஆணையை அவளால் நிறைவேற்ற முடியவில்லை. பாதி, பயம்; மீதி, அசல் சோம்பம்.

சரோசா, கை நழுவி விழுந்த கோணி மூட்டையை மீண்டும் தூக்கிக்கொண்டு எகிறிக் குதித்த சுவர் பக்கமாய் ஓடியபோது, அந்த சாலையில் மோட்டார் சைக்கிளில் வந்த வாலிபன், அம்மா கீழே கிடப்பதைப் பார்த்து வாகனத்தை ஆப் செய்யாமலேயே,

நிறுத்தி வைத்துவிட்டு "என்னம்மா, என்னம்மா" என்று கேட்டுக்கொண்டே, அம்மாவை தூக்கப் போனான். அவளோ, மகன் கிடைத்த மகிழ்ச்சியில் வலியை கரைத்துக்கொண்டு ஆணையிட்டாள் :

"அதோ ஓடுறா பாரு... அவள் திருடி... கேடி... என்ன அடிச்சுப் போட்டுட்டு ஓடுறா. அவளைப் போய் பிடிச்சுட்டு வாடா. பிடிச்ச கையோட இங்க இழுத்துட்டு வாடா."

சரோசாவை, தன் முன்னால் இழுத்துக்கொண்டு வரப்படும் வரை எழுந்திருக்கப் போவதில்லை என்பது போல், அம்மாக்காரி அப்படியே கிடந்தாள். மல்லி, அந்தச் சமயத்திலும், மாத நாவலின் ஒரு உச்சகட்டப் பகுதியை படித்துக் கொண்டு நின்றாள். ஆனால் தாய்சொல் தட்டாத தனயனான இளங்கோ ஓடினான். அவள் ஓடிய பக்கமாக அவளைவிட வேகமாக ஓடினான். இதற்குள், சரோசா அந்தக் கிணற்றுச் சுவரில் ஏறி, வேலிச்சுவரில் தாவி, வெற்றிக்களிப்போடு நின்றபடி அவனைப் பார்த்தாள். அவன் நெருங்கிக்கொண்டிருந்தபோது, அட்டகாசமாகச் சொன்னாள் :

"அடச்சீ... போடா... எச்சிக்கலை."

சரோசா, அந்த சுவரிலிருந்து அடுத்த பக்கம் குதித்தாள். ஏற்கனவே அம்மா அடிபட்டதால் ஏற்பட்ட ஆத்திரம், இப்போது சரோசா கொடுத்தபட்டப் பெயரால் ஆவேசமாகி, இளங்கோவும், அடுத்த மூன்றாவது நிமிடம் அதே சுவரில் ஏறி அவளை மாதிரியே அடுத்த பக்கம் குதித்தான்.

# 2

கண்ணாடி ஊசிகள் கால் செருப்பையும் துளைத்து பாதங்களில் குத்த, சரோசா அந்த குண்டு குழி நிலத்தில் குதித்து எவருக்கும் சந்தேகம் வராதபடி, வேகவேமாய் நடந்து, இரண்டாவது குறுக்குத் தெருவின் விளிம்பை மிதித்தபோது 'தொப்' என்று சத்தம்கேட்டது. திரும்பிப் பார்த்தவள், திடுக்கிட்டு தோளைக் குலுக்கினாள். அந்த 'எச்சிக்கல' கீழே குதித்து தரையில் விழுந்து, நெளிந்து எழுந்து, அவளை நோக்கிப் பாய்ந்து வருவதைப் பார்த்தாள். அவன் தோற்றத்தைப் பார்த்ததும் லேசாய் பயந்து விட்டாள். உருண்டு திரண்ட உருளை மாதிரியான உடம்பு. பாக்கு மரம் மாதிரி துவங்கி, வேல் கம்புகள் மாதிரி முடிந்த விரல்கள். பேண்ட் சிலாக்கிற்குள் திமிறிக் கொண்டிருக்கும் உடல்வாகு. கசரத் எடுத்தவனோ அல்லது கராத்தே கிராத்தே என்கிறார்களே அப்படிப்பட்டவனோ? பேஜாரு கஸ்மாலமோ?

சரோஜா தனது 'ஏரியா ஆட்கள்' எவரும் அந்தப் பக்கம் திரிகிறார்களா என்பது போல் கண்களைச் சுழல விட்டாள். உடம்பைச் சுற்ற விட்டாள். காணவில்லை. அவனோ 'ஏய்... ஏய்' என்று கத்தியபடி, எகிறி வந்தான். அவள் கண்டுகொள்ளாமல், கால்களுக்கு இடையே மூன்றடி இடைவெளி கொடுத்து நடந்தாள். நடப்பது போல ஓடினாள்.

சரோசா அவசரத்தில் 'ஏரியா' இருந்த திசையைப் பார்த்து நடக்காமல், ரைட்டுக்குப் பதிலாய் லெப்டுக்கு திரும்பி விட்டாள். ஆனால் அது ஒரு முட்டுச் சந்து. இரண்டு பக்கமும் நெருக்கமான வீடுகளாலும், இறுதியில் அந்த இரண்டு பக்கங்களையும் இணைப்பது போல் மூன்று வீடுகளை வரிசையாய் கொண்டு மேற்கொண்டு போகமுடியாமல் முட்டிப் போன தெரு. சரோசா

வலது கை கோணிப் பையை இடது கைக்கு மாற்றிக் கொண்டு, யோசித்தாள். அந்தப் பக்கம் 'ஜம்ப்' பண்ணமுடியாது. போதாக் குறைக்கு நடு வீட்டுக்கு முன்னால் ஸ்டூல் போட்டு ஒரு கூர்க்கா உட்கார்ந்திருந்தான். அவள் திரும்பி நடந்தாள்.

இளங்கோவை நோக்கி, எதுவுமே நடக்காதது போல் ஓரங்கட்டி நடந்தாள். கீழே கிடந்த ஒரு பேட்டரி செல்லை பொறுக்கி கோணிக்குள் போட்டுக் கொண்டு, 'பாவலா' செய்தபடி அவனைப் பார்க்காதது போல் பார்த்து, நடக்காதது போல் நடந்தாள். அவள், அந்த குறுக்குத் தெருவில் தெற்குப் பக்கமாகத் திரும்பப் போனபோது, அவன், அவள் முன்னால் போய் இரண்டு கைகளையும் சிலந்திக்கால்கள் மாதிரி குவித்துக் கொண்டு நின்றான். அவள் பிறருக்குக் கேட்காத - அதேசமயம் அவனுக்குக் கேட்கும் - கிசுகிசுப்புக் குரலில் -

"வழிய விடு சாரே..."

"எச்சிக்கலன்னு சொல்லிட்டு இப்ப சாரா போடுறே... ஒன்ன விடமாட்டேன்."

"என்ன சாரே... வம்பு பண்றே. ஒன்ன எதுக்கு நான் அப்படி சொல்லணும்? நீ...அடையாளம் தெரியாம பேசறேன்னு நினைக்கேன். ஒன்னை எதுக்கு நான் திட்டணும்? நீ என் மாமனா, மச்சானா, எதிரியா?"

"யாருமில்ல! நீ அடிச்சுப்போட்டுட்டு வந்திருக்கியே, அவங்களோட மகன். ஒன்னை போலீஸ்ல ஒப்படைக்கப்போற சமூகத் தொண்டன்."

சரோசா, அவனை நேருக்கு நேராய் பார்த்தாள். தோற்றத்தில் வஸ்தாதுதான். ஆனால், தோரணையைப் பார்த்தால் ஒரு குயந்தே... டபாச்சுடலாம். அவள் இப்போது நாலு பேருக்குக் கேட்கும்படி சத்தம் போட்டாள்.

"யோவ்... பட்டப்பகலுல ஒரு வயசுப் பொண்ணு கிட்டயா வாலாட்டறே? தோ பார்... என்ன தொட்ட அப்புறம் தெரியும் மவனே."

இருவரும் சடுகுடு ஆடுவது போல் ஒருவரையொருவர் ஆழம் பார்த்தார்கள். அவள், அவன் கைகளுக்கு அப்பால் நடக்கப்போனபோது, அவன் கரங்கள் அனுமார் வாலாய் நீளுவது போல் தோன்றியது. உடனே அவள் 'டேய்... டாய்' என்று தெருவோர்க்குக் கேட்காமல் அவனுக்கு மட்டுமே கேட்கும் சின்னக்குரலில் பேட்டைத்தனமாக உறுமினாள். அவனோ முகத்தில் எந்தச் சலனத்தையும் காட்டாமல் அம்மாவுக்கு மட்டுமே கட்டுப்பட்ட கர்மயோகிபோல் சரோசா அசைந்த விகிதாச்சாரத்திற்கு எதிர் விகிதாச்சாரத்தில் அல்லாடிக் கொண்டிருந்தான். இதனால் சரோசாவும் ஒரு அசைக்க முடியாத முடிவுக்கு வரவேண்டியதாயிற்று.

சரோசா, அவன் நெடுங்கையை ஒருபுறமாய் ஒதுக்கித் தள்ளிவிட்டாள். அவன் பதிலுக்கு அவள் கைகளைப் பிடிக்கப் போனான். பிறகு கூச்சப்பட்டு, அவள் கைபிடித்த கோணியைப் பிடித்து இழுத்தான். அவளோ, அவனை மாறி மாறித் தள்ளினாள். அவளை அப்படித் தள்ள முடியாத கூச்சத்தில் இருந்த அவன், ஒத்தாசைக்கு ஆள் கிடைக்குமா என்று அங்குமிங்குமாய் பார்த்த போது -

சரோசா, தானே எதிர்பார்க்காத வகையில் தைரியப்பட்டாள். பின்னால் கிடந்த கோணிப் பையை முன்னால் கொண்டு வந்தாள். இன்னும் திரும்பாமல் நின்ற அவன் விலாவில், கோணிப்பையால் விளாசினாள். அவன் துள்ளிக் குதித்துத் திரும்பியபோது, தேங்காய்களால் கனத்து இரும்பு முட்கள் எட்டிப்பார்த்த அந்தக் கோணிப் பையால் அவன் முட்டிக்குக் கீழே இரண்டு கால்களிலும் வாங்கு வாங்கென்று வாங்கினாள்.

கோணிக்குள் கிடந்த இரும்புக் கம்பி அவனை செமத்தியாகக் குத்திவிட்டன. அதனால், அவன் அடிபட்ட காலை தூக்கிப் பிடித்து வலி பொறுக்க முடியாமல் பல்லைக் கடித்து ஒற்றைக் காலில் நின்றான். அவளோ அவனை, 'இந்த அடி போதுமா... இன்னும் கொஞ்சம் வேணுமா' என்பது போல் பார்த்துவிட்டு, தனது ஏரியா திசையை நோக்கி புலிப் பாய்ச்சலில் நடந்தாள்.

இளங்கோ, திணறிப்போனான். மலைப்பாம்பின் கண்ணின் உக்கிரத்தில் கட்டுப்பட்டு அசைவற்று நிற்கும் மானாய் நின்றான். அந்த ஆண் மானுக்கு, இந்த அனுபவம் புதிது. அம்மாக்காரி காய்கறிக்காரியிடமோ, கார்ப்பரேஷன் குப்பை அம்மாவுடனோ போர் தொடுக்கும் போது, தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, அந்த வீட்டிலும் அதன் சுற்றுப்புற வளாகத்திலும் ஒரு நிசப்தம் நிலவுவது போல் ஒரு அனுமானத்தைக் கொடுத்துவிட்டு தன் பாட்டுக்கு நடப்பவன். ஆனால் இப்போதோ அப்படி நடக்க முடியாமல் முட்டிக்கால்களுக்குக் கீழே ஊற்றுக் கண்களாய் துளிர்த்த ரத்தத் துளிகளை தலைகுனிந்து பார்த்தபடியே நின்றான். பிறகு அவன் ஒருபொருட்டே அல்ல என்பது போல் அவனுக்குப் புறமுதுகு காட்டி வீரத்தனமாய் நடந்த சரோசாவின் பின்தலையை, பிடரியில் கைவைத்தபடியே பார்த்தான். இப்படியும் நடக்குமா என்ற சந்தேகம். நடந்துவிட்டதே என்ற ஆதங்கம்... ஒரு பெண்ணோடு போட்ட முதல் சண்டை. கலகலப்பு இல்லாத கைகலப்பு... ஏமாற்றம்... எரிச்சல்... இயலாமை.

இளங்கோ, எல்லாம் முடிந்து விட்டது என்பது போல் திரும்பி வீட்டுக்குப் போகத்தான் போனான். இதற்குள் அந்தத் தெருமுனையிலிருந்து நிதானமாக வந்த ஒரு 'பத்துப் பாத்திரம்மா' இன்னும் முடியவில்லை என்பது போல் ஒப்பாரி போடாத குறையாக நடந்து முடிந்த விவகாரத்திற்கு அதிரடி வர்ணனை கொடுத்தாள்.

"அடிப்பாவி! ஒரு ஆம்பிளைய இப்படியா அடிச்சுப் போட்டுட்டுப் போறே? நடுரோட்ல ஒரு அறியாத பையன நாய் மாதிரி அடிச்சுப் போட்டுட்டுப் போறியேடி... பாவி! ஆம்புளய கை நீட்டலாமாடி? என்ன தினாவட்டா நடக்கறாள்? என்ன பிள்ளாண்டாப்பா நீ...? என்ன ஆம்புள நீ?"

இளங்கோ, அடி கொடுத்த வலியைவிட, அவள் கொடுத்த வலியில் அல்லாடினான். போதாக் குறைக்கு, ஜன்னல்கள் வழியாக எல்லோரும் அவனை ஏளனமாய் பார்ப்பது போல் இருந்தது. இப்போது, அவளைப் பார்த்து ஓடினான். அவளுக்கு முன்னால் எதிர் திசையில் வந்த பேண்ட் ஸ்லாக் பேர்வழிகளின் காதுகளில் விழும்படி கத்தினான்:

"அதோ போறாளே... அவள் திருடி... பொம்பள ரவுடி... பிடிங்க சார் ; பிடிடங்க..."

பேண்ட்-ஸ்லாக் பேர்வழிகளும், அவளைப் பிடிக்கப் போவது போல் கடிகாரக் கைகளை செங்குத்தாய் நீட்டி, முன் கைகளை கொக்கிகள் போல் மேலே கொண்டுபோய் குவித்து, சாலையை அடைப்பது போல் வழிமறித்தார்கள்.

உடனே சரோசா, சர்வ சாதாரணமாக, கோணிப் பைக்குள் கையை விட்டு, இரும்புத் தடியை எடுத்து, வலது கையில் பிடித்து, தோளுக்கு மேல் உயர்த்தி, தன்பாட்டுக்கு நடப்பது போல் நடந்தாள். சாலை மறியல்காரர்கள் அவளுக்கு பயபக்தியுடன் வழிவிட்டார்கள். 'பிடிங்க பிடிங்க' என்று குரல் கொடுத்து ஓடிவருபவனை எரிச்சலோடு பார்த்தபடி நடையைத் தொடர்ந்தார்கள்.

இதற்குள், ஒரு திட்டிலில் போய் நின்று திரும்பிப் பார்த்தாள் சரோசா. அவனைப் பார்த்து 'டாடா' காட்டிவிட்டு, கார்ப்பரேஷன்

மைதானத்திற்குள் நுழைந்து, அதற்கு அப்பால் உள்ள கட்டிடக் குவியல்களுக்குள் மறைந்து கொண்டிருந்தாள்.

முட்கம்பிகள், பேண்டை துவாரங்களாக்கி, அவற்றில் ரத்தத் துளிகளை மேலோங்கச் செய்தபோது, இளங்கோ, அப்படியே திகைத்து நின்றான். பின்னால் கடாமுடா சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

ஒரு ஆட்டோ ரிக்ஷாவில் இரண்டு சிவப்புத் தொப்பிகளும், அவன் அம்மாவும் வந்து கொண்டிருந்தார்கள். அந்த ஆட்டோவை வழிமறித்து 'பத்து பாத்திரக்காரி' ஏதேதோ பேசிக் கொண்டிருந்தாள்.

ஆட்டோ ரிக்ஷாவும் அவனும் பாதிப்பாதி வழியில் சந்தித்துக் கொண்டார்கள். அம்மாக்காரி, ஆத்திரம் தாங்காமல் கத்தினாள் :

"ஏண்டா அவள்கிட்ட அடிபடறதுக்கா உன்னை வளர்த்தேன்? உங்க தாத்தா எப்பேர்ப்பட்டவர்ன்னு உனக்குத் தெரியுமா...? புலிக்குப் பிறந்து பூனையா போயிட்டியேடா... ஏறுடா, ரிக்ஷாவில ஏறு. இவங்களோட போய், அவள் கையில விலங்கு போட்டு நம்ம வீட்டுப் பக்கமா இழுத்துக்கிட்டு வா. எவ்வளவு செலவானாலும் சரி."

கடைசி வார்த்தையில் ருசிகண்ட கான்ஸ்டபிள்கள், அவனை ஏறச்சொல்லி, முகத்தை ஏற்ற இறக்கமாக ஆட்டினார்கள். அம்மாக்காரி இறங்கிக் கொண்டாள். இளங்கோ ஏறிக்கொண்டான். ஆட்டோ பறந்தது.

# 3

“அவள் எப்படி இருப்பாள்?”

“அழகாய் இருப்பாள்.”

“இந்த வயசில உங்களுக்கு கிழவிகூட அழகாகத்தான் தெரியும். நாங்க அத கேக்கல... அங்க அடையாளம் எப்படி?”

“உருண்ட முகம்...லேசா ஒரு தூக்கலான பல்லு. கழுத்துல ஒரு மச்சம். தாவணி தொடாத பாவாடை. பேச்சு ரவுடி மாதிரி... ஆனா முகம் ஜென்டில்.”

“கழுத்துப் பக்கம் ஒரு வெட்டு இருக்குமா?”

“ஆமா சார். ஆமா.”

காவலர்கள், தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள் பரிபாஷையில்.

அந்த ஆட்டோ அலைமோதி ஓடியது. எதிரே வந்த ஒரு பாவாடை தாவணி இளம் பெண்ணைப் பார்த்து உறுமியபடி நின்றது. அவள் சிவப்புத் தொப்பிகளைப் பார்த்து ஒதுங்கியபோது, இளங்கோ, “இவள், இல்லை” என்றான். ஆட்டோ, அவளைக் கடந்து, ஒரு மல்டி-பிளாட் கட்டிடம் வழியாக வந்து, அங்கே நின்ற ஒரு பெண் குவியலின் முன் நின்றது. இளங்கோவை இறக்கி விட்டார்கள். அவன், அவர்களை ஒட்டுமொத்தமாகப் பார்த்துவிட்டு, “இல்லை இல்லை” என்று சொன்னபடியே ஆட்டோவில் மீண்டும் ஏறிக் கொண்டான்.

அந்தப் பெண்கள், ஆட்டோவுக்குள் கால் கைகளை விரித்துப் போட்டுக் கொண்டு அடாவடியாகக் கிடந்த கான்ஸ்டபிள்களைப் பார்த்தார்கள். டயர்கள் வெடிக்கும்படியாய், அவர்கள் உடம்புகளும் வெடிப்பது போல் தோன்றின. ஆனால் முன் இருக்கையிலோ

அன்றையப் பிழைப்பு போலீஸ்தனமாகப் போய்விட்டதே என்று அம்பேலாய் உட்கார்ந்திருந்த ஒடிசல் டிரைவரை, கோபங் கோபமாய் பார்த்து, அதே பார்வையை பரிதாபமாய் முடித்தார்கள். இதற்குள் ஆட்டோவின் பின் இருக்கையில் இடம் கிடைக்காமல், டிரைவரின் இருக்கையை பார்த்துப் போன இளங்கோவை கோபமாகப் பார்த்தார்கள். அந்தப் பெண் குவியலில் ஒரு இளம் பெண்ணால் தாளமுடியவில்லை. தளதளப்பான உடம்புக்காரியான அவள் தகராறுக் குரலில் கேட்டாள் :

"நாங்க என்ன ஆடா மாடா? நீ பாட்டுக்கு இறங்றே... நீபாட்டுக்கு பார்க்கிற? ஒரு மரியாதிக்குக் கூட இன்னுதுக்காகப் பார்த்தேன்னு சொல்லப்படாதா? இன்னாயா நாயம்? கூலிக்காரிங்கன்னா திருடிங்கனு நெனைப்பா? இந்த அடாவுடிக் காலம் ரொம்ப நாளைக்கு போகாதையா... சாரத்த கழற்றுரது மாதிரி இந்த மட்டுமரியாதி இல்லாத அம்போக்குத்தனனத்த கழற்றுர காலமும் வருமுய்யா."

இளங்கோ... 'பே' என்று விழித்த போது, ஒரு போலீஸ்காரர் அவனை உள்ளே பிடித்து இழுத்துப் போட்டுவிட்டு, டிரைவரைப் பார்த்து கையை ஆட்டினார்.

ஆட்டோ பறந்தது.

பிரதானச் சாலை, பிரதானச் சாலையில் இரண்டாவது தெரு, இரண்டாவது தெருவின் முதலாவது குறுக்குத் தெரு என்பது போன்ற புரியாத பெயர் கொண்ட சாலைகள் வழியாய் ஓடி ஓடி, இறுதியில், சந்தடி மிக்க ஒரு தெருவில் போய் நின்றது, அந்தக் காவலர்கள் இளங்கோவுடன் சேர்ந்து இறங்கினார்கள். பக்கத்தில் ஒரு தேநீர் கடை... அதன் வாசலில் போய் நின்று கொண்டு அங்கே இருந்தவர்களை ஒரே பார்வையாய்ப் பார்த்து மிரட்டுவது போல் கேட்டார்கள் :

"இந்தப் பக்கமா எவளாவது ஒருத்தி கோணி மூட்டையோட போனாளா? சொல்லுங்கப்பா... துரமாரே."

எல்லோரும் முகங்களை கேளாக் காதுகளோடு, திரும்பிக் கொண்டபோது, ஒரே ஒரு ஒல்லி மனிதர், ‘ஓடக்கு’ப் போன்ற ஜிப்பாக்காரர் எதிர்க் கேள்வி போட்டார் :

“கையில் இரும்புத்தடி வச்சிருந்தவளா? கழுத்துல மச்சமா? முதுகில கோணி மூட்டையா?”

“ஆமா ஆமா...”

“இந்தக் கடையில இஸ்ட்ராங்கா டீ போடச் சொல்லி குடிச்சிட்டு, இப்போதான் அதோ அந்த இரும்புக் கடைக்குள்ள போனாள்.”

காவலர்களில் ஒருவர், கடைக்காரரை அதட்டினார் :

“ஏண்டா டேய், உன் கடையிலேயே டீ குடிச்சிட்டுப் போயிருக்காள்; நீ பேமாணி மாதிரி பேசாம இருக்கே... கடைய இழுத்து மூடணுமா?”

அவர்களின் வேகத்தைப் பார்த்து உற்சாகப்பட்ட இளங்கோ, சிறிது நேரம் பேசாமல் இருந்துவிட்டு, பிறகு அவர்கள், பேசாமல் நிற்பதைப் பார்த்து விட்டு அவசர அவசரமாய் பேசினான்:

“வாங்க போகலாம் சார். அந்த கடைக்குள் போய் அவளைப் பிடிக்கலாம் சார்.”

“அவசரப்படாத கண்ணு; எங்களுக்குத் தெரியும்.”

அவன் எவ்வளவுக்கெவ்வளவு வேகப்பட்டானோ, போலீஸ்காரர்கள் அவ்வளவுக்கவ்வளவு நிதானப்பட்டார்கள். நேற்று முழுவதும் ஒரு விஐபிக்கு ‘பாரா’ போனதால், பட்டினி கிடக்கும் வயிறுகளை, ரொட்டிகளாலும், மசால் வடைகளாலும் நிரப்பி விட்டு, இளங்கோவை அர்த்தத்தோடு பார்த்தார்கள். அவன் பைக்குள் இருந்ததை தேனீர் கடைக்காரரின் கைக்குள் வைத்துவிட்டு, அவர்களை அவசர அவசரமாய் பார்த்தபோது, ஒரு போலீஸ்காரர் அந்த இரும்புக் கடையை நோக்கி நின்ற

ஆட்டோவில் துணி கட்டப்பட்ட மீட்டரை தூக்கிலூரிந்து கொண்டிருந்த டிரைவருக்கு ஆணையிட்டார் :

"இந்தாப்பா... வண்டிய திருப்பு."

இளங்கோ, பதறியடித்துச் சொன்னான் :

"சார்... சார்... அந்த இரும்புக் கடையில் போய்..."

"அவளை எப்போ எப்படி மடக்கணும்னு எங்களுக்குத் தெரியும். ஒரு பொம்மனாட்டிய மடக்கத் தெரியல... பெரிசா பேசற பாரு. எதுக்கும் சாயங்காலமா ஸ்டேஷனுக்கு வந்து ஒரு கம்ப்ளைன்ட் கொடு. நீங்க கற்பழிக்கப் போனதா அவள், எதிர் புகார்கூட கொடுப்பாள். நீங்க அதுக்கும் தயாராய் இருக்கணும். ஓகே... ஈவினிங் வாங்க. ஆட்டோ சார்ஜ்க்கு டிரைவர் கிட்ட காசு கொடுத்திடறீங்களா?"

ஆட்டோ டிரைவர் இளங்கோவை 'பொருள்'படப் பார்த்தான். இளங்கோவும், இவனுக்கு நான் எதுக்குக் காசு கொடுக்கணும் என்று சொல்லப் போனான். பிறகு 'கற்பழிப்பு, பலாத்காரம்' போன்ற பயங்கரவாத வார்த்தைகளை வீசிப்போட்ட காவலர்கள் உருட்டிய கண்களையும் பார்த்தான். ஓசைப்படாமல் பேண்ட் பைக்குள் துழாவி மூன்று பத்து ரூபாய் நோட்டுகளை வலதுகையின் முகப்பிற்குக் கொண்டு வந்து, டிரைவரிடம் நீட்டப் போனபோது, ஒரு காவலர் அதைப் பறித்துக் கொண்டார். உடனடியாக அந்த ஆட்டோ, இளங்கோ இல்லாமலே இரும்புக் கடைக்கு எதிர்த் திசையில், அந்தக் கடைக்குப் பயந்து ஓடுவது போல் ஓடியது.

தேநீர் கடைக்குள் இருந்த அந்த ஒல்லி ஜிப்பாக்காரர் இப்போது உரக்கப் பேசினார் :

"சூரப்புலிங்க மாதிரி நம்மள மிரட்டுற மாதிரி அதட்டினாங்க. ஆனால், அந்தப் பொண்ணு அதோ அந்த 'இரும்பு' கடைக்குள்ளே போயிட்டான்னு தெரிஞ்சதும் சப்புன்னு அடங்கிட்டாங்க. ஏழைங்க கிட்ட நாகப்பாம்பா சீறுறது; இருக்கப்பட்டவங்கக் கிட்ட பெட்டிப் பாம்பா அடங்கறது. இதுதான் போலீஸ்ன்னு ஆகிப்போச்சு."

வேறு மாதிரியான சந்தர்ப்பங்களில் அந்தப் பேச்சை ரசித்துக் கேட்கும் இளங்கோ, இப்போது தலை குனிந்தபடியே வீட்டுப் பக்கமாக நடந்தான். அவள் வேறு வழியாய் போயிருப்பாள் என்று நெஞ்சுக்குப் பொய் சாட்சி சொல்லிவிட்டு வீட்டைப் பார்த்து நடந்தான். வீட்டுக்கும் போய் விட்டான்.

கிராமத்தில் நாட்டாண்மை குடும்பத்தில் பிறந்த அம்மாவின் ஆதிக்க ரத்தம் இப்போது அழுத்தமாகி, அவனுக்கு திட்டு வாங்கிக் கொடுத்தது.

"ஏண்டா, ஒரு சின்னப் பொண்ணுகிட்ட அடிவாங்கிகிட்டு வந்து நிக்கிறியே... இந்த ஒடம்ப வச்சிக்கிட்டு என்னடா செய்யப்போற? எங்கடா போற?"

இளங்கோ, ஒரு வைராக்கியமாய் தெருவில் நடந்தான்.

## 4

பல்லவ பஸ்களின் முன்னால் விழப்போகிறவன்போல் குவிந்து நடந்து, மல்லாக்கச் சாயப்போகிறவன் போல் வளைந்து நடந்து, இளங்கோ எங்கெல்லாமோ நடந்தான். இறுதியில் தனக்கே தெரியாமல் கடற்கரை மண்ணில் கால் வைத்தான்.

இளங்கோ, அலையடித்த கடல் நீர் முன்னால் நின்றான். பிறகு, அங்கே உட்கார்ந்தபடி, கைகள் இரண்டையும் பின்னால் ஊன்றி, கால்களை அலை படும்படி முன்னால் நீட்டிக் கொண்டு பின்பக்கமாய் சாய்ந்தான்.

"இன்னா சாமி, ஆகாயம் இடிஞ்சுட்டா? பூமி நொறுங்கிட்டா? ஏன் இப்படி கீற? ஆமா... நான் கேள்விப்பட்டது நிசமா? ஒரு அறியாத பொண்ணு உன்ன கைவெச்சுட்டாளாமே?"

இளங்கோ, ஒரு பக்கமாய் திரும்பி, முனுசாமியைப் பார்த்தான். அவனுக்கு முப்பது வயதிருக்கும். அம்பது வயதைக்காட்டும் ஒடிந்த குரல்; குச்சி மாதிரியான உடம்பு. இடுக்கிப் பார்க்கும் கண்கள்... இளங்கோ பக்கத்தில் அவன் உட்கார்ந்தான்.

"இன்னா சாமி! இன்னா நடந்தது சாமி? நான் இப்ப இன்னா செய்யணும்னு சொல்லு. அவன் தலையை வெட்டி ஒன் காலுல வைக்கணுமா? வெட்டிட்டு வான்னு சொல்லு, கட்டிட்டு வரேன்."

இளங்கோ, முனுசாமியை தெய்வத்தைப் பார்ப்பதுபோல் பார்த்தான். அவன் தோளிலே கைபோட்டான். மனதில் இருந்ததை கொட்டிப் போட்டான்.

"முனுசாமி! முனுசாமி! அவனை எப்படியும் பழிக்குப் பழி வாங்கியாகணும்; அப்பதான் எங்கம்மா மனசு குளுரும். என் மனது ஆறும்."

"கவலைய விடு சாரே, அத என் பொறுப்புல விடு. அவன் இருக்குற இடமும் எனிக்கி தெரியும்.

"தெரியுமுன்னா காட்டு. அவன் கழுத்த வெட்டி அம்மா காலுல வைக்கணும்."

"அப்படிச் சொல்லாத சார், போலீஸ் எதுக்கு இருக்கு? அவங்ககிட்ட ஒப்படைக்கணும்."

"நீ வேற. போலீஸ் காலுல விழுறத விட, அவன் காலுலயே விழுந்திடலாம்."

"சும்மா சொதப்பாத சாரே... போலீஸ்காரங்களுக்கு வெள்ளைச் சட்டகாரங்கன்னா, ஒதறல்; எப்பவுமே போலீஸ் காரங்ககிட்ட உத்தரவு போடற மாதிரி நீ பேசணும். படிச்சவன்

அப்படிப் பேசினா, அவனுக பல்லக் காட்டுவானுக. என்ன மாதிரி எளியவங்க பேசினா பல்ல ஒடைப்பாங்க."

"சரி அவங்க கிடக்கட்டும், இப்போ அவள எப்படி பழிக்குப்பழி வாங்குறது? எழுந்திரு அவள பிடிக்கப் போகலாம்."

"போகலாம்தான்... ஆனா அதுல ஒரு சிக்கலு. ஆமா சாரே... அவளோ, கள்ளச்சாராயக்காரி. சாராயம் குடிக்கிற சாக்குலதான் அவகிட்ட போக முடியும். ஒரு டம்ளர் 'கஞ்சி' மூணு ரூபா. மூணு டம்ளர் போட்டாத்தான் பேசறது பத்தி யோசிப்பா."

"கஞ்சின்னா என்னப்பா?"

"அதெல்லாம் நீ கண்டுக்கப்படாது. அது சல்பேட்டா சாராயத்துலேயே ஒரு தனி ரகம். மூணு டம்ளர் 15 ரூபா. இன்னா சொல்றே?"

இளங்கோ, பைக்குள் இருந்த ஒரேயொரு இருபது ரூபாய் நோட்டை முனுசாமியின் இடுப்புக்குள் செருகி விட்டு, அவனைப் போகும்படி தள்ளி விட்டான். முனுசாமி அவனுக்குப் பிரியாவிடை கொடுப்பவன் போல் போனான்.

முனுசாமி, அந்த மாதா கோவில் ஆலய வளாகத்திற்குள் போவதை, இளங்கோ தொலைவில் நின்று பார்த்தான். ஐந்து நிமிட அவகாசத்திற்குப் பிறகு அங்கே நெருங்கி நெருங்கிப் போனான். அந்த வளாக வாசல் பகுதிக்குள் ஒரு ஓரமாய் நின்றபடி உள்ளே அவன் எட்டிப் பார்த்தபோது -

அந்த வளாகத்தின் கிழக்குப் பகுதியில் மாதா கோவில்; மேரி மாதா குழந்தை ஏசுவோடு, புன்முறுவலோடு நிற்கிறாள். வருத்தப்பட்டு பாரம் சுமக்காதவர்கள், பட்டுப் புடவைகளோடும், கழுத்துத் தாங்க முடியாத நகைகளோடும், சபாரி உடைகளோடும் போய்க் கொண்டிருக்கிறார்கள். காரிலிருந்து இறங்கிய

கண்ணியவான்கள் மனைவிகளை கரம் கோத்து நடந்து கொண்டிருக்கிறார்கள்.

அந்த வளாகத்தின் இன்னொரு பகுதி; கல்லும் மண்ணும் கொண்ட கட்டாந்தரை. அங்கே மரித்தெழுந்தது போல், எழுந்த சுவரோடு சுவராக பல்வேறு வகை பிச்சைக்காரர்கள் மண்டியிட்டும், சம்மணம் போட்டும், குத்துக்காலிட்டும், அப்படிப் போடுவதற்கு முழுக்கால்கள் இல்லாமலும் கிடந்தார்கள். ஒவ்வொருத்தர் முன்னால் ஏதோ ஒரு துண்டு, ஏதோ ஒரு தட்டு.

சொர்க்கமும், நரகமும் அருகருகே இருப்பது போன்ற அந்த வளாகத்திற்குள், எட்டிப் பார்த்த இளங்கோ, வறுமையும், வெறுமையும் கூடி கோர தாண்டவம் ஆடும் அந்தக் கட்டாந்தரைப் பகுதியை உற்றுப் பார்த்தான்.

திடீரென்று பார்த்துப் பார்த்துப் பூத்துப்போன அவன் கண்கள் பிரகாசித்தன. சுரக்காய் குடுக்கைபோல் ஒடுங்கிய சந்திற்கு அப்பால், தென்பட்ட குடிசைப் பகுதியிலிருந்து, முனுசாமி தள்ளாடித் தள்ளாடி வந்து கொண்டிருந்தான். அவனைப் பிடித்தபடியும், அதேசமயம் அவன் தன்மேல் விழும்போது தள்ளியபடியும், சரோசா வந்து கொண்டிருந்தாள். அவள் இடுப்பில் ஒரு சுருக்குப் பை தொங்கியது. அதிலிருந்த ரூபாய் நோட்டுகளை எண்ணியபடியே முனுசாமியை நடத்திக் கொண்டிருந்தாள். அவன் தடுமாறி தரையில் விழுந்தபோது, அவனை அங்கேயே போட்டுவிட்டு வெளியே வந்தாள். இளங்கோ ஒதுங்கிக் கொண்டான்.

சரோசா, பஸ் நிலையப் பின்பக்கத்து மதில்மேல் இருந்த ஒரு டீக்கடையில் இரண்டு பன்களை வாங்கி ஒரு கையில் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையில் ஒரு கப் டீ டம்ளரை ஏந்திக்கொண்டு திரும்பிப் போனாள். இளங்கோ சுவரில் முகம் போட்டு அவளுக்கு முதுகு காட்டினான். ஏதோ ஒரு பயம், ஏதோ

ஒரு உதறல்; அவனுக்கே அவன் போக்கு வெட்கமாக இருந்தது.

இதற்குள், சரோசா அவன் இருப்பது தெரியாமல், அந்த வளாகத்திற்குள் நடந்தாள். அந்த கட்டாந்தரைப் பகுதிக்குப்போய் அந்த வெயிலிலும் கம்பளியால் மூடி, அப்படியும் குளிர் தாங்க முடியாமல் ஆடிக்கொண்டிருந்த ஒரு முதியவரின் முன் குத்துக்காலிட்டாள். அவருக்கு பிறப்பினால், எழுபது வயதென்றால், வறுமையோ அல்லது வெறுமையோ மேலும் இருபது ஆண்டுகளைக் கூட்டிவிட்டதைக் காட்டுவது போல் கால்கள் கைகளைப் போலவே இருந்தன. முகத்துக்கும், மார்புக்கும் இடைவெளி தெரியவில்லை. கூனிக்குறுகி கண் இழந்தவர்போல் அங்குமிங்குமாய் கைகளைத் துழாவிய அவர் வாயில், அவள் டீயை ஊற்றினாள். பிறகு கையில் இருந்த ஒரு 'பன்னை' பிய்த்துப் பிய்த்து தேநீரில் தோய்த்துத் தோய்த்து, ஈரம் சொட்டச் சொட்ட அவரது வாய்க்குள் திணித்தாள். சற்றுத் தொலைவில் 'தாயப்பாஸ்' ஆடிக்கொண்டிருந்த அவளது தோஸ்துகள் - "இன்னாமே யாரோ ஒருத்தன அடிச்சுப் போட்டுட்டு வந்தியாமே, அந்த பொட்டப்பயல் ஒன்னை திருப்பி அடிக்கலியா?" என்றனர்.

வாசல் பக்கம் பட்டும் படாமலும் பார்த்துக் கொண்டு நின்ற இளங்கோவிற்கு, தன்னை ஆண் பயல் என்று நிரூபிக்க வேண்டும் போல் இருந்தது. மீண்டும் ரோஷம் வந்தது. அதற்கு வடிகாலாக, அந்தச் சமயம் பார்த்து அந்தப் பக்கமாய் ஒரு போலீஸ்காரர் வந்தார். அவனுக்கு ஏற்றாற் போல் மணி கேட்டார். அவன் "ஐந்து நாற்பது" என்று சொல்லிவிட்டு, பேச்சை ஆரம்பித்தான். முனுசாமி சொன்னது போல் சற்று ஆணித்தரமாகப் பேசினான்.

"சார், இதுக்குள்ளே ஒரு கிரிமினல் இருக்காள்... எங்கம்மாவை கொலை செய்ய 'அட்டம்ட்' செய்தவள். எதிர் வீட்டுக்குள் போய் எதையோ திருடியிருக்காள். தட்டிக்கேட்ட என் 'மதரின்' காலை உடைச்சிருக்காள். ஐ.ஏ.எஸ். அதிகாரிங்க அதிகமாக இருக்கிற எங்க ஏரியாவிலேயே பிரிட்ஜ், டி.வி.

காணாமல் போகுது. ஒரு ஆறு வயசுப் பையன்கூட காணல. இவளே இதுக்குக் காரணமுன்னு நினைக்கிறேன். நீங்க இப்போ இவள பிடிச்சு ஸ்டேஷனுக்குக் கொண்டு போகணும்."

"நான் 'பீட்டுக்கு' வந்திருக்கேன். எல் அண்ட் ஓ கவனிக்கிறவன்; அதாவது சட்டம் - ஒழுங்கை கவனிக்கிறதுதான் என் வேல. இது கிரைம்; அதனாலதான் யோசிக்கிறேன்."

"ஒரு குற்றவாளி கண்ணில் படும்போது பொதுமக்களில் ஒருத்தர்கூட போலீசில் சொல்லாட்டால், அதுவே குற்றமுன்னு சட்டம் சொல்லுது. நீங்க ஒரு போலீஸ்காரர், அப்புறம் உங்க இஷ்டம்."

அந்த கான்ஸ்டபிள் யோசித்தார். இவன் முகத்தில் ஐ.ஏ.எஸ். அதிகாரிக்குரிய களையோ அல்லது திமிரோ இல்லை. ஆனாலும் இவன் அப்படிப்பட்ட ஒரு ஐ.ஏ.எஸ்.ஸின் ஒரு அசட்டுப் பையனாகக்கூட இருக்கலாம். எதுக்கு வம்பு, அவர்? அவன், தோளில் தோழமையோடு கை போட்டு "அவளை காட்டுங்க சார்" என்று கூட்டிப் போனார்.

இருவரும் போய் அந்தப் பிச்சைக்காரப் பகுதியில் நின்றனர். அவள், கையில் இன்னும் இருந்த அந்த மிச்ச மீதிப் பன்னை, பிய்த்துப் பிய்த்து அவருக்கு ஊட்டிக் கொண்டிருந்தாள்.

இளங்கோ, போலீஸ்காரரை அவசரப்படுத்தினான். அவர் தனது விருப்பத்திற்கு விரோதமாகவே அவளை லத்திக் கம்பால் தட்டி ஆணையிட்டார் :

"ஏய்... எழுந்திரு, ஒன் பேரென்ன?"

நைனாவின் கையிலிருந்து விடுபட்டு, தலை நிமிர்ந்த சரோசா, அந்தப் புதிய போலீஸ்காரரைப் பார்த்துச் சிரித்தாள்.

பிறகு, "பேருக்கு ஏற்றபடிதான் அரஸ்ட் பண்ணுவீங்களா" என்று கேட்டாள். போலீஸ்காரருக்கு இப்போது கோபம் வந்தது. லத்திக் கம்பை ஓங்கியபடி நின்றார். அவள் எழுந்தாள்; அப்போதுதான், இளங்கோவைப் பார்த்தாள். அவனை ஏற, இறங்கப் பார்த்துவிட்டு, "இந்த கேஸ் யாரு சாரே, இதுகூட சேர்ந்து நான் எந்த தப்புத் தண்டாவும் செய்யலயே. இது பிளேடா, இல்ல பிச்சுவாவா" என்றாள்.

இளங்கோ கோபப்படுவதற்கு முன்பே போலீஸ்காரர் பல்லைக் கடித்தார்.

"இந்தாம்மா! மரியாதையா ஸ்டேஷனுக்கு நட. நான் மனுஷனா இருக்கிறது உன் பொறுப்பு."

சுவரில் சாய்ந்து கிடந்த அந்தக் கிழவர், தட்டுத்தடுமாறி எழப்போனார். பிறகு விழப் போனார். பின்னர், கை எழும்பியது போல் கால் எழும்பாத நிலையில், கண்ணுக்குத் தெரியாத அந்த போலீஸ்காரருக்கு ஒரு கும்பிடு போட்டபடியே, குழைந்தார்.

"போன மாசம்தானே, உங்க ஆளுங்க ஒரு கேசுக்காக கூப்பிட்டாங்க, இவளும் அவங்களுக்காக, செய்யாத தப்ப செய்ததா சொல்லி அபராதம் கட்டினாள். இது தாங்காது சாமி."

"எது செய்தாலும் சட்டப்படிதான் செய்வோம் பெரியவரே. உம், நடம்மா."

சரோசா, இளங்கோவிற்கும் அந்தப் போலீஸ்காரருக்கும் இடையே கம்பீரமாய் நின்றாள். இதற்குள் தாயப்பாஸ் விளையாடிய அவளது தோஸ்துகள் "சாரு புட்சு போல. நீ போமே, நாங்க பின்னால வரோம்" என்று சொல்லிவிட்டு, மீண்டும் தாயப்பாஸ் ஆடினார்கள். அவள் ஆணையிடுவது போல் பேசினாள் :

"நாய்னா, ஜாக்கிரதோ. இந்த குயந்த பையன் இன்னாதான் செய்வான்னு பார்த்துட்டு வர்றேன். யோவ், பொட்டை! நடய்யா!"

5

அந்தப் போலீஸ்காரரும், இந்த இளங்கோவும், சரோசாவும் சேர்ந்தாற்போல், மாதா கோவில் வளாகத்திற்கு வெளியே வந்தார்கள்.

போலீஸ்காரருக்கும் இளங்கோவுக்கும் மத்தியில் வந்த சரோசா, தலைமுடியை விரித்துப்போட்டு, அதுவே கழுத்துக்கு ஒரு ஸ்கிரீன் மாதிரி காட்ட, அங்குமிங்குமாய் பார்த்தாள். ஒரு மேட்டில், இரண்டு பேர் சவலைக் குழந்தை மாதிரி இருந்த கரும்பை துவம்சம் செய்து கொண்டிருந்தார்கள். அதற்கு அருகே கரும்புச்சாறு குவளை ஒரு மேஜையில் இருந்தது. ஈக்கள் மொய்த்து, அந்தச் சாறு தன்னை ஒரு நோய்த்திரவமாய் பிரகடனப்படுத்திக் கொண்டிருந்தது. காக்கிச் சட்டையில் மூன்று கோடுகள்போட்ட ஒரு போலீஸ்காரரும், சிவில் உடையில் சிவப்புக்கோடு சட்டை போட்டிருந்த இன்னொருவரும் கரும்புக்காரரிடம் எதையோ கிசுகிசுத்தார்கள். போலீஸ்காரர், லத்திக் கம்பை ஊன்றிக் கொண்டு கம்பீரமாக நின்றபோது, அந்தக் கரும்பு மனிதர் இரண்டு ஐந்து ரூபாய் நோட்டுகளை எடுத்து அவரிடம் நீட்டினார். அவரோ அதை கண்ணால் பார்க்க விரும்பாதது போல் கண்களை மூடிக்கொண்டார். இதற்குள் சிவில் ஆசாமி, அந்த இரண்டு நோட்டுகளையும் பறித்துக் கொண்டு யூனிபாரம் ஆசாமியோடு, ஒரு பேன்சிக் கடையை பார்த்துப் போய்க் கொண்டிருந்தார்.

சரோசா, தன் பக்கம் நின்ற போலீஸ்காரரைப் பார்த்துக் கேட்டாள்:

"ஏன் சாரே அதோ மாமூல வாங்குறாரே, அவரை ஒன்னால அரஸ்ட் பண்ண முடியுமா?"

சரோசாவின் பக்கத்தில் நின்ற போலீஸ்காரர் சற்றுத் தொலைவில் ஒரு சீப்பை எடுத்து தலைவாரியபடியே, 'சீப்பாக' நடந்து கொள்ளும் தனது போலீஸ் சகாவையே வெறித்துப் பார்த்தார். அவருக்கு, தனது யூனிபாரமே கழன்று அம்மணமாக நிற்பது போல் தோன்றியது. 'நான் அப்படிப்பட்டவன் இல்லை' என்று இவளிடம் எப்படிச் சொல்வது? இதுவரை ஒரு டீ கடையில்கூட, ஓசிடீ, குடித்ததில்லை என்பதையும், இதனாலேயே பல தண்ணி இல்லாக் காடுகளை ஓசியாகப் பார்க்கும் நிலை ஏற்பட்டதையும், பதவி உயர்வு பறிபோனதையும், இவளிடம் எப்படிச் சொல்வது? சரோசா, அவரது முகச்சுளிப்பைப் பார்த்துவிட்டு சமாளித்தாள்.

"அந்த போலீஸ் அண்ணாத்தைய நான் தப்பா சொன்னதா நினைக்காதே சாரே. நாங்கோளும், நீங்கோளும் தோஸ்துங்க. சாரு வேலைக்குப் புதுசோ?"

"இல்ல, இல்ல, உனக்குத்தான் புதுசு."

அந்தப் போலீஸ்காரர் பேச்சோடு பேச்சாக, அவளை முறைத்துப் பார்த்துவிட்டு, அந்த வழியாய் போன ஒரு ஆட்டோ ரிக்ஷாவை கைதட்டிக் கூப்பிட்டார். அந்த ஆட்டோ டிரைவர் யானை வாயில் பட்ட கரும்பும், போலீசிடம் சிக்கிய ஆட்டோவும் ஒன்று என்பது போல் கண்டுக்காமல் ஆட்டோவை ஒடித்து முறித்து வளைத்தார். உடனே இவர் விசிலடித்தார். பயந்துபோன ஆட்டோக்காரர், பம்மிப்பம்மி வந்து ஆட்டோவை அவர் கால் அருகே, அதன் முனைப்பைக் காட்டி நிறுத்தினார். அந்தப் போலீஸ்காரர் உடனடியாய்க் கேட்டார்:

"இந்தாப்பா, பக்கத்து போலீஸ் ஸ்டேஷன்ல இவங்களை விட்டுட்டு பழையபடியும் இங்கே என்னைக் கொண்டுவந்து விடணும். எவ்வளவு கேக்கிற?"

"சார்... சார், கிண்டல் பண்ணாதீங்க சார். நீங்க கைதட்டிக் கூப்பிட்டது நிசமாவே என் காதுல விழல சார்."

போலீஸ்காரர் ஆட்டோக்காரரை கண்டுக்காமல், இளங்கோவிடம் இப்படிச் சொன்னார்:

"இந்தாங்க மிஸ்டர்! என்னோட டூட்டி உங்களை நடக்கவச்சு கூட்டிப்போறதுதான். உங்களுக்கு இஷ்டம் இருந்தால் பத்து ரூபாய் அவர்கிட்ட கொடுங்க, ஆட்டோவில் போகலாம்."

இளங்கோ தலையாட்டினான். பைக்குள் இருந்த இருபது ரூபாய் முனுசாமியின் வயிற்றுக்குள் சாராயக் கஞ்சியாகப் போனது அவனுக்கு நினைவுக்கு வந்தது. ஆனாலும், அதே ஆட்டோவில் வீட்டுக்குப் போய் பணம் கொடுத்துவிடலாம்.

அந்தப் போலீஸ்காரரும், இளங்கோவும் அக்கம்பக்கம் பார்த்தபோது, சரோசா அந்த ஆட்டோவில் ஏறி ஜம்முன்னு குந்தினாள். இதற்குள் போலீஸ்காரரும் ஆட்டோவுக்குப் பின்புறமாய் நடந்து ஒரு ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு சரோசாவை ரைட் சைடில் நகரும்படி சைகை செய்துவிட்டு, இளங்கோவைப் பார்த்தார். அவன் சற்று தயங்கிவிட்டு அவர்கள் இருவருக்கும் மத்தியில் வந்து உட்காருவதற்கு யோசிப்பவன்போல் நின்றான். சரோசா அதட்டினாள்:

"யோவ் உன் பேரு இன்னாயா?"

"இளங்கோ."

"பேருல மட்டும் கொறச்சல் இல்ல. சீக்கிரமா வந்து குந்தேன்யா. உன்ன மாதிரி நான் என்ன வேலை வெட்டி இல்லாதவளா? நானு ரொம்ப பிஸி."

இளங்கோ, அவர்கள் இருவருக்கும் மத்தியில் உட்கார்ந்து கொண்டான். பிறகுதான், அவள் கேட்டதற்கு தன் பெயரைச் சொல்லி ஒரு உயர்நிலைப் பள்ளிக்கூட மாணவன் மாதிரி நடந்து கொண்டதற்கு அவமானப்பட்டவன் போல் முகத்தை உம்மணா மூஞ்சியாக்கினான். பெற்றெடுத்த அம்மா மீது பயங்கரமான கோபம். 'அதட்டி அதட்டியே என்ன ஆம்பளையா இல்லாம செஞ்சுட்டாங்க.'

ஆட்டோ, பாய்ந்து பறந்தது. இடையிலே ஒரு சைக்கிள். ஆட்டோ டிரைவர் போலீஸ் தைரியத்தில் கத்தினார் :

"ஏண்டா சோமாறி! பொறுக்கி! பொறம்போக்கு! இது என்ன உங்கப்பன் வீட்டு ரோடா? போலீஸ் சார் இருக்காரேன்னு பார்க்கிகேன்."

கிடா மீசை சைக்கிள்காரர், சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு விட்டு, ஆட்டோ டிரைவரை அடிப்பதற்காக லுங்கியை இறுக்கிக் கட்டப் போனார். பிறகு போலீஸ்காரர் அங்கு இருப்பதைப் பார்த்துவிட்டு, இறுக்கிய லுங்கியை அவிழ்த்துப் போட்டு விட்டு, ஏதோ அது தற்செயலாக அவிழ்ந்தது போலவும், அதை அவர் கட்டுவதற்காகத்தான் சைக்கிளை நிறுத்தியது போலவும், பாவலா செய்தார். உடனே ஆட்டோ டிரைவர் "இந்த ஆட்டோவுக்கு முதல் எதிரியே சைக்கிள்தான்" என்றார். சரோசா கத்தினாள்:

"யோவ் இளங்கோ, ஏன்யா என்மேல இப்படி ஒட்டிக்கிறே? நீ எப்பவுமே பொம்மனாட்டி பக்கத்துல குந்துனது இல்லியா? சார், 'இதை' ஒத்தியிருக்கச் சொல்லுங்கோ. கைய எங்கெல்லாமோ கொண்டு வருது."

இளங்கோ, இரண்டு தோள்களும் கிட்டத்தட்ட ஒன்றோடு ஒன்று வட்டம் போல் வளைந்து ஒன்றையொன்று பற்றிக் கொள்ளும்படி மார்பை குறுக்கி, கைகளை குறுக்காக மடித்து, கால்கள் இரண்டையும் பின்னி, கூனிக்குறுகிக் கிடந்தான்.

சரோசா, கன்னங்களை உப்ப வைத்துக் கொண்டாள். அவனைப் பார்த்துக் கண்களை உருட்டினாள். இளங்கோவிற்கு ஓடுகிற ஆட்டோவிலிருந்து கீழே குதித்து ஓடிவிடத் தோன்றியது. ஆனாலும் அந்தப் போலீஸ்காரர் அவளை அதட்டலாகப் பார்ப்பதுபோல் இருந்ததால், சிறிது, பயம் தெளிந்தது. என்றாலும் அவளோ அல்லது அந்தப் போலீஸ்காரரோ தனது குற்றச்சாட்டை பெரிதாக எடுத்துக் கொள்ளாததுபோல் தெரிந்ததால், அவனுக்கு மனம் வலித்தது. இது போதாது என்று அந்த ஆட்டோ டிரைவர் போலீஸ்காரர் இருக்கிற தைரியத்தில் எதிரே 'நான்வாரேன்' என்பது மாதிரி லைட்டுப்போட்டுக் காட்டிய ஒரு காரை மோதப்போவது போல் ஓட்டி, ஒரு டிரக் வண்டியை உரசி, ஒரு சைக்கிளை வழி மறித்து தக்காரும் மிக்காரும் இல்லாமல் காவல் நிலையத்திற்குள் ஓடிப்போனது.

அந்தப் போலீஸ்காரர், இளங்கோவையும், சரோசாவையும் கைக்கு ஒரு பக்கமாய் வைத்துக் கொண்டு, நான்கு படிகள் ஏறி, இரும்புக்கிராதி கதவை அங்குமிமாய் தள்ளிவிட்டு, இடது பக்கமாய் போனார். அதன் முதல் அறையில் நுழைந்து ஒரு சல்யூட் அடித்தார். எதிர் நாற்காலியில் உடம்பே பற்றி எரிவது போல் புகை பிடித்துக் கொண்டிருந்த சப்-இன்ஸ்பெக்டர், அந்த சல்யூட்டை சிகரெட்டை ஆட்டி அங்கீகரித்து விட்டு அவளைப் பார்த்தார்.

"அட சரோசாவா! எப்படி இருக்கே? உன்னோட லேட்டஸ்ட் வம்பு என்ன? - அப்புறம் உங்க ஏரியாவில நெட்டி கோஷ்டியும், பறட்டை கோஷ்டியும் எதுக்காக அப்படி அடிச்சுக்கிறாங்க? விவகாரம் கமிஷனர் வரைக்கும் போயிட்டுது. நீ... அவங்களுக்குக் கொஞ்சம் சொல்லப் படாதா?"

சரோசா, இளங்கோவை ஓரக்கண்ணால் பார்த்தாள். கூட வந்த போலீஸ்காரரையும் ஓரங்கட்டிப் பார்த்தாள். பிறகு, பேசியவரின் முன்னால் இருந்த மேசை மேல் இரண்டு கைகளையும் அட்டகாசமாகப் போட்டபடியே பதில் அளித்தாள்:

"அத ஏன் கேக்கிற சாரே... நாறிப் போச்சு நாறி. அதுவும் அந்த பறட்டை தலையன் வந்தாப்பல."

"விபரமாத்தான் சொல்வேன்."

சரோசா கதை கதையாய் சொல்லிக் கொண்டிருந்தாள். இளங்கோவிற்கு கால்கள் வேர்த்தன. கைகள் நடுங்கின. இதற்குள் அவர்களைக் கூட்டி வந்த போலீஸ்காரர் அவசர அவசரமாய் இடை மறித்துப் பேசினார் :

"சார், இந்தப் பொண்ணு, இவரோட அம்மாவ அடிச்சப் போட்டுட்டு வந்திருக்கா. என்னவ்லாமோ திருடியிருக்கிறாள். இவரோட ஏரியாவில், ஒரு குழந்தையக்கூடக் காணுமாம். நிறைய காஸ்ட்லி அயிட்டம், திருட்டுப் போயிருக்காம். இந்தப் பொண்ணு இன்னிக்கி அந்த ஏரியாவில அடாவடியா நடந்ததால, இதை சஸ்பெக்ட்டா கூட்டி வந்திருக்கேன்."

"நீ லா அண்ட் ஆர்டர் செக்ஷன்... இது கிரைம், எல் அண்ட் ஓ-விற்கும், இதுக்கும் என்னய்யா சம்பந்தம்?"

"இருக்கு சார், சம்பந்தம் இருக்கு சார். இவரோட ஏரியாவில போகிற திருட்டுக்களை நாம் சீரியஸ்ஸா எடுக்கலைன்னு, இவங்க ஏரியாக்காரங்க, நம்ம போலீஸ் ஸ்டேஷன் முன்னால மறியல் செய்தால் அது லா அண்ட் ஆர்டர்தானே. அப்படியாகாமல் தடுக்கத்தான், இப்பவே ஆக்ஷன் எடுத்தேன்."

"ஓஹோ... மூக்கை பிடறி வழியாத் தொடுறியா? இந்தாப்பா ராமசாமி, எல் அண்ட் ஓ சப்-இன்ஸ்பெக்டர நான் கேட்டுக்கிட்டதாச் சொல்லி கொஞ்சம் கூட்டிக்கிட்டு வா! ஏன் சரோசா, உன்னால கலாட்டா பண்ணாம இருக்க முடியாதா? என்ன இதெல்லாம்?"

"பெரிசா ஒண்ணுமில்ல சாரே, இந்தப் பிள்ளாண்டான், நாலு நாளா ஏன் பின்னாடியே சுத்திக்கினு கீறான். நானும் கண்டுக்கல. இவன் ஏரியா பக்கம் கிருஷ்ணாயில் வாங்கப் போனேன். இவன்

இன்னாடான்னா ஸைட் அடிக்கிறான். நான் கண்டபடி திட்டுனேன். போலீஸ்ல கம்ப்ளைன்ட் கொடுக்கப்போறதா கத்துனேன். அதுக்காங்காட்டியும் இவன் முந்திக்கிறான். அய்ய... இந்த ஆட்டோவில் இவன் என்ன படுத்தின ரோதன இருக்கே, அத சொல்றதுக்கே வெக்காமாகீது சாரே."

"சார் சார்! இது அக்கிரமம் சார். எனக்கு இந்த மாதிரியெல்லாம் பழக்கமில்லை சார்."

"வெயிட் மிஸ்டர் வெயிட்... ஒரு பொண்ணு மானத்துக்கு ஏற்படுகிற களங்கத்த பொதுவா சொல்ல மாட்டாள். அதையும் மீறி அவ சொல்றான்னா, அதுல ஏதாவது இருக்கணும். ஒரு சீரியஸ் சமாச்சாரத்த நான் கேக்காமல் இருக்க முடியுமா? சரோசா அப்புறம் மேற்கொண்டு சொல்லு."

இந்த இடைவெளியில் மேற்கொண்டு என்ன பேசுவது என்று யோசித்து வைத்திருந்த சரோசா, கதையை தொடரப்போன போது, சட்டம் ஒழுங்கு பராமரிப்பு சப்-இன்ஸ்பெக்டர், அங்கே வந்தார். நேரடி நியமனக்காரர். எல்லா கான்ஸ்டபிள்களும் அயோக்கியர்கள் என்று நினைப்பவர். அவரிடம் கிரைம் சப்-இன்ஸ்பெக்டர் சொல்வதற்கு முன்பே அவரைக் கூட்டிவரப் போனவர் சொல்லிவிட்டதால், தன்னை விட பத்து வயது பெரிய அந்தப் போலீஸ்காரரைப் பார்த்துக் கத்தினார் :

"யோவ் திருமலையப்பா! பீச்சுக்கு டூட்டிபோட்டா இங்க எதுக்குய்யா வந்தே?"

"இந்த சஸ்பெக்ட கூட்டிக்கிட்டு வந்தேன் சார்."

"உன்னை பீச்சுலதான் டூட்டி போட்டேன். நீ ஏன் ஏரியாவிட்டுப் போறே? உனக்கு எதுக்குய்யா வம்பு? இந்நேரம் பீச்சுல ஒரு லா அண்ட் ஆர்டர் பிராப்ளம் ஏற்பட்டிருந்தா

யாருய்யா பொறுப்பு? ஏய்யா திமுறா பாக்கே? ஏ.சி. வரட்டும். உன்னமாதிரி ஆளுங்களை கொடுத்துட்டு சட்டம் அமைதி நல்லாயிலலன்னு சட்டம் பேசுறாரு சட்டம்."

திருமலையப்பன், அந்த சப்-இன்ஸ்பெக்டரை அடிக்கப் போவது போல் முறைத்தார். பிறகு அழப்போவது போல் பார்த்தார். கடந்த கால அனுபவங்களையும், குடும்ப நிலையையும் மனதிற்குள் வலுக்கட்டாயமாக நினைத்துக் கொண்டார். கோபம் வந்தால் பத்துவரை எண்ண வேண்டும் என்று ஒருவர் சொல்லிக்கொடுத்தபடி மனதிற்குள் எண்ணினார். எண்ணியதை இடையில் விட்டார். பிறகு அவர்களுக்கு விறைப்பாக ஒரு சல்யூட் அடிக்கும் சாக்கில், வலது புறங்கையால் கண்களைக் துடைத்துவிட்டு, வேகப்பட்டவர் போலவும், பாவப்பட்டவர் போலவும் வெளியேறினார்.

கிரைமும், லாவும் மணிக்கணக்கில் பேசப்போவது போல் சாவகாசமாகப் பேசிக் கொண்டிருந்த போது, சரோசா ஒரு பாட்டை முணுமுணுத்தபடி, அந்த அறைச்சுவரில் அப்பிக்கிடந்த துப்பாக்கிகளைப் பார்த்தாள். இளங்கோ, கடிகாரத்தையே மாறிமாறிப் பார்த்தான். இதை தற்செயலாகப் பார்த்த கிரைம் சப்-இன்ஸ்பெக்டர், "நீங்க ரெண்டு பேரும், வெளியில நில்லுங்க, கூப்பிட்டு அனுப்புறேன்" என்று சொல்லிவிட்டு, மீண்டும் பேச்சைத் தொடர்ந்தார்.

வெளியே வந்த இளங்கோவை, சரோசா கண்ணடித்துச் சிரித்தாள். அவன் ஒதுங்கிப் போய் ஒரு மரத்தோடு மரமாக நின்றான்.

அவளோ கீழே கிடந்த ஒரு பொடிக்கல்லை காலால் தட்டித்தட்டி, அது உருண்டு விழும் இடங்களைப் பார்த்து நிதானமாக நடந்தாள். ஒரு சமயம், அதே கல்லை காலால் இடறி அவன் கணுக்காலில் விழச் செய்தாள். இளங்கோ அப்படியும் அசையாது இருப்பதைப் பார்த்துவிட்டு, நாக்கைத் துருத்தி 'கொன்னுடுவேன்' என்பது மாதிரி கையை ஓங்கி அழகு

காட்டினாள். அவன் பதிலழுகுகாட்டாமல் சும்மா இருந்ததால் சலித்துப் போய் அவனைப் பார்த்து சிறிது நெருங்கி நேருக்கு நேராய் கேட்டாள்: "இந்தாப்பா, நானு இதோ அந்த கீரைக்காரம்மாவண்ட பேசிட்டு வாரேன். அதுக்குள்ள போலீஸ் கூப்டா ஒரு நட வந்து சொல்லு. பேஜாருபிடிச்ச பிள்ளாண்டாம்பா... இந்நேரம் ஒரு கிலோ இரும்பு கிடைச்சிருக்கும்."

இளங்கோ, முகத்தைத் திருப்பிக் கொண்டான். கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்த போது, அது நனைந்துவிட்டது. சரோசாவோ, அலுங்காமல் குலுங்காமல் போய்க்கொண்டிருந்தாள்.

இளங்கோ, அடிக்கடி கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே நின்றான். அரை மணி நேரம் கழித்து சரோசாவும் ஆற அமர வந்தாள். ஆடாமலே அடங்கிப்போன அவனைப் பார்த்து 'ரப்பாகச் சிரித்தாள். "இன்னுமா கூப்பிடல" என்று அவனிடமே சர்வசாதாரணமாகக் கேட்டாள். அவனோ, அவளைப் பார்க்காமல் அடிக்கடி கீழே தொங்கிய கையைத் தூக்காமலே கடிகாரத்தை குனிந்து பார்த்தான். இப்படிப் பல 'தலைக் குனிவுகள்!'

இளங்கோ பத்துத் தடவைக்கு மேல் கடிகாரத்தைப் பார்த்துவிட்டான். ஒரு தடவைக்கு பத்து நிமிடம் என்பது போல் நூறு நிமிடம் ஆகிவிட்டது. அவன் பொறுமை இழந்து உள்ளே போகப்போனபோது, இரண்டு சப்-இன்ஸ்பெக்டர்களும் வெளியே வந்தார்கள். இளங்கோ குறுக்கே போய் நின்றான். ஒருவர் அதட்டினார். இன்னொருவர் அந்த அதட்டலுக்கு அபிநயம் பிடிப்பவர் போல் தலையை மேலும்கீழும் ஆட்டினார்.

"என்ன மிஸ்டர் உன்னோட பெரிய தொல்லெ? அந்தப் பொண்ணு எப்படிப் பொறுமையா நிக்கறா பாரு. உனக்கு என்ன

கேடு? அவசரமாக வெளியில போறோம். வெயிட்... வந்து கவனிக்கிறேன்."

ஜீப்பில் சகாவுடன் ஏறிக்கொண்ட கிரைம் சப்-இன்ஸ்பெக்டர், துப்பாக்கியை சுண்டும் போது எப்படி விரலை இழுத்து விடுவாரோ, அப்படி அவனைப் பார்த்து விரலைச் சுண்டினார். இளங்கோ ஓடோடிப் போய் நின்றபோது-

"ஆல் ரைட்... நாளைக்குக் காலையில ஒன்பது மணிக்கு வந்திரு. வராமல் மட்டும் இருந்துடாதே. அந்தப் பொண்ணு சொல்றது சீரியஸ் குற்றச்சாட்டு. இந்தாப்பா இவரோட அட்ரஸ்ஸ வாங்கிக்கோ, சரோசா உனக்குந்தான், கரைக்டா வந்துடணும்."

"சரி சாரே, அதுவரைக்கும் இந்தப் பிள்ளாண்டான் என்னை..."

ஜீப்காரர்கள், பதில் சொல்லாமலே பறந்துவிட்டார்கள். இளங்கோவிற்கு அந்தக் குளிரிலும் வேர்த்தது. இப்போது விவகாரத்திலிருந்து கழட்டிக்கொண்டால் போதும் என்பது மாதிரியாகிவிட்டது. வீட்டுக்கு ஓடிப்போய் சரணடைய வேண்டும் என்று தோன்றியது. சரோசாவை பார்க்காதது போல நடந்தான். ஆனால் அவளோ, அவனை வழிமறித்துக் கொண்டே வாதித்தாள்:

"யோவ், ஆட்டோவில கொண்டுவந்து விட்டுட்டு, அப்புறமா என்ன நடக்கவைச்சா எப்படி? அதான் நம்மகிட்ட நடக்காதுன்னேன்... என்னை எந்த இடத்துல ஏத்தினியோ அந்த இடத்தில இறக்கிடு. டாக்ஸி வேணாம், ஆட்டோ போதும்."

# 6

இளங்கோவின் அம்மா, பாக்கியம் வீட்டுக்கு வெளியேயும் உள்ளேயுமாய் அல்லாடினாள். ஒன்பது மணிக்கே படுத்துக் கொள்ளும் இளங்கோ, இரவு பத்து மணியை தாண்டியும் வீட்டுக்கு வராதது, அவளுக்கு அந்த வீடே ஒரு காடு மாதிரி தோன்றியது. கேட்டை இழுத்து வெளியே வந்து, தெரு முனை வரைக்கும் கழுத்தை வளைத்துப் பார்த்தாள்.

தேக்கு சோபா செட்டில் கால்மேல் கால்பின்னி அவள் கணவர் சுப்பையா எதிலும் சம்பந்தப்படாதவர் போல், சாய்ந்து கிடந்தார். அவருக்குப் பக்கத்தில் சபாரி உடையில் கால் மேல் கால் போட்டு, தலைமுடிக்கு 'மை தீட்டி' உட்கார்ந்திருந்த மிஸ்டர் ரமணனை மனதிற்குள் திட்டிக்கொண்டே ஒப்புக்குச் சிரித்துப் பார்த்தாள். இந்த சோபாசெட்டோடு ஒட்டி, எதிரே போடப்பட்டிருந்த இரண்டு துண்டு நாற்காலிகளில் பாவாடை தாவணி மல்லிகாவும், சேலை கட்டிய பாமாவும் எதையோ கிசுகிசுத்துக் கொண்டிருந்தார்கள். பாக்கியம், அவர்கள் சத்தம் அடங்கும்படி புலம்பினாள் :

"என் பிள்ளைய காணுமே; எனக்குப் பயமா இருக்கே. ரோஷத்துல எங்கேயும் ஓடிப்போயிருப்பானோ? ஒருவேளை மருந்த சாப்பிட்டுட்டு - இல்லாட்டி அந்தப் பொம்பள ரவுடி அவன அடிச்சுப் போட்டிருப்பாளோ; ஏங்க, உங்களைத்தான், அவனைத் தேடிப் பார்த்துட்டு வாங்களேன்."

சுப்பையா ஒல்லி மனிதர்; மனைவியின் கனத்தில் பாதிகூடத் தேறாதவர். ஆனாலும் அவளை விட தாம் உயரம் என்று மனதைத் திடப்படுத்திக் கொள்பவர். இப்போது எழுந்து நின்றே கத்தினார் :

"தொட்டிலையும் ஆட்டிவிட்டு பிள்ளையையும் கிள்ளினாளாம், எவளோ ஒரு மூதேவி. அவனைத் தொரத்துனது நீ. அவனும் அப்பன் மாதிரி ரோஷம் கெட்டவனா இருப்பான்னு நீ எப்படி நினைக்கலாம்?"

மிஸ்டர் ரமணன் மட்டும் அங்கே இல்லையானால், பாக்கியம் சுப்பையாவை இந்நேரம் உப்பு வைத்து ஊறவைத்திருப்பாள். பிளட் பிரஷர்க்காரர். அப்படியும் பொறுக்க முடியாமல், அவருக்குத் தனியாக டோஸ் கொடுக்க நினைத்து "ஏங்க, கொஞ்சம் இந்தப் பக்கம் வறீங்களா" என்றாள் பணிவாக - மிகமிகப் பணிவாக. சுப்பையாவா கொக்கா, கண்டுக்கவில்லை. அவருடைய நீண்ட நாள் சிறைபட்ட உணர்வுகள், இப்போது விடுதலை வேகத்தில் வெளிப்படுவதைப் புரிந்து கொண்ட, ரமணன் சமயோசிதமாக சமாளித்தார்.

"சுப்பையா சாருக்கு எப்பவுமே ஜோக்குதான். ஒரு தாயோட மனச ஏன் புரிஞ்சுக்கத் தெரியல? எம் மனசு அவங்கள விட அதிகமாக சங்கடப்படுது. ஏன்னா, என் வீட்டு இரும்புக் கம்பிய எடுக்கிறத தடுத்தவரு எங்க போயிட்டாருன்னு தெரியலையேன்னு, ரொம்ப ரொம்ப வருத்தமா இருக்கு."

மிஸ்டர் ரமணன், தொடர்ந்தார்.

"நானும் இந்த ஏரியாவில் ஒரு கூர்க்கா போடணுமுன்னு ஒவ்வொரு வீட்டு முன்னாலயும் கரடியா கத்துறேன். யார் கேட்கிறாங்க? இப்பத்தான் இந்த நாடே குட்டிச்சுவராப் போகுது. ஓட்டுப் போடப் போகமாட்டோம். அதே சமயத்தில் அரசியலை அலசுவோம். சினிமாவுல கஷ்டப்படுகிற கேரக்டர்களுக்குக் கண்ணீர் விடுவோம், ஆனால் வாழ்க்கையில கஷ்டப்படுகிறவங்களுக்கு தண்ணி காட்டுவோம். இதுதான் நம்மோட நேஷனல் கேரெக்டர். நம்ம நேஷனல் கேரெக்டர் இருக்குதே... அப்படி ஏதும் இருக்குதா என்ன?"

ரமணனின் மகள் பாமா, தந்தையை வெடுக்கெனப் பார்த்தாள். சந்தனத்தையும், குங்குமத்தையும் கலந்தது மாதிரியான நிறம். அடிக்கடி பிடரி முடியை மேலே தூக்கித் தூக்கி வைப்பாள் என்பதைத் தவிர குற்றம் சொல்லும்படியாக எதுவும் கிடையாது.

"என்ன டாடி... இப்போ போய லெக்சர் அடிக்கிறீங்க! பாவம் ஆன்டி எப்படித் துடிக்கறாங்க பாருங்க. நீங்களும், அங்கிளும் அங்கே இங்கே போய் தேடுங்க."

"ஓகே... ஓகே... மிஸ்டர் சுப்பையா, நீங்க வரப்போறீங்களா, அல்லது இருக்கப் போறீங்களா?"

சுப்பையாவும் எழுந்தார். அறைக்குள் போய் ஒரு கோணிப்பை சட்டையை எடுத்துப் போட்டார். அகப்பட்டுக் கொண்டார் என்ற திருப்தியில் அங்கே வந்த மனைவியை விட்டு, லாவகமாக விலகி, வெளியே வந்து, மிஸ்டர் ரமணனோடு சேர்ந்து நின்றுகொண்டு, அவனை இளக்காரமாகப் பார்த்தார். மிஸ்டர் ரமணன் பூட்ஸ்களுக்குள் கால்களை சொருகப் போனபோது -

இளங்கோ உள்ளே வந்தான். பாமாவை பார்க்கும்போதெல்லம், எப்பவும் ஒரு புன்னகை சிந்துவானே, அந்த சிந்தல்கூட இல்லாமல் அங்கிருந்தவர்களை ஏறெடுத்தும் பார்க்காமல், அவர்கள் இருந்த வழியாய் நடந்து, எதிர்ப்பக்கமாய் இருந்த தனது அறைக்குள் போனான். வழக்கம் போல் அவன் உள்ளே போனதும் எரியும் பல்ப் எரியவில்லை. அவன் பீஸாகிக் கிடந்தான். பாக்கியம் ஓடோடிப் போய் லைட்டைப் போட்டாள். "கெட்டவுட், கெட்டவுட் அம்மா ஒங்களால இப்பவும் அவமானப் பட்டுட்டு வாறேன்" என்று அவன் கத்துவது கேட்டு சுப்பையா மகிழ்ச்சியோடு ஓடினார். மல்லிகா மாத நாவலோடும், பாமா தந்தையோடும் ஓடினார்கள். ரமணன் உபதேசித்தார் :

"மை டியர் யங்மேன், என்ன நடந்தாலும், அதையும் அதை நடத்தினவங்களையும் தீர்த்துக்கட்ட இந்த அங்கிள் இருக்கேன்.

கமான், என்ன நடந்ததுன்னு சொல்லுப்பா... அப்புறம் இந்த அங்கிள் என்ன செய்யப் போறேன்னு பாரு, கமான் மை பாய், கமான்."

இளங்கோ கண் விழித்தான். அதில் அம்மா பட்டதால், மீண்டும் மூடிக்கொண்டான். பிறகு கண்களை மெல்லத் திறந்து, அங்கிள் ரமணனை பயபக்தியோடு பார்த்தான். அவரைப் பார்க்கப் பார்க்க ஒரு நிமிர்வு ஏற்பட்டது. முன்பெல்லாம், குண்டோதரன் என்று அவரையே கேலி செய்தவன் இவன். இப்போது, அவரை தனக்கு உதவப்போகிற மிகப் பெரிய ரவுடியாக எண்ணினான். அன்று காலையிலிருந்து இரவு வரை நடந்த விவகாரங்களை அம்மாவைக் கோபமாகப் பார்த்தபடியும், பாமாவை குளுமையாகப் பார்த்தபடியும், மல்லிகாவைப் பார்க்காதபடியும் சொல்லி முடித்தான். கடைசியில், பாமா முன்னால், தனது கதாநாயகத்தனம் குறைந்துவிடாமல் இருக்க, முகத்தை நிமிர்த்தி கம்பீரமாகச் சொன்னான் :

"அவன் வழிமறிச்சவுடனே எப்படித்தான் அப்படி ஆத்திரம் வந்ததோ எனக்கே தெரியல, அவனை ஒரேத்தள்ளா கீழே தள்ளினேன். அப்புறம் அங்கே பிடிச்ச ஓட்டத்தை இங்கே வந்துதான் முடிச்சேன்."

அவனை கைகுலுக்கி பாராட்டப் போவதுபோல், பாமா கைகளை நீட்டினாள். அவனும் தனது கையை நீட்டுவது போல் இருந்தது. ஆனாலும் பாமா, தானாகவே வெட்கப்பட்டு, தானாகவே நீட்டிய கைகளை மடக்கிக் கொண்டு அவனை சாய்த்துப் பார்த்தாள். ஒருவர் வீட்டுக்கு ஒருவர் வந்து, குடும்பத்தாரோடு பொதுப்படையாகப் பேசி, அதனாலேயே மண்ணுக்குள் வேராய் மண்டிக் கிடந்த அவளின் காதல் அல்லது நேசம் இப்போது சம்பிரதாயத் தடையை மீறி வெளிப்படப் போவது போல் இருந்தது. மனதுக்குள் தன்னை அறியாமலே

பற்றாக்குறையாய் இருந்த ஒரு வேற்றிடம் இப்போது பற்றாலும் பாசத்தாலும் இட்டு நிரப்பப்பட்டது போன்ற ஒரு புதுச்சுமை. அந்த சுமையிலும் ஒரு சுவை.

பாமா, உதடுகளை சுவைப்பது போல் கடித்துக் கொண்டு அவனைப் பார்த்தாள். இனம் தெரியாத ஒன்றுக்கு இனம் கிடைத்த ஏகாந்தம். அரூபமாய் நின்ற உணர்வை ரூபப்படுத்துவது போன்ற திருப்தி. பெண்மையின் மென்மையை அன்றுதான் அடையாளம் கண்டது போன்ற ஒரு பரவசம்.

"அந்த ஊமன் ரவுடிக்கு போலீஸ் இன்ஃப்ளுயன்ஸ் அதிகமாக இருக்கும்போலத் தோணுது. போலீஸ், இளங்கோவை விட்டு வைக்க மாட்டாங்கன்னு நினைக்கிறேன். கற்பழிப்பு முயற்சின்னு போலீஸ் சொல்லிட்டால், அப்புறம் நம்ம பக்கமே யாருமே நிக்க மாட்டாங்க. இப்பவே நாம் ஏதாவது செய்தாகணும்."

ரமணன் யோசிப்பவர் போல், தலையை சொறிந்தபோது, பாக்கியம் ஒப்பாரி போடாத குறையாகக் கேட்டாள் :

"அய்யய்யோ... என் பிள்ளை உள்ளே போயிடுவானா? இந்த போலீஸ்காரனுங்க அட்டூழியத்த அடக்க ஆள் இல்லையா? என் மகனுக்குக் கெட்ட பேரு வந்தால், இவளுக்கும் ஒரு கல்யாணம் நடக்காதே."

இதுவரை எந்த உணர்வையும் காட்டாமல் மாத நாவல் பாத்திரங்களை மனதில் திரையிட்டுக் கெண்டிருந்த மல்லிகா, லேசாய் கண்களைக் கசக்கினாள். பாமாதான், அப்பாவை சூடாகப் பார்க்க, அவர், வாய் திறந்தார்.

"வேலியே பயிரை மேயுது... நாடு முழுசும் மாமூல் நிலைமை இருக்கோ இல்லையோ, மாமூல்தனம் இருக்குது. இதனாலதான், என் பையன் அமெரிக்காவிலேயே எம்.பி.ஏ. படிச்சுட்டு அங்கேயே செட்டிலாயிட்டான்."

ரமணனுக்கு ஒரு திருப்தி. எந்த வீட்டுக்கு எத்தனை தடவை போனாலும், அந்த வீட்டில் அத்தனை தடவையும் தனது மகன் அமெரிக்காவில் இருப்பதைச் சொல்லாவிட்டால் அவருக்கப் பேச்சே வராது. ஆனால், பாமா அப்பாவை அதட்டினாள் :

"டாடி, நம்ம பிரதரோட அமெரிக்கப் பெருமையை நாளைக்கு வச்சுக்கலாம். போலீஸ்காரங்கள் இளங்கோவை கைது செய்யறதுக்கு முன்னால டூ சம்திங். பிளீஸ். ஏதோ ஒரு டெப்டி கமிஷனர் உங்களோட கிளாஸ்மெட்டுன்னு அலட்டிக்குவீங்களே, அது உண்மையா பொய்யான்னு இப்பவே தெரியணும். இளங்கோவுக்கு மட்டும் நியாயம் கிடைக்காட்டி, நானே போலீஸ் ஸ்டேஷன் முன்னால போய் மறியல் செய்வேன். இதையும் உங்க பிரெண்ட்கிட்ட டெலிபோன்ல சொல்லுங்க டாடி."

மிஸ்டர். ரமணன், கம்பீரமாக எழுந்தார். டெலிபோன் இருந்த அறைக்குள், சுப்பையா அவரை வழிநடத்தினார். டெலிபோன் எண்களைச் சுழற்றினார். இதற்குள் பாமாவின் கண்ணசைவில் இளங்கோவும் அவளோடு அந்த அறைக்குள் வந்தான். லைன் கிடைத்ததும் ரமணன் வெளுத்துக்கட்டினார்.

"நீங்க யாரு? டெப்டி கமிஷனரோட பி.ஏ.வா? அவரு இப்ப ரொம்ப பிஸியா? என்னோட கிளாஸ்மெட்டுய்யா; பிரச்சினையும் பெருசுய்யா. இந்த நாடே குட்டிச்சுவராகப் போனதுக்கு உன்னமாதிரி பி.ஏ.க்கள் தான்யா காரணம். என்ன? உன் கிட்ட சொல்லுணுமா? சொல்றேன், சொல்றேன். என்னோட பக்கத்து வீட்டுப் பையன் - குட் பாய் - ஒரு பொம்பள ரவுடி அவன அடிச்சது மட்டுமில்லாம, இவன் என்னமோ அந்த அழகிய கற்பழிக்கப் போனதா போலீஸ்ல சொல்றாளம். அந்த மானங்கெட்ட போலீசும் அவள் சொல்றத நம்புதாம். வாட் எ ஷேம்! என்னய்யா சொல்றே? அந்தப் பையனை போலீஸ்ல சரண்டராகச் சொல்லணுமா? நீ யாருய்யா அத சொல்றதுக்கு? டெப்டி கமிஷனர் கிட்ட லைன கொடுய்யா. ஹலோ... ஹலோ...!"

ரமணன், டெலிபோனில் கிலோ கணக்கில் ஹலோ போட்டார். இறுதியில் போனை உடைப்பது போல் வைத்து விட்டு, "லைனை கட் பண்ணிட்டான். இந்த நாடே இப்போ, பி.ஏ.க்களாலதான் ஆளப்படுது. போலீசும் இதுக்கு விதி விலக்கு இல்ல" என்று சொல்லிவிட்டு, பரக்கப் பரக்கப் பார்த்தார். பாமா, ஒரு யோசனை சொன்னாள் :

"ஏன் டாடி... பேசாமல் டெப்டி கமிஷனர் வீட்டுக்கே போயிட்டு வந்திடுங்களேன்."

"போகலாம்தான். அங்கேயும், ஏ.கே-47 துப்பாக்கியோட இருக்கிற ஒருத்தன் தடுப்பானே. டோன்ட் ஒர்ரி... நாளைக்குக் காத்தால எட்டு மணிக்குள்ள அவரை பிடிச்சுடறேன். அப்போ பி.ஏ.-வும் இருக்க மாட்டான்; எம்.ஏ.வும் இருக்க மாட்டான்; கவலைப்படாதே இளங்கோ."

"இவ்வளவு நடந்தும் எப்படி சார், கவலைப்படாம இருக்க முடியும்?"

"ரமணன் ஸார்... நீங்கதான் என் பிள்ளைய மீட்டுத்தரணும். இந்த மனுசனை நம்பிப் பிரயோசனம் இல்லை."

"கவலைப்படாதீங்க பாக்கியம்மா. இப்படி குழந்தை மாதிரியா அழுவறது? பாருங்க உங்க டாட்டர் மல்லியை... அவளை மாதிரி கம்பீரமாக இருக்கணும்."

"ஆமாம் ஆன்ட்டி, டாடி ஏதாவது செய்யாமல் அவர நான் விடப்போறதுல்ல. ஒருவேளை நான் மட்டும் வீட்ல இருந்து, இந்தப் பொறுக்கிப் பொண்ணை நான் தடுத்திருந்தால் என்னை கொலை பண்ணிட்டு இந்த ஆறு பவுன் செயினை கழுத்தோட சேர்த்து அறுத்துட்டுப் போயிருப்பானே. எதுக்குச் சொல்றேன்னா, இளங்கோவோட பிரச்சினை, என்னோட பிரச்சினை. அவரோட தியாகம் வீண்போகாது."

மிஸ்டர் ரமணனும், அவர் மகள் பாமாவும் எழுந்தார்கள். இளங்கோ பாமாவை சோர்வோடு பார்த்தபோது, அவளோ, 'யாமிருக்கப் பயம் ஏன்?' என்பது போல் முருக தோரணையோடு உள்ளங்கையை நிமிர்த்திக் காட்டினாள். அவர்களோடு சேர்ந்து நழுவப்போன கணவனை "எங்கே போறீங்க" என்று பாக்கியம் அதட்டினாள். அவரோ, "ஒரே இருட்டா இருக்கு. அவங்களை விட்டுட்டு வாறேன்" என்று முன்னால் நடந்தார். இனிமேல் அவள் தூங்கிய பிறகுதான் வருவார்.

இளங்கோ, சாய்வு நாற்காலியையே கட்டிலாக்கினான்.

## 7

இளங்கோ, திடீரென அம்மாவின் சத்தமும், ஒரு அந்நிய சத்தமும், கூட்டாகவும், தனித்தனியாகவும் ஒலிப்பதைக் கண்டு எழுந்து பார்த்தான். நடு வீட்டிற்குள் வந்து அந்த வீட்டை ஏற இறங்கப் பார்க்கும் அந்தப் போலீஸ்காரரை உற்றுப் பார்த்தான். அவர் வேறு யாரும் இல்லை. தெருவோர கரும்பு வியாபாரியிடம் செங்கோல் செலுத்தினாரே அவரேதான். அம்மா அழாக்குறையாகக் கத்தினாள்:

"ஒங்கக் கொடுமைக்கும் ஒரு அளவு வேண்டாமய்யா? அந்த அநியாயக்காரியத்தான் உங்களால ஒண்ணும் செய்யமுடியல. ஒதுங்கிப் போறவனையாவது விட்டுத் தொலைக்கலாமே."

"நீங்க எது சொல்லணுமுன்னாலும் ஸ்டேஷன்ல வந்து சொல்லுங்க."

"நான் அனுப்பி வைக்காட்டி?"

"போலீஸ் மீறுறவங்களை எப்படி பிடிக்கணுமுன்னு வேலூர்லேயும், கே.கே. நகர்லேயும் டிரெயினிங் கொடுத்திருக்காங்க."

"அவனை எதுக்காகக் கூப்பிடுறீங்கன்னு எனக்கு முதல்ல தெரிஞ்சாகணும்."

"ஏதோ ஒருரு பொண்ணு, சரோசாவோ, ரோசாவோ, இவரு அவள கீழே பிடிச்சுத் தள்ளி ரத்தக் காயம் உண்டு பண்ணிட்டாராம். அதுக்கு முன்னால கற்பழிக்க முயற்சி செய்தாராம். இந்த இரண்டும் சீரியஸ்ஸான விவகாரம். அதனாலதான், இன்ஸ்பெக்டர் இவர கையோட கூட்டிட்டு வரச்சொன்னார். யாரு பக்கம் நியாயம் இருக்கு என்கிறது எனக்கு முக்கியமில்லை. இவர கையோட கூட்டிக்கிட்டுப் போறதுதான், முக்கியம்."

"கான்ஸ்டபிள் சார், இது அநியாயம் சார். நான் ஒரு பாவமும் அறியாதவன் சார். இப்படி நடக்குமுன்னு தெரிஞ்சிருந்தால், ஒதுங்கிப் போயிருப்பேன் சார்."

"எது பேசணுமுன்னாலும் ஸ்டேஷன்ல வந்து பேசுங்க மிஸ்டர்."

"சரி காலையில வாறேன்."

"இல்ல, இப்பவே வரணும். வந்தாகணும்."

அந்தப் போலீஸ்காரர் இளங்கோவை அந்த இரவில் கையோடு கொண்டு போகாமல் போகப் போவதில்லை என்பதுபோல், அங்கேயே - அந்த நடு வீட்டுலேயே லத்திக் கம்பை ஊன்றியபடி நின்று கொண்டிருந்தார்.

இளங்கோவிற்கு, தலைக்கு மேல் வெள்ளம் போன துணிச்சல்; அதுவும் கரும்புச் சாருக்காரனை சக்கையாக்கிய

போலீஸ்காரரே, வீட்டிற்குள் வந்து, டி.வி. செட்டையும், கண்ணாடி பிரேமிற்குள் இருந்த ஓவியப் பொருட்களையும் பார்த்துவிட்டு, திருப்தியுடன் மனதிற்குள் அசைபோட்டபடியே தலையாட்டுவதைக் கண்டு, அவன் கொதித்துப் போனான். அவருக்கு முன்னால் வந்து இரண்டு கைகளையும் நீட்டியபடியே கத்தினான் :

"இந்தாங்க சார்... உங்களைத் தான். விலங்கை மாட்டி இழுத்துக்கிட்டு வேணுமுன்னாலும் போங்க. இந்தாய்யா கை. எங்கேய்யா உன் விலங்கு?"

அனுபவப்பட்ட அந்த காவலருக்கு, அவன் ஒரு அப்பாவி என்பது உடனடியாகப் புரிந்தது. அதே சமயம், இந்த மாதிரி கேஸ்கள் காமதேனுவாக மாறும் என்பதும் தெரிந்தது. எதுவும் பேசாமல், அவனை அவன் போக்கிலேயே விட்டார். இதற்குள், இளங்கோ மேலும் அதிகமாய் உணர்ச்சிவயப்பட்டு, அவனே, அவரது கைகளைப் பிடித்து வலுக்கட்டாயமாக இழுத்தான். என்ன பேசுகிறோம் என்பது புரியாமல் பேசினான் :

"வாங்க சார், போகலாம். நான் அவளை கற்பழிக்க முயற்சி செய்யல... செய்திட்டேன். அதுக்காகவே திட்டம் போட்டு அவள இந்த ஏரியா பக்கம் வரவழைச்சு இரும்புக் கம்பிய திருடச் சொன்னேன். வாங்க சார் போகலாம்... வராட்டால் என்ன செய்வீங்க!"

"இதுக்கெல்லாம் மசியற ஆளு வேற; நான் இல்ல. தேவைப்பட்டால் விலங்குகூட மாட்டி இழுத்துக்கிட்டுப் போவோம். போலீஸ் கிள்ளுக்கீரை இல்லை. எங்களுக்கு பங்களாவும் ஒண்ணுதான். சேரியும் ஒண்ணுதான். ஏதோ கையில, காலிலே விழுந்து மன்னிப்புக் கேட்டு, அப்படி இப்படி நடந்துகிட்டால், தேறலாம். நீ என்னடான்னா உதவி செய்ய வந்த என்னையே வம்புக்கு இழுக்கிறீயே."

பாக்கியம், பிரமை பிடித்து நின்றாள். இப்படி ஒரு நிலைமை ஏற்படும் என்று எதிர்பார்த்தே, அதற்குப் பயந்து கணவன் ஓடிவிட்டதாக நினைத்து மனதிற்குள் கணவனைத் திட்டினாள். பிறகு மகனை மலங்க மலங்கப் பார்த்தாள். அவனையே சுற்றிச் சுற்றி வந்தாள். போலீஸ்காரர் அபயம் அளித்தார்.

"வழிய விடுங்கம்மா... இப்பவும் எதுவும் குடிமுழுகிப் போயிடல. உங்க பையனை நைட்ல ஜாக்கிரதையா பார்த்துக்க வேண்டியது என்னோடது. நீங்க காலையில வாங்க. பார்க்க வேண்டியவங்களை பக்குவமா பாருங்க. எல்லாம் சரியாயிடும். பாவம் சரோசா பொண்ணு. இவரு தள்ளிப் போட்டதுல அவளுக்குப் பிடரியில ஒரே ரத்தம். எதுல காயம் வந்தாலும் பிடரியில மட்டும் காயம் வரக்கூடாது. ஏன்னா அது உயிரோட கூட நிக்கும். ஆனாலும், கேஸ் இன்னும் ரிஜிஸ்டர் ஆகல. சரி... நடப்பா."

பாக்கியம், மகனையும் அந்த காவலரையும் ஒருசேரப் பார்த்தாள். அவளுள் இருந்த நகரத்துப் பெண் விலகி, கிராமத்து நாட்டாமைப் பெண்ணுக்கு வழி கிடைத்தது. கணவனைப் பார்த்து கர்ஜிப்பாளே அதேமாதிரி கர்ஜித்தாள் :

"சரி வாங்க போகலாம். நானும் வாரேன். என்னதான் நடக்குதுன்ன பார்த்துடலாம். ஏய் மல்லி, கதவைப் பூட்டிக்கடி. இல்லாட்டி திறந்த வீட்ல யாராவது, 'ஏதோ மாதிரி' நுழைஞ்சு வம்புக்கு இழுப்பாங்க. இரண்டுல ஒண்ண பார்க்காம நான் இன்னிக்கி விடப்போறதுல்ல. உங்கப்பா வந்தால் கதவ திறக்காதடி. அவரோட புத்திக்கு ரோட்டுல தூங்கணும். டேய் இளங்கோ, நடடா! என்னதான் நடத்தறாங்கன்னு பார்த்துடலாம்."

அந்தப் போலீஸ்காரருக்கு கோபம் வரத்தான் செய்தது. ஆனால், அழுது கொண்டே பின்னால் வருவாள் என்று

எதிர்பார்த்த அந்த அம்மாள், வயதான கண்ணகி போல் பேசுவது கண்டு அதிர்ந்து போனார்.

போலீஸ்காரர் முன் நடக்க, தாயும் மகனும் பின் நடக்க, முன்னால் நடந்த போலீஸ்காரர் ஆழம் பார்த்துப் பேசினார்.

"இந்த மாதிரி ராத்திரியில தம்பிய கூட்டிக்கிட்டுப் போறது, எனக்கே ரொம்ப சங்கடமாகத்தான் இருக்குது. ஆனால் எங்க ஸ்டேஷனுக்குள்ளேயே, எங்க கண்ணு முன்னாலேயே ஒரு சின்னஞ்சிறு பொண்ண அடிச்சப் போட்டுட்டு அலட்சியமாகப் போகிறவனை நாங்கலட்சியப்படுத்தாமல் இருந்தால், எங்க பேரு போலீஸா? எப்படியோ சமாதானமாப் போனால் எல்லாருக்கும் நல்லது."

அந்த மூவரும், பிரதான சாலைக்கு வந்தார்கள். வலப்பக்கமாகத் திரும்ப வேண்டியவர்கள், இடப்பக்கமாகத் திரும்புவது கண்டு போலீஸ்காரர் அவர்களை சந்தேகத்தோடு பார்த்தார்.

"அடுத்த தெருவில் தெரிஞ்சவர் ஒருத்தர் வீட்ல என் வீட்டுக்காரர் இருக்கார். அவரையும் கூட்டிக்கிட்டு போகலாம்."

"இவரு இங்கேயே நிக்கட்டும். நீங்க போயிட்டு வாங்க."

"இந்தா பாருய்யா, நான் பனங்காட்டு நரி. இந்த மிரட்டுற வேலைய வெச்சுக்காத. ஒரு பத்து நிமிஷம் உன்னால பொறுக்க முடியல. ஆனால், அடாவடி செய்யறவங்கள வருஷக்கணக்காய் பொறுத்துக்க முடியும். நான் சொன்ன சொல்ல காப்பாத்துறவள். வேணுமின்னால் நீயும் கூடவா. அதே சமயம் நீ தடுத்தால் நாங்க நடக்கத்தான் போறோம். உன்னால முடிஞ்சத செஞ்சுக்கோ."

மகன், காவல் நிலையத்தில் சிக்கி அவனுக்கு இரவோடு இரவாக ஏதாவது ஆகிவிடக்கூடாதே என்று கோழி போல் தவித்த

அந்தத் தாய், இப்போது பருந்து போல் வீறாப்புக் கொண்டாள். இளங்கோவின் கையைப் பிடித்துக் கொண்டு இடது பக்கமாக நடந்தாள். வலது பக்கம் கால் வைத்திருந்த போலீஸ்காரரும், அவர்களுக்குப் பின்னால் நடந்தார்.

தாயும், மகனும் ஒரு பெரிய பங்களாவிற்குள் நுழைவதைப் பார்த்துவிட்டு, போலீஸ்காரர் வருத்தப்பட்டார். கஷ்டப்பட்டார். புத்தியை கடன் கொடுத்து விட்டோமே என்பது போல் தொப்பியை சொறிந்தார். இதற்குள் மிஸ்டர். ரமணனும், பாமாவும் சத்தம் கேட்டு வெளியே வந்தார்கள். இளங்கோ இப்போது வீறாப்பாய் பேசினான் :

“நான், என்னை வழிமறித்த பொண்ணைத் தள்ளாமல் அவள் முன்னால தோப்புக்கரணம் போட்டிருக்கணுமாம். அவள் இரும்புக் கம்பிய திருடினதத் தடுக்காமல் எங்க வீட்டுல இருக்கிறதையும் எடுத்துக் கொடுத்திருக்கணுமாம். அப்படிச் செய்யாததுனால என்னை, ராத்திரியோடு ராத்திரியா விசாரிக்கப் போறாங்களாம்.”

பாமா கத்தினாள் :

“டாடி, இது டூ மச்... உங்க டெப்டி கமிஷனர் பிரண்டுக்கு போன் செய்யுங்க. இல்லாட்டி கமிஷனர் கிட்ட, நானே பேசப்போறேன்.”

பெரிய பெரிய வார்த்தைகளைக் கேட்ட போலீஸ்காரர் சிறிது சுதாரித்து, கையில் பிடித்திருந்த லத்திக்கம்பை முதுகோடு முதுகாக மறைத்துக் கொண்டார். இதற்குள் இளங்கோவின் தந்தை சுப்பையா, அந்தப் போலீஸ்காரரையே கமிஷனராய் அனுமானித்து ‘பணிவன்புடன்’ சொன்னார் :

“சார் நீங்க வாங்க... தப்பில்ல. எந்த வீட்டுக்கும் எந்த நேரத்திலயும் வர்றதுக்கு உங்களுக்கு ரைட் இருக்கு. இப்படி

யூனிபார்ம்ல வராமல் மப்டியில் வந்திருக்கலாம். இதுவும் தப்பில்லதான்."

"என்ன அங்கிள் சம்பந்தம் இல்லாமல் பேசறீங்க! போலீஸ்காரர் காலிலயே விழுந்துடுவீங்க போலிருக்கே. இளங்கோவை கேவலப் படுத்தணுமுன்னுதானே, இவரு யூனிபாரத்துல வந்திருக்கார். டாடி, இன்னுமா உங்களுக்கு லைன் கிடைக்கல?"

ரமணன் டெலிபோனை சுற்றோ சுற்று என்று சுற்றி, டெபுடி கமிஷனரை எப்படியோ, கையும் டெலிபோனுமாகப் பிடித்து விட்டார்.

"ஹலோ! நான்தான் மிஸ்டர் ரமணன். தப்புத்தான்... என்னை நானே மிஸ்டர்ன்னு சொல்லிக்கக் கூடாதுதான். உங்கள மாதிரிதான் அமெரிக்காவில இருக்கிற என்னோட மகனும் அடிக்கடி சொல்லுவான். அப்புறம் ஒரு விஷயம். போலீஸ் எங்க ஏரியாவிலே போலீஸாவே இல்ல. ஓகே! சொல்ல வேண்டியத ஒரு நிமிஷத்துல என்ன, அரை நிமிஷத்திலேயே சொல்லிடறேன்."

ரமணன், இளங்கோவிற்கு காலையிலிருந்து அந்த இரவு வரை ஏற்பட்ட சோதனைகளை விளக்கினார். அந்த ஏரியாவில் ஒரு குழந்தை காணாமல் போனதையும், பல பொருட்கள் திருட்டுப் போனதையும், இவைபற்றி அவ்வப்போது காவல் நிலையத்திற்கு புகார் கொடுத்தாலும், அவை போன இடம் தெரியவில்லை என்பதையும் விளக்கினார். இப்போது ஒரு கான்ஸ்டபிள் கையும் லத்தியுமாய் நிற்பதையும் சொன்னார். பிறகு, "ஹலோ... தேங்க்ஸ்" என்று சொல்லிவிட்டு போனை வைத்தார்.

"இன்னும் பத்து நிமிஷத்துல திருப்பி டெலிபோன் செய்யறதா சொல்லியிருக்கார்."

"அப்படின்னா, உங்க டெலிபோன் நம்பரை அவர் கேட்டுருக்கணுமே டாடி! நீங்கதான பேசிக்கிட்டுப் போனீங்க, நீங்க பேசி முடிச்சதும் மூணு செகண்ட்ல அவரு டெலிபோனை வைச்சுட்டாரே"

"போலீஸ் ஆபீசருங்க எப்பவுமே அப்படித்தான். கட் அன்ட் ரைட்டாத்தான் இருப்பாங்க."

இதற்குள் போலீஸ்காரர், அந்த வீட்டையும் அவர்களையும் ஆழம் போட்டார். ஒன்பது நிமிடம் ஐம்பது வினாடி வரை பொறுமையோடு இருந்தார். பத்தாவது நிமிடம் படபடப்பானார்.

"சார், எனக்கு டைம் ஆகுது. குற்றவாளிய என்னோட அனுப்பி வைச்சீங்கன்னா, உங்களுக்கும் நல்லது."

"வேணும்னா விலங்கு போட்டு இழுத்துக்கிட்டுப் போய்யா. நீ இவர ஸ்டேஷன் வரைக்கும்தான் இழுக்க முடியும். நான் உன்ன சிட்டி முழுக்க இழுப்பேன். என்ன நினைச்சுக்கிட்ட?"

ரமணன் போட்ட சத்தத்தில் நியாயம் இருப்பது போல் தன்னைத் தானே தேற்றிக் கொண்டு போலீஸ்காரர், பேசாமல் நின்றார். இதற்குள் டெலிபோன் மணி ஒலித்தது. ரமணனும், பாமாவும் போட்டி போட்டு ஓடினார்கள்.

பாமா எடுத்த டெலிபோனை ரமணன் வாங்கிக் கொண்டு "எப்படி என் டெலிபோன் நம்பரை கண்டுபிடிச்சீங்க?" என்றார்.

"ஹலோ, தேங்கயூப்பா. சார், சாரி! தேங்க்யூ சார். எங்க சைடுல நியாயம் இருக்கிறதாலதான், நீங்க தலையிடுறீங்கன்னு எனக்குத் தெரியும். என்ன? சரோசாவ பத்தி உங்களுக்கும் தெரியுமா? தெரிஞ்சிக்கிட்டுமா இவ்வளவு நாளும் விட்டு வைச்சீங்க? சார்... அது உங்க விவகாரம்தான். எங்களுக்கு இப்போ நியாயம் கிடைக்கிறதைவிட அநியாயத்துல இருந்து பாதுகாப்புக் கிடைச்சாலே போதும். இந்த கான்ஸ்டபிள் இன்னும் இங்கேயே

நிற்கிறார். ஓகே... ஓகே! அப்புறம் நீங்க ரிடையர் ஆன பிறகாவது வகுப்புல பேசினது மாதிரி உங்கள "டா" போட்டு பேசலாமா? யெஸ்... பிரதர், நீங்க பிஸிதான்... குட் நைட்..."

ரமணன் ஆனந்தப் பள்ளுப் பாடினார் :

"நம்ம ஏரியாவில நடந்த திருட்டுக்களைப் பத்தி இதுவரைக்கும் கொடுத்த புகார்களோட நகல்களை எடுத்துக்கிட்டு நாளைக்கி இன்ஸ்பெக்டரை போய் பார்க்கணுமாம். அப்படியும் நமக்கு திருப்தி வராட்டால், இவரையே போய் பார்க்கலாமாம். இன்ஸ்பெக்டரை தாளிச்சிருப்பார்! அவர் பேச்சுல அப்படி ஒரு வாடை தெரிஞ்சுது..."

ரமணன், மகள் இன்னும் தன்னை பெரிதாக நினைக்கவில்லையே என்று ஏக்கத்தோடு அவளைப் பார்த்தபோது, அவள் இளங்கோவை ஆறுதலாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். போலீஸ்காரருக்கு இருப்பதா போவதா என்ற சந்தேகம். அங்குமிங்குமாய் நடமாடிக் கொண்டிருந்த போது, மீண்டும் ஒரு டெலிபோன்; கரகரப்பான குரல். ரமணன் அதை வாங்கி, அந்த கான்ஸ்டபிளிடம் கொடுத்தார். அவரும் "அய்யா... அய்யா... சார்... சார்... அப்படியே... சார்... அப்படியே... சார்" என்று சொல்லிவிட்டு, டெலிபோனை வைத்தார். பிறகு விறைப்பாக ஒரு சல்யூட் அடித்தார். "அவளை விடப்பிடாது சார். நீங்க கொடுக்கிற கம்ப்ளைன்ட்ல அவளும் தேறப்பிடாது, அந்த சப்-இன்ஸ்பெக்டரும் தேறப்படாது" என்று சொல்லிவிட்டு, இளங்கோவைப் பார்த்து இரண்டு சல்யூட்களும், பாக்கியம்மாவைப் பார்த்து மூன்று சல்யூட்களும் அடித்துவிட்டு, சுப்பையாவை ஒரு முறைப்பு முறைத்து விட்டு கழன்று கொண்டார்.

ரமணன், பெருமை பிடிபடாமல் பேசினார் :

"மிஸ் அண்ட் மிஸ்ஸஸ் சுப்பையா! நீங்க வீட்டுக்குப் போங்க. நான், பாமா, இளங்கோ மூணுபேருமாய் சேர்ந்து ஒரு புகார் மனு தயார் செய்யப் போறோம். இளங்கோ இங்கேயே சாப்பிடுவார். சுப்பையா சார் புறப்படலையா?"

சுப்பையா சாருக்கு போக மனமில்லை. கூடவே, ஒரு எண்ணமும் ஏற்பட்டது. மகன் அன்றிரவு போலீசிடம் சிக்கினால் எப்படியாவானோ, அப்படி அன்றிரவு அவர் மனைவியிடம் சிக்கினால் ஆவார். சிக்க விரும்பாமல், அதேசமயம் சிக்கனமாகப் பேசினார் :

"அந்த கான்ஸ்டபிள் கையில் ஏதாவது கொடுத்துட்டு வந்திடறேன். எங்க பாக்கியத்துக்கு தனியா போகத் தெரியும். தனியா போயிடுவாள். ரொம்ப தைரியசாலி."

பாக்கியம், அவசரத்துக்குத் தோஷமில்லை என்பது போல், சுப்பையாவின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கொண்டே மாட்டைப் பிடித்துக் கொண்டு போவது போல் போனாள். அதை முன்பக்கம் இறுக்கப் பிடிக்க வேண்டும். இவரை பின் பக்கமிருந்து தள்ள வேண்டும். அவ்வளவுதான் வித்தியாசம் என்பது போல் அவரை நடத்தினாள்.

ரமணன் சுழற் நாற்காலியில் உட்கார்ந்து தனியாய் போகப்போன அந்தச் சின்னஞ்சிறுசுகளை தன்பக்கம் வரவழைத்தார். அந்த ஏரியாவாசிகளின் சங்கத்திற்கு, இதே ரமணன் அவர்களின் தலைவர் - தொண்டர். சந்தாகூட கொடுக்காத தெருவாசிகளுக்காக அவர்கள் வீட்டில் நடந்த திருட்டு சம்பவங்களை விளக்கும் கடிதங்களை வைத்துக் கொண்டு ஒட்டுமொத்தமாக ஒரு டிக்டேஷனைக் கொடுத்துவிட்டு, பாமாவை டைப் அடிக்கும்படி சொன்னார்.

பாமா, இளங்கோவை தனது அறைக்குள் கூட்டி வந்தாள். இயற்கைக் காட்சிகளைக் கொண்ட கட்டவுட் ஒரு பக்கம்; வீணையோடு நாதம் இசைக்கும் சரஸ்வதியின் உருவம் பொறித்த திரைச்சீலை... டூ இன் ஒன். ஒரு சின்ன டி.வி. செட். அறை முழுவதும் ஒரே செண்ட் வாசனை.

சாப்பிட ஏதாவது கொடுங்கள் என்று கேட்கப்போன இளங்கோ, பசியை மறந்தான். தன்னையறியாமலேயே சொன்னான் :

"உங்களுக்கு கொண்டை போட்டால் நல்லாயிருக்கும். ஏன்னா உங்க முகம் ஓவல் இல்லை. அளவுக்கு மீறி ரவுண்ட். அதோட நீங்க கொஞ்சம் குள்ளம், கொஞ்சந்தான். அதனால கொண்டைய மேல்நோக்கிப் போட்டால், உங்களை உயர்த்திக் காட்டும்."

"இதெல்லாம் எப்படித் தெரிஞ்சிக்கிட்டீங்க?"

"இப்போதைக்கு சஸ்பென்ஸ்."

அவள், அவனையே வைத்த கண் வைத்தபடி சிரித்தாள்.

"சரி புறப்படுங்க. நாளைக்குத்தான் டைப் அடிக்கப் போறேன். இப்போ அடிச்சால் தப்புத்தப்பா வரும். ஆனாலும் ஒன்று, உங்களை அவள் அடிச்சது எனக்கு இன்னும் வலிக்குது. அவளுக்கு ஆறு வருஷம் வாங்கிக் கொடுக்கிறது, என்னோட பொறுப்பு. தைரியமா போங்க."

இளங்கோ, அவளைப் பார்த்தபடியே எழுந்து நடந்தான். அவள் கொடுத்த காதல் சமிக்ஞைகள் அவனுக்கு டூயட் மாதிரியான கற்பனையை தரவில்லை. அந்த சேரிப் பெண் ஆறு வருடம் உள்ளேயிருக்கப் போகிறாள் என்ற ஒரு ஆனந்தத்தில் அன்று நடந்த அத்தகைய சோதனைகளும், சாதனைகளாய் ஆனது போல் ஒரு அசுரத் திருப்தியோடு நடந்தான்.

# 8

ஒருவர், இரவில் தூங்கும்போது எந்த எண்ணம் கடைசியில் மனதில் நிற்கிறதோ, அதுதான் மீண்டும் கண் விழித்ததும், மனதில் முதலாவதாக வரும் என்பார்கள். அன்று இரவு முழுவதும் அப்படியே தூங்கிப் போன இளங்கோவின் மனதில் காலையில் எடுத்த எடுப்பிலேயே சரோசா இரும்புக் கம்பிகளுக்கிடையே கையில் விலங்கிடப்பட்டு, அவனைப் பார்த்து தலைகவிழ்ந்து நின்றாள். அதற்குப் பிறகு தான், பாமா வேகுவேகமாக தலையில் கொண்டை போட்டுக் காட்டும் பாவனையோடு, எட்டியெட்டிப் பார்த்தாள்.

இளங்கோ, அம்மா நீட்டிய இட்லிகளை விழுங்குவது தெரியாமல் விழுங்கிவிட்டு, பேண்ட் சட்டையை அவனைப் போல் வீறாப்பாக இழுத்துக்கொண்டு, வெளியே புறப்பட்டான். அவனுக்கு 'சப்' என்றாகிவிட்டது. பாமா வீட்டிற்குப் போவதற்கு அவன் படியிறங்கியபோது, அவள் அப்பா ரமணனோ, மாருதி காரில் அங்கே வந்தார். கதவைத் திறந்து அவனை ஏறிக்கொள்ளும்படி சைகை செய்தார். இதற்குள், பாமா பின்பக்கமாக வந்து கைகளைப் பிடரிக்குக் கொண்டு போய் தலைமுடியை தலைக்குமேல் கொண்டுவந்து அவனைப் பார்த்துச் சிரித்தாள். அம்மா ஒருபக்கமும், இன்னொரு பக்கம் பாமாவும் கையசைத்து வழியனுப்ப மாருதி கார் அந்தப் பெயருக்குரிய வேகத்தில் பறந்தது.

அந்தக் கார், காவல்நிலைய வளாகத்திற்குள் நுழைந்ததும், நேற்றிரவு வீட்டிற்கு வந்திருந்தாரே அதே போலீஸ்காரர் அவர்களைப் பார்த்து அலறியடித்துக் கதவைத் திறந்தார். எந்தப் போலீஸ்காரராலும் இப்படி ஒரு மரியாதைக்குட்படாத ரமணன் உடம்பை நெளித்து நடப்பதோ அல்லது அக்கம்பக்கம் பார்த்து

நடப்பதோ கவுரவக்குறைவு என்று நினைப்பது போல், லகான் போட்ட குதிரைபோல் நேராக நடந்தார். இளங்கோ, அவர் பின்னால் ஆட்டுக்குட்டி போல் போனான். இருவரும் கிரைம் அறைக்குள் நுழைந்தார்கள். அங்கிருந்த அதே சப்-இன்ஸ்பெக்டர் விழுந்தடித்து நின்றார்.

"உட்காருங்க... மிஸ்டர் ரமணன் சார்... இளங்கோ! நீங்களும் உட்காருங்க..."

"ஒயர் ஈஸ் யுவர் இன்ஸ்பெக்டர்...? இன்ஸ்பெக்டரை நான் பார்க்கலாமா...?"

"உங்களுக்காகத்தான் காத்திருக்கார் சார், வாங்க சார்."

மூவரும் முதல் மாடியில் உள்ள இரண்டாவது அறைக்குள் வந்தார்கள். ரமணன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

"ஐ அம் ரமணன்... கம்பெனி எக்ஸிகியூட்டிவ். நீங்க இன்ஸ்பெக்டரா?"

"உட்காருங்க மிஸ்டர் ரமணன்... உட்காருங்க. தம்பி நீயும் உட்காருப்பா"

"இனிமேல் எது நடந்தாலும் என்கிட்ட சொல்லுங்க சார். டெப்டி கமிஷனரை கஷ்டப்படுத்த வேண்டாம். என்னை கஷ்டப்படுத்துங்க. இனிமேல் உங்க ஏரியாவோட செக்யூரிட்டிக்கு நான் பொறுப்பு. இந்தாப்பா மூணு கப் காப்பி வாங்கி வா."

ரமணனும், இளங்கோவும் அந்த இன்ஸ்பெக்டரையே பார்த்தார்கள். அவருக்கு நாற்பது வயதுக்கு சற்று மேலேயோ, கீழேயோ இருக்கும். சற்று கனமான உடம்பு; என்றாலும் காற்றில்கூட பறக்கமுடியும் என்பது மாதிரியான லாவகம். இழுத்துப்பிடித்தது போன்ற தொய்வில்லாத முகம்.

இன்ஸ்பெக்டரை விரட்டுவதற்கென்றே வந்த ரமணன், அவரது தோற்றத்தைப் பார்த்ததும் கட்சி மாறிவிட்டார். தோல் பைக்குள் வைத்திருந்த ஒரு கற்றைக் காகிதத்தை அவரிடம் நீட்டிவிட்டு, ஒவ்வொரு பேப்பருக்கும் விளக்கம் சொல்வதற்காக அவர் மனத்திற்குள் ஒத்திகை போட்டார். இதற்குள் இன்ஸ்பெக்டர் முந்திக் கொண்டு பேசினார் :

"நீங்க சொல்ல வேண்டியதே இல்ல சார்! நேற்று நைட் முழுவதும் இதே வேலைதான். மூணாவது கிராஸ் தெரு முனையில் ஒரு ஓலைவீட்டுல இருக்கிற ருக்குமணி என்கிற பால்காரியோட ஆறுவயசுப் பையனைக் காணவில்லை. அதே கிராஸ் தெருவில எட்டாம் நம்பர்ல அழகிரி சாமியோட டி.வி. செட் போயிட்டுது, இரண்டாவது கிராஸ்ல சம்புலிங்கம் வீட்டுல சம்புல போட்டிருந்த பூட்டும் கைப்பம்பும் போயிடுத்து. இதுங்கதான் உங்களுக்குத் தெரியும். இன்னொன்றை நான் சொல்றேன், கேளுங்க; நேத்து இரவு நைட்ல, மெயின் ரோட்டுல இருக்கிற நியாயவிலைக் கடைய உடைச்சி ஏழெட்டு மூட்டைகளை எத்திக்கிட்டுப் போயிட்டாங்க. அந்த ஏரியாவில இருக்கிறவங்க மனுஷங்களா? மாடுங்களா? மக்களோட ஒத்துழைப்பு இல்லாம குற்றங்களைக் கண்டுபிடிக்க முடியாது ஸார்."

"அப்படியும் சொல்ல முடியாதுங்களே. இந்தப் பையன் இளங்கோ, என்னை மாதிரியே ஒரு சமூகத் தொண்டன். நேற்று உங்க ஆட்கள்கிட்டயே இவன் பட்டபாடு... ஒரே பாடு... இதைப் பார்த்த பிறகு எவன் போலீசிற்கு ஒத்துழைப்புக் கொடுப்பான்? இவ்வளவுக்கும் அந்தப் பொண்ணு ஒரு குழந்தைய திருடினவள்..."

"நடந்ததை மறந்துடுங்க... இனிமேல் நடக்கப் போறதை கவனிப்போம். இந்தாப்பா அவள் பேரு என்ன சரோசாவா? கூட்டிக்கிட்டு வா, க்விக். என்ன சார் செய்யறது? எல்லாப் போலீசும், விவிஐபி பாதுகாப்புக்குப் போக வேண்டியதிருக்கு. பஞ்ச பாண்டவர் மாதிரி, ஐந்து கான்ஸ்டபிள்களை வைச்சிக்கிட்டு, இந்த

ஏரியா முழுவதையும் கவனிக்கணும். எப்படி முடியும்? உங்கள மாதிரி பப்ளிக் பர்ஸனாலிட்டிகள் டெப்டி கமிஷனர்கிட்ட இதையெல்லாம் சொல்லணும்"

"கண்டிப்பாய் அடுத்தவாரம் உங்க டெப்டி கமிஷனர் என் வீட்டுக்கு வரான்! சாரி... கிளாஸ்மேட்டாக இருந்தாலும் உங்க முன்னால 'இர்' போட்டுத்தானே பேசணும்...? - டின்னருக்கு வருகிறாரு. அவர்கிட்ட விவரமா சொல்றேன்."

சரோசாவை, இரண்டு கான்ஸ்டபிள்கள் கொண்டுவந்து, இன்ஸ்பெக்டர் அறைக்கு வெளியே நிறுத்தினார்கள். நேற்று அவளிடம் தோழமையோடு பேசிய அதே, அந்த கிரைம் சப்-இன்ஸ்பெக்டர், இப்போது அவள் கழுத்தைப் பிடித்து உள்ளே தள்ளினார். அவள் விழாக்குறையாக இன்ஸ்பெக்டர் முன்னால் குனிந்து நின்றாள். பிறகு அங்குமிங்குமாய் பார்த்தாள். இளங்கோவை திடுக்கிடாமல் பார்த்தாள். பிறகு, அரற்றியபடியே இளங்கோவைப் பார்த்து கையெடுத்துக் கும்பிட்டாள். அவளின் மேல் உதடு வீங்கிப் போயிருந்தது. அழகான மஞ்சள் துண்டுபோல் தோற்றம் காட்டும் அந்த உதடு, இப்போது கோவைப் பழமாய் சிவந்து அதே அளவிற்கு வீங்கி கீழ் உதட்டை மறைத்துக் கொண்டிருந்தது. கீழ் உதடோ நைந்து ரத்தக் கசிவோடு சதைக் கட்டிபோல் தொங்கியது. இரண்டு கண்களின் புருவங்களும், வீங்கிப் புடைத்து முன்பக்கமாய் குவிந்து, கண் இமைகளை மறைத்தன. கன்னங்களும் வீங்கிப் புடைத்து ரத்தம் சிந்திக் கொண்டிருந்தன. தலைமுடியை யாரோ இறுக்கிப்பிடித்து, நீண்ட நேரம் வைத்தது போல், கோரம்புல் கட்டுப்போல மேல்நோக்கி நீண்டிருந்தது. நெற்றிப் பொட்டில், குங்குமம் வைத்ததுபோல், ஒரு ரத்தக்காயம். கைகளில் சிராய்ப்புக்கள். அவள் கணுக்கால்களில், பாவாடை பிய்ந்து சிவப்புச் சிவப்பாய் தெரிந்தது.

சரோசா, இளங்கோவை காலில் விழுந்து கும்பிடப்போனாள். அவன் சற்றுத் தள்ளி நின்றதும், கீழே குனிந்தாள். நிமிர்ந்தாள். அலை அலையாய் கண்ணீர்விட்டு அதை அழுகின்ற வாய்க்குள்ளேயே உள்வாங்கியபடி, அவள் ஓலமிட்டாள் :

"சாரே... சாரே... இளங்கோ சாரே! நான் செய்தது அல்லாம் தப்புத்தான்... என்னை மன்னிச்சிடு சாரே. நீ சொன்னாத்தான் என்னை விடுவாங்களாம்."

இன்ஸ்பெக்டருக்குக் கோபம் வந்துவிட்டது.

"அதுக்குள்ள இத எவன்டி உனக்குச் சொல்லிக் கொடுத்தது? மொதல்ல அந்தக் குழந்தையை எங்கே வைத்திருக்கேன்னு இப்போ எனக்குத் தெரிஞ்சாகணும். முன்னால சாராயம் காய்ச்சினே, சரின்னு விட்டுட்டோம். அங்கேயும் இங்கேயும் சிலரை அடிச்சே... கண்ணை மூடிக்கிட்டோம். இப்ப என்னடான்னா, குழந்தையை திருடினதையும் கண்டுக்காம இருப்போமுன்னு நினைச்சால் நீதான் ஒரு குழந்தை. சொல்லுடி, ரமணன் வாய்விட்டார்க் கொழுந்தையை எங்க வைச்சிருக்கே?"

"இன்ஸ்பெக்டர் சார், டி.வி.செட், பிரிஜ்-ஐப் பத்தியும் கேளுங்க சார்."

"கொஞ்சம் சும்மா இருங்க மிஸ்டர் ரமணன்; முதலில் உயிர்ப்பிரச்சினை, அப்புறந்தான் ஜடப்பிரச்சினை. சொல்லுடி... குழந்தையை எங்கே கொண்டு போய் வைச்சிருக்கே?"

"அய்யோ சாரே! நான் அப்படிப்பட்டவள் இல்லீங்க சாரே. நெசமா சாரே, சத்தியமா சாரே"

"இன்னிக்கிக் காலையிலே சப்-இன்ஸ்பெக்டர் கிட்ட குழந்தையை திருடி ஏதோ ஒரு கிராமத்துல வைச்சிருக்கிறதாய் சொல்லியிருக்கே."

"சொன்னது நிசந்தான் சாரே! அடி பொறுக்க முடியாம அப்படிச் சொன்னேன் சாரே... மொகத்துல விழுந்த குத்துகள தடுக்கிறதுக்கு அப்படிப் பொய் சொன்னேன் சாரே. நான் பொறுக்கிதான்; இல்லங்கல. ஆனால் கொழுந்தையை திருடுகிற அளவுக்கு நான் மோசமானவள் இல்ல சாரே! சத்தியமாச் சொல்றேன் சாரே. பெரிய பெரிய திருட்டெல்லாம் செய்யறவள் இல்லே சாரே!"

"அப்போ... குழந்தைய கொன்னுட்டே... அப்படித்தானே?"

"நானே தாயில்லாமல் வளர்ந்தவள் சாரே... ஒரு குழந்தையோட கஷ்டம் நஷ்டம் தெரிஞ்சவள் சாரே... நான் அப்படிச் செய்யறவ இல்ல சாரே!"

"சரி, உன்ன விசாரிக்கிற விதமா விசாரித்தாத்தான் சொல்லுவே. ஆனால் ஒண்ணு, இந்தத் தடவை நீ தப்பிக்கவே முடியாது. சாராயத்துக்கு ஒரு வருஷம்; எல்லாத்துக்கும் மேல குழந்தையை கடத்தினதுக்கு அல்லது கொன்னதுக்கு ஆயுள் தண்டனைன்னு உனக்கு வாங்கிக் கொடுக்கிறோமா இல்லையான்னு பாரு! அவள இழுத்துக்கிட்டுப் போய்யா."

சரோசா, இப்போது இளங்கோவை விட்டுவிட்டு முகத்தை உப்ப வைத்துக் கொண்டு காலாட்டியபடியே அலட்சியமாக இருந்த ரமணனைப் பார்த்துக் கும்பிட்டாள். பெருமூச்சு, நெடுமூச்சாய் விட்டு அழுகின்ற வாயை அப்படியே விட்டுவிட்டு, மீண்டும் இளங்கோவைப் பார்த்தாள். தட்டுத்தடுமாறி கைகளை தலைக்குமேல் கொண்டு போய் அரற்றினாள் :

"சாரே... சாரே! இரும்பு வலையை பிய்ச்சது தப்புத்தான், ஒன்னோட ஆத்தாவ அடிச்சதும் தப்புத்தான்... உன்னை டபாய்ச்சதும் தப்புத்தான். ஆனால் அத்தனையும் தாத்தாவுக்கு ஒரு பன்னுக்காகவும், ஒரு டீக்காகவும் தான். எனக்குத் தேங்காய்

பறிக்கத் தெரியும். ஆனால் தங்கத்தப் பறிக்கத் தெரியாது. நான் போயிட்டா என் தாத்தா ஒரேயடியா பூடுவாரய்யா. ஒனக்குக் கோடிப் புண்ணியம் சாரே. இன்ஸ்பெக்டர் ஐயாகிட்ட சொல்லு சாரே. வேணுமுன்னா இந்த ஏரியாவவிட்டே ஓடிடுறேன் சாரே..."

"ஒன்ன ஓட்டத்தான் போறோம். வேலூருக்கோ, சென்ட்ரல் ஜெயிலுக்கோ அனுப்பத்தான் போறோம். ஏய்யா அவள பேசவைச்சி வேடிக்கைப் பார்க்கிறீங்க! அவள் வாயிலிருந்து உண்மையை வரவழைக்கிற விதமா வரவழைங்க!"

கான்ஸ்டபிள்கள், அவளைத் தள்ளப் போனார்கள். அதற்குள் அவள் நடந்தாள். இளங்கோவை வெறுமையோடு ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு இன்னொரு கும்பிடு போட்டபடியே மெல்ல மெல்ல நடந்து, அவர்கள் கண்ணிலிருந்து மறைந்தாள்.

இளங்கோவிற்கு என்னவோ போலிருந்தது. அவளின் ஒவ்வொரு கும்பிடும், அவன் இதயத்தை ஈட்டி போல் குத்தியது. அவளின் ஒவ்வொரு விசும்பலும் அவன் நெஞ்சைக் கசக்கியது. ஏதோ ஒன்று அருவமோ, உருவமோ... ஆணோ, பெண்ணோ, அலியோ... அது அவன் அடிவயிற்றிலிருந்து பீறிட்டு உச்சந்தலையை முட்டி அங்குமிங்குமாக தாண்டவம் ஆடிக்கொண்டிருந்தது. பக்கத்து அறையிலோ அல்லது அதற்கு அடுத்த அறையிலோ, "ஐயோ... என்னால தாங்க முடியல, என்ன உதைக்காதீங்க, நாயினா! நாயினா!" என்ற அவலச்சத்தம், அவன் காதுகளைக் குத்தியது.

ரமணனும், இளங்கோவும் இன்ஸ்பெக்டர் எழுந்து நின்று வழியனுப்ப, கிரைம் சப்-இன்ஸ்பெக்டர் வாசல்வரை வந்து நிற்க வெளியே வந்தார்கள். ரமணன், மாருதி காரில் ஏறிக்கொண்டு "அப்போ நீ வீட்டுக்குப் போ. எல்லார்கிட்டயும் இந்த சந்தோஷச் செய்தியை சொல்லு" என்று சொல்லிவிட்டு காரை சத்தம் போட வைத்தார். அப்போது -

ஒரு முதியவர் - சரோசா ஊட்டி விட்டாளே அந்த மெல்லிய மனிதர் - மூன்று லுங்கிக்காரர்களுக்கு மத்தியில் இருவர்மேல் தோள் போட்டு, ஒருவன் மார்பில் முதுகைப் போட்டு அங்குலம் அங்குலமாய் அந்த காவல் நிலைய வளாகத்திற்குள் வந்து கொண்டிருந்தார். அவரது பொட்டைக் கண்களில் நீர் கசிந்தது. கூடவே ஈக்களும் மொய்த்தன. அடிக்கடி அந்த ஈக்களை கையாட்டி விரட்டும் அந்த மனிதர் இப்போது அந்த சொரணையே இல்லாமல் "சரோ... சரோ..." என்று முனகிக் கொண்டே நத்தை மாதிரி நகர்ந்து கொண்டிருந்தார்.

இளங்கோவிற்கு, கண்கள் அக்கினிக்கட்டிகளாய்ச் சுட்டன. நாடி நரம்புகள் தெறித்தன. உடம்பு ரத்தம் முழுவதும் வேர்வையாய் வெளியே வந்து கொண்டிருப்பது போல் இருந்தது. ரமணன், காரை நகர்த்தப் போனபோது, அவர் அருகே போனான். மெள்ளக் கேட்டான் :

"இதோட விட்டுடலாம்னு நினைக்கிறேன் அங்கிள். அவளைப் பார்க்கப் பாவமா இருக்கு - ஒழிஞ்சு போறாள். அவள விட்டுடச் சொல்லலாம்."

"என்னப்பா... இளங்கோ உனக்கென்ன பைத்தியமா? அப்புறம் நாம் என்ன சொன்னாலும் போலீஸ் கேப்பாங்களா? - என்னோட பிரிஸ்டீஜ் என்னாகிறது? அதோட நீ அவளை கற்பழிக்க முயற்சி செய்துட்டு அது வெளியில தெரியக் கூடாதுன்னு புகாரை வாபஸ் வாங்குறேன்னு போலீஸ் பிளேட்ட திருப்பினால், என்ன செய்வே...? ஓகே... ஓகே... டி.வி.யில போய் ஒலியும் ஒளியும் பாரு. மனசு சரியாயிடும்."

இளங்கோ பிரமை பிடித்து நின்றான். ரமணன் சொல்வதும் ஒரு வகையில் நியாயமாகப்பட்டது. அதே சமயம் அவளை அந்த் நிலையில் காண்பதும் அநியாயமாகப் பட்டது.

இந்தக் குழப்பம் போதாதென்று கான்ஸ்டபிள் திருமலையப்பன் எங்கிருந்தோ வந்தது போல் அவன் அருகில் வந்து கத்தினார் :

"நீ சரியான பிராடுய்யா! இப்ப நான் ஒன்ன அரஸ்ட் செய்யப் போறேன்; எந்த டெப்டி கமிஷனர் வந்து தடுக்கிறார்னு பார்க்கிறேன். ஒனக்கு இன்புளுயன்ஸ் இருக்கிற திமுறு... ஏய்யா! பெரிய வீட்டுப் பையா! நேற்று என்ன சொன்னே? ஆட்டோ டிரைவர் கிட்டே பணம் கொடுத்துறதாய் சொல்லிவிட்டு, சொன்னபடி கொடுத்தியா? ஆட்டோ ஸ்டாண்டுல நின்ன அந்த டிரைவர நான் கேட்டப்போ, நீ அவனை இந்த ஸ்டேஷனுக்கு வெளியேயே விட்டுட்டு தலைமறைவா போயிட்டதா சொல்றான்?"

இளங்கோ, தன்னை ஒரு தடவை ஆட்டிக்கொண்டான். அப்போதுதான், அவனுக்கு உறுத்தியது, செய்த தவறை எப்படி உற்றாரிடம் சொன்னால், அவர்கள் திட்டி விட்டு விடுகிறார்களோ, அப்படி அந்தப் போலீஸ்காரரை ஒரு உறவினராக நினைத்து, அவரைப் பார்த்துச் சங்கடமாய் சிரித்தான். உடனே திருமலையப்பனுக்குக் கோபம் வந்தது. காக்கிச்சட்டை போனாலும் பரவாயில்லை, அவனையும் கழட்டிவிடுவது என்று தீர்மானித்தார். இதைப் புரியாமல் இளங்கோ, அவர் கைகளைப் பிடித்துக் கொண்டே பதில் அளித்தான்:

"நான் அறிவுகெட்ட முட்டாள் சார். நேற்று நடந்த அமர்க்களத்தில் ஆட்டோக்காரரை மறந்திட்டேன். மன்னிச்சிடுங்க சார்... சாரி."

"இந்த 'சாரி, மன்னிச்சிடுங்க' என்கிற வார்த்தைகளை வச்சே நாட்டிலே எல்லோருடைய பிழைப்பும் ஓடுதுய்யா. கொலைகாரனும் இதைத்தான் சொல்றான். அரசியல்வாதியும் அதையே சொல்றான். உன்னோட மன்னிப்பிலே என்னோட

இழந்த மானம் திரும்பி வருமா? டிரைவர் கிட்டே, நானாத்தான் வம்பை விலைக்கு வாங்குனேன். உடனே அவன் உன்னோட மோசடியச் சொல்றான். பக்கத்தில இன்னொரு ஆட்டோ டிரைவர், என்ன சொல்றான் தெரியுமா? 'போலீஸ்ல அவனவன், ஆட்டோ வாடகையிலே கொஞ்சத்த மாமுலா வாங்குவான்; இவரோ வாடகையிலே கொஞ்சத்தையும் விடாமே மாமூலாய் வாங்குற டைப்புன்னு' கத்தறான். என்னால எதுவும் செய்ய முடியல. காரணம், அவங்க பக்கம் நியாயம் இருக்கு. இப்படி தைரியமாப் பேசறதுக்கு அவங்களுக்கு யூனியன் இருக்கு. எனக்கு என்னய்யா இருக்குது?"

போலீஸ்காரர்களும் குழந்தையாகலாம் என்பதுபோல், கைது செய்யப்பட வேண்டிய ஒருவன் முன்னாலேயே கைதாகி நிற்பது போல் நின்ற திருமலையப்பனைப் பார்த்து இளங்கோ திகைத்தான். அவருக்கு ஆறுதல் சொல்வது போலவும், தனக்குத் தானே தேறுதல் சொல்வது போலவும் பேசினான்:

"சார், நீங்க என்னை என்ன செய்தாலும் தகும் சார்; ஆனால் நான் வேணுமுன்னு அப்படிச் செய்யல சார். உண்மையைச் சொல்லப் போனால், இப்போதான் அந்த ஆட்டோவே ஞாபகத்துக்கு வருது. நீங்க கைது செய்தாலும் ஒரு உண்மையான குற்றவாளியைத்தான் கைது செய்யப் போறீங்க. போலீஸ்காரங்க லாக்கப்புல என்னை ஜட்டியோட நிறுத்துமுன்னாலே இந்த சட்டைக்குள்ள இருக்கிறதை தந்துடறேன் சார். இந்தாங்க சார், நூறு ரூபாய். அந்த ஆட்டோ டிரைவர்கிட்டே நீங்களே கொடுத்துடுங்க சார்."

"யோவ், யோவ், கையை சுருக்குய்யா. உன்கிட்டே நான் ஏதோ 'சம்திங்' வாங்குறதாய் எங்க ஆட்களே நினைப்பாங்க. சாயங்காலமாய் அதோ அந்த ஆட்டோ ஸ்டாண்டுக்கு வா. நானும் 'பீட்டுக்கு' போயிட்டு வந்துடறேன். என் முன்னாலே நீ அவர்கிட்ட பணத்தைக் கொடுக்கணும்."

"நானே இப்படி நடந்துக்கிட்டது எனக்கு ஆச்சரியமாய் இருக்குது சார். பாவம், நான் கொடுக்கிற பணத்திலேயே வீட்டோட மத்தியான ஸ்டவ்வ எரிய வைக்க நினைச்சிருப்பார் அந்த ஆட்டோ டிரைவர். என்னைப் பற்றி நினைக்கவே எனக்கு வெட்கமாய் இருக்குது. ஆனாலும் நீங்க நினைக்கிறது மாதிரி நான் பிராடு இல்லை சார். எவ்வளவு அவமானமா பீல் பண்ணுறேன் தெரியுமா?"

"நான் விளக்கம் சொல்றேன் கேள். நேற்று உன் தலையிலே ஏற்றப்பட்ட சுமையிலே, உனக்கு ஆட்டோக்காரன் பாரம் தெரியல. இப்படித்தான் அந்த சரோசாவும்; அவளுக்கு இருக்கிற பிரச்சினையிலே அவள் மற்றவங்களுக்குக் கொடுக்கிற பிரச்சினைகளை நினைத்துப் பார்க்கல. அவளை மாதிரி ஆட்களுக்கு திரும்பிப் பார்க்க கடந்த காலம் இல்ல. ஏறிட்டுப் பார்க்க எதிர்காலம் இல்ல. நிற்பதற்கு நிகழ்காலமும் இல்ல. முக்காலமும் இல்லாத அஞ்ஞானிப் பொண்ணு. எப்படி கோழியை அடித்துச் சாப்பிடுவதை நாம் இயல்பாய் நினைக்கிறோமோ, அப்படி அவளும், திருடுறதை, தப்பாய் நினைக்கல. அது தப்பு என்கிற உணர்வே இல்லாதவள். இவள மாதிரி ஆட்களுக்கு மனசுன்னு எதுவும் கிடையாது. அது, பிறந்தபோதே வயிற்றுக்குள் போயிடும். இவளோட நிலைமைய யோசிச்சுப் பார். ஆட்டோக்காரனுக்குப் பணம் கொடுக்கிற நினைப்பில்லாத உன் பின்னணியிலே அவளுக்காகவும் யோசிச்சுப்பார்; நமக்காவது யோசிக்க நேரமிருக்கு; அவளுக்கு அதுக்கு நேரமும் இல்ல, வேளையும் வரல. அவளை மாதிரி ஆளுங்க யோசிக்க ஆரம்பிச்சா, அப்புறம் நாம் இந்த சமுதாய அமைப்பைப் பற்றி பயப்பிராந்தியோட யோசிக்க வேண்டிய நிலைமை ஏற்படும்."

இளங்கோ, யோசிப்பது போல் முகத்தைத் தூக்கினான். அவன் முன்னால் சரோசாவின் உப்பிப்போன முகம் உரசியது.

அவள் ரத்தத் துளிகள் அவன் கண்களுக்குள் ஊடுருவுவது போல் இருந்தது. மாடியை அண்ணாந்து பார்த்து, அவள் வைக்கப்பட்டிருக்கக் கூடிய இடத்தையே பார்த்தான். பிறகு திருமலையப்பனைப் பார்த்து கைகளைப் பின்னிப் பின்னி எடுத்தான். அவரும் பேச்சால் பின்னினார் :

“நானும் இந்த சரோசாவைப் பற்றி விசாரித்தேன். சாராயக்காரிதான்; சின்னத் திருடி. அப்பனுக்காகத் திருடுறாளே தவிர, நடுத்தர வர்க்கத்தில், ஆபீஸர் அப்பன்களையே அரசாங்கத்தைத் திருட வைக்கிறாங்களே, அப்படி இல்ல. உள்ளே இருக்க வேண்டியவள் தான்; ஆனால், அதுவும் ஒரு வாரம், இரண்டு வாரத்திற்குத்தான். நிச்சயம் அவள் குழந்தையைத் திருடியிருக்க மாட்டாள். அந்தத் தகுதி இன்னும் அவளுக்கு வரல. ஆனால், இப்போவே அவள் மேலே குழந்தையைக் கொன்றதாய் குற்றஞ்சாட்டப் போறாங்க. இந்த நாட்டில் ஒரு ஏழைக்கு குற்றம் செய்யவில்லை என்பதை நிரூபிக்க வேண்டிய கட்டாயம் இருக்கு. பிறத்தியார் செய்த குற்றங்களையும் இவள் தலையில போடுவாங்க. கண்டுபிடிக்க முடியாத குற்றத்திற்கு இவள் காரணமாயிடுவாள். கடைசியில் அவளுக்கு ஆயுள் தண்டனைதான் கிடைக்கப் போகுது. ஒரு சின்னக்குற்றம் செய்து விட்டால் அப்புறம், செய்யாத பெரிய குற்றங்களுக்கு பொறுப்பு வகிக்கணும்; இது தான் இன்றைய நிலைமை.”

“நான் என்ன சார் செய்யணும்? நீங்க என்ன சொன்னாலும் கேட்கிறேன் சார்.”

“எப்படியாவது, அவளைக் காப்பாற்றப் பாரு. அவளுக்காக இல்லாட்டியும் அவள் அப்பாவுக்காகக் கொஞ்சம் விட்டுக் கொடு. எந்த செல்வாக்கைக் கொண்டு வந்தாயோ, அது மூலமே அவளுக்கு விடுதலை வாங்கிக் கொடு. இப்பவே... இன்ஸ்பெக்டர் கிட்டே நான் சொன்னேன்னு சொல்லாம, நீயே கேட்கிற மாதிரி கேளு.”

அடிகொடுத்த சரோசாவை, அடிபட்ட சரோசாவாகப் பார்த்த வேளையிலே இருந்து, இளங்கோ மனமும் அடிபட்டு வீங்கியது. குழந்தையை, அவள் கடத்தியிருப்பாள் என்று அவனும் நம்பவில்லை. மனம் வலிப்பு வந்தது போல் இழுத்தது. நெஞ்சுக்குள்ளே ஒன்றும், கண்ணுக்குள்ளே ஒன்றும், எதிர் எதிராய் இழுத்துக் கொண்டன. திருமலையப்பன் கொடுத்த உந்தலில், அவன் இன்ஸ்பெக்டர் இருந்த மாடிக்கப் படி ஏறினான். அந்த இன்ஸ்பெக்டர் முன்னால் போய் நின்றான்.

இன்ஸ்பெக்டர், ஒரு மைக்கில் எள்ளும் கொள்ளுமாய் பேசிக் கொண்டிருந்தார். மீண்டும் அந்த மைக் அலறியபோது, அதற்குப் பதில் அளித்துக் கொண்டிருந்தார். பிறகு, "நான் இன்ஸ்பெக்டர் இல்லேய்யா; இந்த ஏசியும், டீசியும் இருக்கிற வரைக்கும், நான் குளோரிபைடு கான்ஸ்டபிள்தான்" என்று கிரைம் சப்-இன்ஸ்பெக்டரைப் பார்த்துச் சொன்னார். அந்த கிரைமோ, அப்படியானால் அந்த இன்ஸ்பெக்டர், தனக்கு ஒரு சல்யூட் அடிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பவர் போல் தலையை ஆட்டினார்.

இளங்கோ லேசாய் இருமினான்; இன்ஸ்பெக்டர் கேட்டார்:

"என்னப்பா வேணும்?"

"நான் டெபுடி கமிஷனருக்கு வேண்டிய அங்கிளோட அப்போ வந்தேனே... சரோசாவை விட்டுடுங்க சார்."

"ஏய்யா, டெபுடி கமிஷனருக்குத்தான் நான் சல்யூட் அடிக்கணும்... உனக்கும் அடிக்கணுமா? என்னய்யா நீ... பரமசிவம் கழுத்துப் பாம்பு மாதிரி ஆடுறியா? அவளுக்கும் உனக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கு. டெபுடி கமிஷனர் கிட்டே நானே பேசுறேன். சரி இப்போ மரியாதையா வீடு போயிச்சேரு. சரோசாவை எப்படி டீல் பண்ணணும்னு எங்களுக்குத் தெரியும்."

இளங்கோ, இன்ஸ்பெக்டரை மருவி மருவிப் பார்த்துவிட்டு, நடந்து வெளியே வந்தான். வலது பக்கம் ஒரு முனகல் சத்தம்

கேட்டது. சரோசாதான். 'நாயினா, நாயினா' என்ற குரல்; 'டமால், டமால்' என்ற சத்தம். 'அடிக்காதீங்க, அடிக்காதீங்க' என்ற அலறல். "கொயந்த இருக்கற இடத்தைக் காட்டுறேன். காட்டுறேன்' என்ற கூப்பாடு. "அய்யோ, என் வயிறு போச்சே" என்ற வார்த்தை. அப்புறம் நெடிய மௌனம். மூச்சு முட்டியதோ, மூச்சு அடங்கிப் போனாளோ? இளங்கோ, அந்த ஓலமிட்ட உள்ளறைக்குள் போகப்போவது போல் நடந்தான். இதற்குள் இன்ஸ்பெக்டரின் திட்டுக்களை அவன் வாங்கியபோது, பார்த்துக் கொண்டு நின்ற ஒரு போலீஸ்காரர் அவனைக் கழுத்தைப் பிடித்துத் தள்ள வந்தார். இளங்கோ, கீழே ஓடினான். இதனால் அவர் கெட்ட வார்த்தையில் அவன் அம்மாவை அர்ச்சித்தது அவனுக்குக் கேட்கவில்லை.

இளங்கோ, காவல்நிலைய வளாகத்திற்குவெளியே வந்தான். கண்ட கண்ட இடமெல்லாம் சுற்றினான். பிறகு, வீட்டுக்கு வந்தான். வாசலிலேயே, தாய்க்காரி வரவேற்றாள். அவனை பிரமிப்போடு பார்த்தபடி ஒரு சேதி சொன்னாள் :

"பாமாவோட அப்பா, ரமணன் சார், இப்போதான் டெலிபோன் செய்தார். இன்னக்கி, அசோசியேசன் கூட்டம் சாயங்காலம் நடக்கப் போகுதாம். சரோசாவுக்கும் லோக்கல் போலீஸ் ஸ்டேஷனுக்கும் ஒரு உறவு இருக்கிறதால, அவள் குழந்தையைக் கொன்ன குற்றத்தை கமிஷனர் ஆபீஸ் கிரைம் பிராஞ்ச் விசாரிக்கணுமுன்னு தீர்மானம் போடப் போறாங்களாம். ஏண்டா, நல்லா உதச்சிருப்பாங்களே? ரத்தம் வரும்படியா அடிச்சாங்களாமே? இப்பதான் என் மனசு நிம்மதியாச்சு. அவளுக்கு, கூடுனது தூக்குத் தண்டனை, குறைஞ்சது ஆயுள் தண்டனை... இரண்டிலே ஒண்ணு கிடைக்காமல் போகாது. ரமணன் சார் சொல்லிட்டாரு... எங்கேடா போறே?"

# 9

மிஸ்டர் ரமணன் வீட்டு மொட்டை மாடி பொங்கி வழிந்தது. வீட்டிற்குக் கீழே, புல்வெளி இல்லாத தரைவெளியில் மாருதிகளும், அம்பாஸிடர்களும், இடைஇடையே ஸ்கூட்டர்களும் அங்கே தரையே இல்லாதது போல் வியாபித்து நின்றன. இடம் போதாமல் சாலையில் கூட ஒரே வாகனக் குவியல். பாமா, சமையல் அறையில் கேசரி கிண்டிக் கொண்டிருக்கும் சமையல்காரர்களை கண்களால் கிளறிவிட்டுக் கொண்டே, மாடிக்கும், மனைக்குமாக உருண்டோடிக் கொண்டிருந்தாள். எல்லோரும் அவள் அப்படிச் செயல்படுவதைப் பார்த்துவிட்டு மன துக்குள்ளும், வெளிப்படையாகவும் பாராட்டினார்கள ஆனால், அவளோ சமையல் அறைக்குள் வரும் சாக்கில் அங்கிருந்த ஜன்னல் வழியாக இளங்கோ அகப்படுகிறானா என்று பார்த்தாள். மொட்டை மாடிக்குப் போய் அங்கு திரண்டு இருந்தவர்களைப் பார்த்து, வாய் குசலம் விசாரித்தாலும், கண்கள் இளங்கோவைத் தேடின. காதல் கண்மூடித்தனமானது என்பதைக் காட்டுவது போல், அவன் மேலே இருப்பான் என்பது போல் ஆகாயத்தைக்கூடப் பார்த்தாள்.

ரமணன் வீட்டு மொட்டை மாடி அலங்காரம் செய்யப் பட்டதுபோல் தோன்றியது. சபாரி போட்டவர்கள், தலைக்கு டை அடித்து, காதோரம் நரைமுடி காட்டி, 'சுயமுடி' வெளிப்பட நின்றவர்கள், அறுபது வயது 'டீசட்'டைகள், பட்டுப் புடவைகள், சல்வார் கம்சுகள், பாவாடைத் தாவணிகள்...

த.வ.ந.ச. வின் கூட்டம் - அதாவது தமிழ்த்தாய் நகர் வசிப்போர் நல்வாழ்வு சங்கத்தின் அவசரக் கூட்டம் அங்கே நடக்கப் போகிறது.

இப்போது இந்த தமிழ்த்தாய் நகர், சென்னை பெருநகர் சீமாட்டிக்கு மையிட்ட கண்ணாய் விளங்குகிறது. ஐ.ஏ.எஸ் அதிகாரிகளாலும், கெஜட்ட் ஆபீஸர்களாலும், பாரின் ரிட்டன்களாலும் பளபளக்கிறது. ஆனால் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, இந்தப் பகுதி, நகைநட்டுப் போடாத ஒரு நாட்டுப்புறப் பெண்ணாகவே இருந்தது. அப்போது பிழைக்கத் தெரிந்த ஒரு பெட்டிக் கடை மலையாளி, ரெவின்யூ இன்ஸ்பெக்டரை மாமூலாக்கி, இருபது கிரெளண்ட் புறம்போக்கு இடத்தை பிளாட் போட்டார். மற்றவர்களையும் அப்படிப் போட வைத்தார். பிளாட் போட இடம் கிடைக்காத ஒரு ஆசாமி கொடுத்த மனுவின் அடிப்படையில், அரசாங்கம், இந்த பிளாட்டுகளை முடக்கப் போனது. ஆனால், பிளாட்காரர்களோ, அந்த பிளாட்டுகளை, எந்த அதிகாரிகளை மடக்கிப் போட வேண்டுமோ, அவர்களுக்கே பாதியை, மலிவு விலை மது விலையில் கொடுத்துவிட்டார்கள். இதனால், பொது மக்களைத் தவிர எல்லோருக்கும் லாபம். மடக்கிப் போட்டவர்களுக்கு கிரெளண்டுக்கு மூன்று லட்சம் என்றால், முடக்கப் போனவர்களுக்கும் மூன்று லட்சம். ஆகையால் இந்தப் பகுதியை 'வேலியே பயிரை மேய்ந்த நகர்' என்று சொல்லலாம். இங்கே துவக்கத்தில் குடியிருக்க வந்தவர்கள், அடிப்படை வசதிகளை அரசிடம் கேட்பதற்காக, ஒரு சங்கத்தை வைத்தார்கள். ஐ.ஏ.எஸ். அதிகாரிகளுக்கு வேலைப்பளு அதிகமாக இருந்ததால், வேலை வெட்டி இல்லாத மிஸ்டர் ரமணன், தன்னைத் தானே தலைவராகப் பிரகடனப் படுத்த முடிந்தது. அடிப்படை வசதிகள் கிடைத்ததும், ரமணனும், அந்தச் சங்கத்தின் லெட்டர் பேடுமே மிஞ்சின. ரமணன் மட்டுமே சந்தா கட்டுகிறார்.

ஆனால், இன்றைக்குப் பார்த்து ரமணனுக்கு மௌசு வந்துவிட்டது. 'திடீர் நகர்' மாதிரி, அவரும் திடீர் பிரமுகர் ஆகிவிட்டார். காவல் நிலையத்தில் சரோசாவுக்கு அடிவாங்கிக்

கொடுத்து விட்டு, அலுவலகம் போனதும், தமிழ்த்தாய் நகர் மாமிகள் ஒவ்வொருவருக்கும் டெலிபோன் செய்தார். கொலைகாரியான சரோசாவை, போலீசார், விரைவில் விடுதலை செய்துவிடுவார்கள் என்றும், அப்படி அவள் வெளியே வந்தால், ஒவ்வொருத்தியின் குழந்தையும் கடத்தப்படும் என்றும் எச்சரித்தார். "ஒங்க பையன் ரகு, நாளைக்கு உயிரோடு இருப்பான் என்கிறது நிச்சயமில்லை" என்று ஒவ்வொரு வீட்டிலும், அந்த வீட்டுக் குழந்தையின் பெயரைச் சொல்லி அபாயம் சொன்னார். இந்த நிலைமையைத் தடுக்க வேண்டும் என்றால், த.வ.ந.ச. வின் அவசரக் கூட்டம் உடனடியாகக் கூட்டப்பட்டு, ஐ.ஏ.எஸ். அதிகாரிகளின் கையெழுத்தோடு ஒரு மனு போலீஸ் கமிஷனருக்குப் போகவேண்டும் என்றார். உடனே, தாய்மார்களும், அலுவலகங்களில் இருந்த தத்தம் கணவர்களைப் பயப்படுத்தியும், பயமுறுத்தியும், அவசரக் கூட்டத்திற்கு இணங்க வைத்தார்கள்.

கூட்டம் ஆரம்பமாகப் போனது. அப்போது ஒருத்தர், ஒரு கேள்வியைக் கேட்டார் :

"என் வீட்டுலேயும், இன்னொருத்தர் வீட்டுலேயும் ஜன்னலுக்கு மேலே கொக்கி வச்ச கம்புங்க சாத்தப்பட்டு இருக்கு... காரணம் தெரியுமா?"

"ஆபீஸ்லே தான் குழப்படி செய்யுறீங்க; இங்கேயுமா? சஸ்பென்ஸ் எதுக்கு?"

"சொல்றேன் சார். முன்னால திருட்டுப் பசங்க வந்து ஏதாவது ஒரு கம்ப எடுத்து ஜன்னலுக்குள்ளே விட்டு, துணிமணிகளை எடுத்துட்டுப் போவாங்க. இதைப் பக்கத்து வீட்டுக்காரங்க கண்டுக்கலை... இதனாலே, இப்ப திருடங்க எந்தச் சமயத்திலே வேணுமுன்னாலும், திருடறதுக்கு வசதியாய், ஜன்னலுக்கு மேலே கம்பயே சாத்திட்டுப் போறாங்க. என்னய்யா நகர்... அதுவும் தமிழ்த்தாய் நகரு?"

கம்புக்காரர், கூட்டத்திடம் பதிலை எதிர்பார்த்தபோது, ஒரு ஆடிட்டர் - வம்புக்காரர் - ஒரு பிரச்சினையைக் கிளப்பினார்.

"சங்கம் ஆரம்பிச்சு, பதினைந்து வருஷமாச்சு ; ஆனால் தலைவர் ரமணன் கணக்குக் காட்டல."

ரமணன் பொங்கி எழுந்தார் : "நான் ராஜினாமா செய்யப் போறேன்; என்னோட தியாகம் வீணாயிட்டு."

"கூடாது. ஒங்களையும், த.வ.ந.சவையும் யாராலும் பிரிக்க முடியாது. ராஜினாமா செய்யப்படாது. நம்முடைய அரசியல் பாரம்பரியம் மாதிரி, சாகிற வரைக்கும் நீங்கதான் தலைவர்."

"அப்போ, சங்கம்தான் முதலில் சாகும்."

"நீங்க படிச்சவங்ளா... ஆபீஸருங்களா? உங்களுக்கும், சினிமா தியேட்டர்லே விசில் அடிக்கிறவங்களுக்கும் என்னய்யா வித்தியாசம்?"

கடையில் சொன்னவர், வேறு உறுப்பினராக இருந்திருந்தால், அவரை உப்பு வைத்து ஊறவைத்திருப்பார்கள். ஆனால், சொன்னவர், போலீஸ் விஜிலென்ஸ் ஆபீஸர்; அதிகாரிகளின் ஊழல்களைக் கண்டுபிடிக்கும் பூதக் கண்ணாடி. அவரைப் பூதமாக நினைத்து எல்லோரும் வாயை மூடிக்கொண்ட போதும், அவர் அதட்டினார் :

"மிஸ்டர் ரமணன்! தீர்மானத்தைப் படியுங்க."

உயிரோடு சமாதி கட்டப்பட்டது போல், தலைவர் நாற்காலியில் உட்கார வைத்துக் கொண்டே, தனது பதவியைப் பறித்த அந்த விஜிலென்ஸ் அதிகாரியை வேண்டாவெறுப்பாய் பார்த்துக் கொண்டே, ரமணன் தீர்மான நகலைப் படித்தார். தமிழ்த்தாய் நகரில், கொலைக் குற்றம் உட்பட பல குற்றங்கள் நடப்பதாகவும், அதற்கு அந்த ஏரியா போலீஸ் உடன்போகிறது

என்றும், ஆகையால், சரோசா நடத்திய கொலையை போலீஸ் கமிஷனரின் கிரைம் பிராஞ்ச் விசாரிக்க வேண்டும் என்றும் அந்தத் தீர்மானம் வற்புறுத்தியது. அதுவரைக்கும் சரோசாவை ஜாமீனில் வெளிவர முடியாத குண்டர்கள் தடுப்புச் சட்டத்தில் சிறையில் போட வேண்டும் என்றும் தீர்மானம் வற்புறுத்தியது. எல்லோரும் கைதட்டினார்கள்.

அந்தச் சமயத்தில், இளங்கோவையும், சுப்பையாவையும் 'தள்ளிக் கொண்டு' பாக்கியம் வந்தாள்.

சுப்பையாவை கூட்டிக்கொண்டு வந்தது பாக்கியத்துக்கு ரோதனையாய் போயிற்று. சுப்பையா கர்ஜித்தார் :

"பெரிசாய் தீர்மானம் போட்டுட்டிங்க. அந்த ரவுடிப் பொண்ணு உள்ளே போயிட்டா, என் பையன் வெளியிலே இருக்க முடியுமா? அப்புறம், நான் பிள்ளைக்கு எங்கேய்யா போவேன்? இவனுக்கு பூனைப்படை பாதுகாப்புக் கொடுத்தாலும், சேரி ரவுடிங்க இவனை விட்டு வைப்பாங்களா? வேணுமுன்னா பாருங்க... இங்கே வந்த சோடா பாட்டில் அடிக்கப் போறாங்க. உங்க கண்ணுலே அது விழுந்து ஆஸ்பத்திரியிலே இருக்கப் போறீங்க. என் வாக்குத் தப்பாது."

பாக்கியம்கூட பயந்து போய், கணவனைப் பயமுறுத்துவதை விட்டு விட்டாள். எல்லோரும் அப்போதே கண்ணுக்குள் சோடா பாட்டில் விழுந்த மாதிரி கண்களை மூடிக்கொண்டார்கள். சில பெண்கள் தத்தம் கணவன்மார்களை வீட்டிற்குக் கூப்பிட்டார்கள். இந்த நடுத்தர வர்க்கம் இப்படி அல்லாடிக் கொண்டிருந்தபோது...

பூக்காரி ருக்குமணி மேலே வந்தாள். கையிலே ஒரு வட்டக்கூடை. அதற்குள் பல்வேறு வகைப் பூக்கள், பாம்புகள் மாதிரி சுருண்டு கிடந்தன. கையில் கனகாம்பரப் பூச்சரங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. ஒவ்வொருத்திக்கும் பூ அளந்தபடியே வாய் அளந்தாள். முப்பது வயதுக்காரி. முழுசான அழகு.

"போங்கம்மா... ஆட்டோக்காரனுக்குப் பயந்து அஞ்சு ரூபாய் அதிகமா கொடுப்பீங்க; ஆனால் பூக்காரிக்கிட்ட போய், அஞ்சு பைசாவுக்கு பேரம் பேசுவீங்க."

ருக்குமணி, அந்தக் கூட்டத்தைப் பார்த்துவிட்டு, ஒரு பாவாடை, தாவணியிடம் விளக்கம் கேட்டாள். அவள் சொன்னதை உள் வாங்கிக் கொண்டு, அந்தக் கூட்டத்தை வாக்காளர்களாக நினைத்து, வாதிட்டாள் :

"ஏன் சாரே... தெரியாமத்தான் கேக்கேன்... என் கொழுந்த, நான் பெத்த ஒரே கஸ்மாலம் காணாமப் பூட்டான்னு சொன்னேன். காது கொடுத்துக் கேட்டீங்களா? நானும் இந்த ஏரியாக்காரிதானே? என் பிள்ளாண்டானுக்கு இப்படி ஒரு கூட்டம் போட்டீங்களா? ஏதோ பிசாத்து இரும்பும், பன்னாட கம்பியும், என் கொயந்தைய விட உங்களுக்குப் பெரிசாப் போச்சா? அதோ, பெரிசா பேசுறாங்களே பாக்கியம் அம்மா, அவங்ககிட்டே கொயந்தய காணலேன்னு அழுதேன். என் வீட்டில ஒப்பாரி வைக்காதேன்னாங்க. அதோ தலவரு, ரமணன் சாரு, அவர்கிட்டே பஸ் ஸ்டாண்டுலே வச்சு சொன்னேன். அவர் என்னடான்னா... 'பஸ் வருது, அப்புறம் பேசிக்கலாமுன்னார். இப்படி நாறிப்போன உங்க ஏரியாவை இன்னும் பூவாலேயே மணக்க வைக்கேன்."

விஜிலென்ஸ் ஆபீசர், ரமணனின் காதைக் கடித்தார். அவளை வைத்து, போலீஸ் கமிஷனருக்கு ஒரு கடிதம் எழுதச் செய்ய வேண்டும் என்றார். சரோசா தன் வீட்டிற்கு அடிக்கடி வருபவள் என்றும், அவள்தான், குழந்தையை கடத்தியிருக்க வேண்டும் என்றும் எழுதி, கையெழுத்துப் போடச்சொல்ல வேண்டும் என்றார். இந்த விஜிலென்ஸ் ஆபீஸர், சங்கத்தின் தலைமைப் பதவி மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரக்கூடாது என்பதற்காக, ரமணன் எழுந்தார். ருக்குமணியை நெருங்கினார். அவள் கோபத்தோடு நின்றபோது, அவள் கையை

பட்டும் படாமலும் பிடித்துக் கொண்டே ஏதோ காதுக்குள் கிசுகிசுத்தார். அவள், அங்குமிங்குமாய் தலையை ஆட்டி, கத்தப்போன போது, ரமணன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு, படி இறங்கினார்.

இளங்கோவிற்கு ஏதோ ஒன்று பட்டது. தற்செயலாய் எழுவது போல் எழுந்து சுவர் பக்கம் போய், கீழே எட்டிப் பார்த்தான். அங்கே, மிஸ்டர் ரமணன், அவளுக்கு ஒரு தட்டில் கேசரியை நீட்டிக் கொண்டே காதுக்குள் கிசுகிசுத்தார். அவளோ அந்தத் தட்டை வாங்கித் தரையில் வைத்து விட்டுக் கத்தப் போனாள். பிறகு, அவரை திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே அந்த வீட்டை விட்டு வெளியேறினாள். பூப்போல நடப்பவள் பூகம்பமாய் நடந்து கொண்டிருந்தாள்.

## 10

இளங்கோ, அந்தப் பிள்ளையார் கோயிலுக்கு வந்து ஒருமணி நேரத்திற்கும் அதிகமாகி விட்டது என்பது, அவனைத் தெரிந்து வைத்திருந்த அந்த ஏரியாப் பெண்களுக்குத் தெரிந்ததே தவிர, அவனுக்குத் தெரியவில்லை. அக்கம் பக்கத்து வீடுகளில் தெருவை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த 'சின்னதுகள், 'சிறிசுகளிடம்' சரோசா என்ற ரவுடிப் பெண்ணிடம், அவன் எப்படி அடிபட்டான் என்பதை விவரித்துக் கொண்டிருந்தார்கள். அவனை கதாநாயகனுக்கு எதிர்மாறானவன் போலவும் பார்த்தார்கள்.

இளங்கோவோ, அந்த நீண்ட நெடிய தெருவில், இரு முனைகளையும் மாறி மாறிப் பார்த்தான். பூக்காரி ருக்குமணியைக் காணவில்லை. இந்தக் கோயிலுக்கு ஒரு ஓரமாய் உட்கார்ந்தும்,

நின்றும் கொண்டே, பூ வாங்காதவர்களையும், அவள் வாங்க வைப்பதைப் பார்த்திருக்கிறான். பத்து பைசா உண்டியலில் போட்டுவிட்டுப் போகிறவர்களையும், "ஏன் சாமி, இன்னிக்கு சங்கடஹர சதுர்த்தியாமே" என்று அந்த வார்த்தையை சங்கடப்பட்டு உச்சரித்துச் சொல்வாள். அவள் பேச்சு காதில் விழாத அளவுக்கு பிள்ளையாரிடம் பரவசத்தோடு ஐக்கியப் பட்டவர்கள் போல், 'பாவலா' செய்பவர்களைப் பார்த்து, "ஏன் சாமி, நான் கையிலதான் பூ வைச்சிருக்கேன், காதுல இல்லை. இந்த பிள்ளையார் பத்துப் பைசா தானா பெறும்" என்பாள். அதனால், இவள் இருப்பதனாலேயே பல பக்தகோடிகள் வருவதில்லை. இன்னும் சிலர் பிள்ளையாரை நோக்கி வந்து கொண்டிருப்பார்கள். அவளைப் பார்த்தும் 'பகுத்தறிவாதிகள்' போல் பிள்ளையாரை ஏறிட்டுப் பாராமலேயே எதிர்த் திசையைப் பார்த்தபடி போவார்கள்.

இதற்கு மேலேயும், அங்கே நிற்பது இளங்கோவிற்கு என்னவோ போல் இருந்தது. அந்த இடத்தை விட்டு, அகலப்போன போது, பூசாரி பிள்ளையார் படம் போட்ட திரைச்சீலையை இழுத்து விட்டு, தன்னையும், பிள்ளையாரையும் மறைத்துக் கொண்டார். உள்ளே மணி அடிக்கும் சத்தம் கேட்டது. இதற்காகவே காத்திருந்தது போல், அக்கம் பக்கத்துக் கும்பல் கூடி, ஆண் வரிசையாகவும், பெண் வரிசையாகவும் பிரிந்தது. அனைவருடைய கவனமும் அந்தத் திரை எப்போது விலகும் என்பதிலேயே இருந்தது. சிலருக்கு பிள்ளையாருக்குப் பதிலாக 23ஆம் நம்பர் பஸ்ஸே மனதில் வந்த நின்றது. பலர் மனதிற்குள், தாமதப்படுத்தும் அந்த பூசாரியை திட்டிக் கொண்டார்கள். ஆனால், இளங்கோவிற்கோ சற்று நிம்மதி; இன்னும் சிறிது நேரம் அங்கேயே நிற்கலாம்.

இதற்கிடையே, மிஸ்டர். ரமணன் அந்தப் பக்கம் வந்தார். இளங்கோவிற்குத் தெரியும், அவரிடம் மாட்டிக்கொண்டால்,

சரோசா வழக்கில் கண்டிப்புத் தேவை என்று அசோஸியேஷன் போட்ட தீர்மானங்களை நகல் எடுக்கச் சொல்வார். பிறகு போலீஸ் கமிஷனரிடம் சங்கத்தின் பிரதிநிதிக்குழு உறுப்பினராக அல்ல, உதவியாளனாக வரச்சொல்லுவார். இதில் அவனுக்கு சம்மதமில்லை. நேற்று பூக்காரியிடம் அவர் பேசிய விதமும், அவள் வேகவேகமாய் போன விதமும் சரோசாவை காப்பாற்றக்கூடும் என்று நினைத்தான். ஆகையால், ரமணனின் தலையைப் பார்த்ததும், தனது தலையை நெருப்புக் கோழி மாதிரி இதர மனிதத் தலைகளுக்கு மத்தியில் மூழ்கடித்துக் கொண்டான். ஆனால், ரமணனோ அந்தப் பிள்ளையாரை திரும்பிப் பாராமலேயே போனார். அவருக்கு இந்தத் 'தெரு பிள்ளையார்' பிடிக்காது. பக்கத்துத் தெருவில் இருக்கும் கோபுரம் - கலசம் என்ற பணக்காரப் பிள்ளையாரிடம்தான், போவார். போனார்.

மிஸ்டர். ரமணன் போகவும், பூசாரி திரைச் சீலையை விலக்கி, கர்ப்பூரம் ஏற்றவும் சரியாக இருந்தது. பிரபஞ்சம் முழுவதும் நட்சத்திரக் குவியல்களோடு, காட்சி காட்டுவது போல் கற்பூர ஜோதி ஒளிர்ந்தது. அதில் அந்த கல்லுப்பிள்ளையார் கரைந்து ஜோதிப் பிள்ளையார் தோன்றியது போல் இருந்தது. இது புரியாத இளங்கோ, வழக்கம் போல் தெருவைப் பார்த்தான். எப்போது இந்த ருக்குமணி வந்தாள்? கோவில் மேட்டுக்குக் கீழே இடுப்பில் உள்ள கூடை தரையிறங்க, ருக்குமணி கண்களை மூடியபடி நின்றாள். அவள் பக்கத்தில் செம்பட்டை முடி கொண்ட ஒரு ஆறு வயதுப் பயல், அம்மாவின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டிருந்தான்.

ருக்குமணி, விபூதி வாங்குவதற்குக் காத்திராமல் தன்னை தானே பிள்ளையார் என்பது போல் அனுமானித்து நின்ற அந்தப் பூசாரியை ஏறிட்டுப் பார்க்காமலேயே ருக்குமணியை பின்தொடர்ந்தான். பல பக்தர்களும், பக்தைகளும் விபூதி குங்குமம்

வாங்குவது பற்றிக் கவலைப்படாமல் முன்னால் போன ருக்குமணியையும், பின்னால் பாய்ந்த இளங்கோவையும், கள்ளத்தனமாய் பார்த்தார்கள்.

இளங்கோவால், ருக்குமணியை அந்த சாலையின் முனையில்தான் பிடிக்க முடிந்தது.

அவள், இன்னொரு தெருவுக்குள் திரும்பும் வரைக்கும், அவள் பின்னாலேயே நடந்தான். பிறகு அம்புபோல் கூர்மைப்பட்ட இரண்டு தெருக்களின் முனையில் அவள் நின்றபோது, அவள் முன்னால் போய் நின்றான். ருக்குமணி, அவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். பப்பாளிப் பழத்திற்கு கருப்பு வர்ணம் பூசியது போன்ற முகம். வேல் போல் கூர்மையான விரல்கள். சிரிக்கப் போகிறேன் பார் என்பது மாதிரியான குவிந்த உதடுகள். அவனைப் பார்த்ததும் மாராப்பை, சரி செய்தபடியே, 'அறியாத' பிள்ளையாண்டானிடம் பேச விரும்பாதவள் போல், அதே சமயம் அவன் பேச்னால் பேசித் தொலைக்கத் தயாராக இருப்பது போல் நின்றாள். இளங்கோ கேட்டான் :

"ஒன்னோட... மன்னிக்கணும், உங்களோட இந்தப் பையன் காணாமல் போனவனா... இல்ல..."

"அப்போ நீ அந்த கஸ்மாலம் சாருக்கு, தூதா வந்திருக்கே, இல்லியா? வழிய விடுய்யா."

"எந்த கஸ்மாலம்?"

"அந்தத் தெருவிலே எல்லாமே கஸ்மாலம்தான். ஆனால் அந்த ரமணன் சாரு இருக்காரே, அவரு கஸ்மாலத்துலேயும் படே கஸ்மாலம். அந்தக் கதையே வாணாம்."

"எந்த கதைய?"

"உயிரோட இருக்கிற என் ராமுப் பயல கொஞ்ச நாளைக்கி மறைச்சுவச்சி, காணாமப் போனதா பழையபடியும் போலீஸ்ல

சொல்லணுமுன்னு அந்த பெரிய கஸ்மாலம் சொல்லிச்சே, அந்தக் கதையத்தான். பெரிய மனுசனா அவன்? ஒரு பொண்ண வேற பெத்திருக்கான். உயிரோடிருக்கிற இந்தப் பயல, சரோசா என்கிறவ கொன்னாலும் கொன்னுருப்பான்னு போலீஸ்ல சொல்லணுமாம். எப்படி இருக்குது கத? இதுக்கு நீ ஜால்ராவா?"

"காணாமப் போன உன் பையன் கிடைச்சது எப்படி?"

"ஏன்யா, வருத்தப்பட்டுக் கேக்கிற? ஊட்ல என்னோட 'அது...' பாவி - சாராயத்த குடிச்சா ஒயுங்கா குடிக்கப்புடாது? பாதிய வச்சிட்டு, படுத்திட்டு. இந்தப் பயல் என்னாடான்னா, அது தேங்கா தண்ணின்னு குடிச்சிட்டானாம். சின்னப்பாதேவர் படத்துல ஒரு குட்டி யானை சாராயத்தைக் குடிச்சிட்டு அல்லார்க்கும் 'டேக்கா' கொடுக்குமே, அப்படி கொடுத்துட்டான். எப்படியோ பஸ் ஏறி தொரப்பாக்கத்துல கீற எங்க அண்ணாத்த வூட்டுக்குப் பூட்டான். என் அண்ணி என்னடான்னா, நானு, நாலு நாளைக்கி அவஸ்த படட்டுமுன்னு பயல அங்கேயே வச்சிட்டாள். போன வாரம்தான் உட்டாள். இந்தப் பயல காணலன்னு நான் பட்டபாடு, எனக்குத்தான் தெரியும். போலீசுக்குப் போனா, நானுதான் கொயந்தய கொன்னுட்டு அத மறைக்கிறதுக்குப் போனது மாதிரி பிளேட்ட மாத்துனானுங்க."

ருக்குமணியின் பையன், பழைய நினைப்பாலோ என்னவோ பக்கத்தில் இருந்த ஒரு ஒயின் ஷாப்பையே ஏக்கத்தோடு பார்த்தபோது, இளங்கோ பரவசமானான். என்ன செய்கிறோம் என்பது புரியாமலேயே, அவள் கரங்கள் இரண்டையும் பிடித்துக் கொண்டு, அவளை தாறுமாறாக இழுத்தான். உடனே அவள் கூச்சலிட்ட போது, அந்தக் கரங்களை விட்டு, குழந்தை மாதிரி கெஞ்சினான்.

"ஒருத்திய நிசமாவே கொலைத் தண்டனையிலிருந்து காப்பாத்திட்டேம்மா. ஒன் பையன கொன்னதா, சரோசா

என்கிறவளை போலீஸ் பிடிச்சு வைச்சிருக்குது. இப்போ நீயும், நானுமா டெப்டி கமிஷனரைப் பார்த்து நிசத்த சொல்லணும்."

"இந்த போலீஸ் கதயே வேணாம். கோர்ட்ல வேணுமுன்னா சாட்சிக்கு வாரேன்."

"அப்படிச் சொல்லப்படாதும்மா. உயிரோட இருக்கிற ஒன் கொழுந்தய கொன்னதா சொல்லி, சரோசாவுக்குத் தூக்குத் தண்டனை கிடைத்தால் அந்தப் பழி ஒனக்கில்லயா? ஒருத்தி செய்யாத தப்புக்கு அவஸ்த படணுமா? இந்த அநியாயத்த நாம ரெண்டு பேரும் டெப்டி கமிஷனருக்கிட்ட சொல்ல வேண்டாமா?"

"டெபதின்னா அது யாரு?"

"பெரிய போலீஸ் அதிகாரி."

"போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரை விடவா?"

"மேலே மேலே..."

"இன்ஸ்பெக்டரை விடவா?"

"இன்ஸ்பெக்டருக்கும் மேலே ஏ.சி. அதுக்கு மேலே. டி.சி."

"அம்மாடியோ! அவர கண்ணால பார்க்க முடியுமா?"

"நிச்சயமா..."

பூக்கார ருக்குமணிக்கு, இதயம் குதிபோட்டது. சுற்றுப்புறச் சூழலில் கான்ஸ்டபிளை ஜமீன்தாராகவும், சப்-இன்ஸ்பெக்டரை ராசாவாகவும், இன்ஸ்பெக்டரை ராசாதி ராசாவாகவும் நினைத்துப் பழக்கப்பட்டவளான ருக்குமணி, அவர்களுக்கு மேலே மாரியாத்தா ஒருத்திதான் இருக்க முடியும் என்று நம்பினாள். அவர்களுக்கும் மேலேயும் ஓர் ஆசாமி இருந்தால், அவரைப் பார்த்துத்தான் ஆக வேண்டும் என்பது போல புடவை தூசியைத் தட்டிவிட்டாள். அதே சமயம் ஒருத்தி செய்யாத குற்றத்துக்கு

சிறைவாசம் ஆவதற்கு, தானோ தனது குழந்தையோ காரணமாக இருக்கக்கூடாது என்று நினைத்தது போலவும், இளங்கோவையே பார்த்தாள்.

இந்தச் சமயத்தில் பாமா தலைவிரி கோலமாக நடந்து வந்தாள். நொடிக்கு ஒரு தடவை தலை முடியை மேல் நோக்கி தூக்கி விடுகிறவள் கவிழ்ந்த முடியுடன், நிமிர்ந்த பார்வையோடு, அவர்களை நெருங்கி, ருக்குமணியை ஏற இறங்கப் பார்த்தபடியே, இளங்கோவைப் பார்த்துக் கத்தினாள் :

"நான் ஒருத்தி பிள்ளையார் கோவிலில் கல்லு மாதிரி உங்களையே பார்த்துகிட்டு நிக்கேன். அதுக்கு முன்னால, அப்பா டெலிபோன் செய்தவுடனேயே வீட்டுக்கு வந்திடுவீங்கன்னு வாசலுக்கும், புறக்கடைக்குமா அலைஞ்சேன். இங்க என்ன வேல உங்களுக்கு?"

"ஏம்மா, எது பேசணுமுன்னாலும் பக்கத்துல இருக்கிற பீச்சுல போய் பேசுங்க. நான் ஒருத்தி மூணாவது மனுஷி இங்க இருக்கேன்."

ருக்மணி, பூக்கூடையை தூக்கிக் கொண்டே சிரித்தாள். அந்தச் சிரிப்பில் பாமாவுக்குக் கோபமும் போனது, சந்தேகமும் போனது. இதற்குள், இளங்கோ ருக்குமணியின் சாகாத பயல் பற்றியும், மிஸ்டர் ரமணனின் வில்லத்தனம் பற்றியும் பாமாவிடம் விளக்கினான். பிறகு, சரோசாவைக் காப்பாற்ற வேண்டியது, ஒரு தார்மீகக் கடமை என்று வாதாடினான். அவன் சொல்வதை பெரிய மனுஷி போல் கேட்டுக் கொண்டு, பாமா, சம்மா நின்றாள். உடனே ருக்குமணி தனது மகன் தலையை தடவி விட்டுக்கொண்டே ஒரு போடு போட்டாள் :

"சரோசாவோ, கிரோசாவோ... அவ ஜெயிலுக்குப் போனா கடவுளே என்னோட பயல காணாம பண்ணிடுவார். நீங்க ரெண்டு பேரும் கூட சேர்ந்து வாழமுடியாது. என்னம்மா சொல்றே?"

பாமா உடனடியாக ஒரு முடிவுக்கு வந்து, அந்த முடிவுக்கேற்ற தோரணையோடு, பேசினாள் :

"சரி! ஆட்டோவ கூப்பிடுங்க."

## 11

சென்னைப் பெருநகர் காவல்துறை ஆணையாளர் அலுவலகத்திற்குள், அந்த ஆட்டோ ரிக்ஷா பயபக்தியுடன் நின்றது. புலி போன்ற உறுமல் சத்தத்தை நிறுத்தி விட்டு, அது பூனை மாதிரி நின்ற போதும், ஒரு வெள்ளை யூனிபார போலீஸ்காரர், அங்கே ஓடிவந்து டிரைவரை செல்லமாகத் திட்டினார் :

"ஏம்பா, நீ, பெரிய ஆட்களை கூட்டிட்டு வந்ததாகவே இருக்கட்டும். அதுக்காக எங்க கண்ணு முன்னாலேயே நாலு பேர ஏத்திட்டு வரணுமா? கேட்டுல ஒருத்தர இறங்கி வரச் சொல்லக்கூடாதா? போலீசுன்னா அவ்வளவு கிள்ளுக்கீரையாப் போச்சா?"

பாமாவும் இளங்கோவும் டிரைவர் பதில் சொல்லட்டும் என்பது போலவும், அந்த கான்ஸ்டபிளிடம் பேசுவது தகுதிக் குறைவு என்பது போலவும் நினைப்பதாய், வெள்ளைச் சட்டைக்காரர் நினைத்துக் கொண்டார். ஆனால், ருக்குமணியை ஒரு ஓரத்தில் தள்ளிவிட்டு, இடுப்பில் இடுப்பு உரச, தோளில் தோள் மோத, ஜோடி சேர்ந்து அமர்ந்திருந்த அவர்களுக்கு ஆட்டோ அங்கே நின்றதே நினைவில்லை. ருக்குமணிதான், தனது பையனைப் பிடித்துக் கொண்டே, கீழே குதித்தாள். பூ மாலைகள் வைக்கப்படும் மேசையையும், பூக் கூடைகளையும், வத்தியால்

தட்டி கீழே இழுத்துப் போடுவது இந்த வெள்ளைச் சட்டைக்காரர்கள் தானே... ஆகையால் அவள் பயந்து போனாள். அவளைப் போலவே அந்த டிரைவரும் தலையைச் சொறிந்து கொண்டே அந்த போலீஸ் மனிதர் முன்னால் பல்லைக் காட்டினார். பாமாவும், இளங்கோவும் போட்டி போட்டுக் கொடுத்த ஆட்டோ கட்டண ரூபாய் நோட்டுகளை வாங்காமல், ஆட்டோவின் நம்பர் பிளேட்டை லாவகமாக டிரைவர் மறைத்து நின்றார். போலீஸ்காரர் தன்னுடைய பரிபாலனத்துக்கு எதிர்ப்பு இல்லை என்பதை உறுதி செய்து கொண்டு போய்விட்டார்.

சென்னை நகருக்கே காவல் சக்ரவர்த்தியான அந்த வளாகம், எந்தவித ஆரவாரமும் இல்லாமல் அமைதியாக இருந்தது, ருக்குமணிக்கு ஆச்சரியமாக இருந்தது. 'நாயே பேயே' என்று கத்தாமல் ஆங்காங்கே நிற்கும் போலீஸ்காரர்களையும், போலீஸ் வேன்களையும், கரமுரா சத்தம் போடும் ஜீப்புகளையும் பயபக்தியோடு பார்த்தாள். அவளுக்கே சந்தேகம்... அது போலீஸ் ஆபீசா... இல்லை சாதாரண ஏதோவொரு அலுவலகமா என்று. அங்கே நின்ற சிவில் உடைக்காரர்கள் அனைவரும் காவல் நிலையத்தில் நிற்பவர்களைப் போல் நிற்காமல் சாதாரணமாக நிற்பதைப் பார்த்ததும், இவளும் தன்னை வழக்கத்திற்கு அதிகமாக தனது தலையை நிமிர்த்திக் கொண்டும், மகன் ஆறுமுகப் பயலின் கையைப் பிடித்துக் கொண்டும், இளங்கோ-பாமா ஜோடியின் பின்னால் நடந்தாள்.

ருக்குமணி, பராக்குப் பார்த்துக் கொண்டே போன போது, பாமா, தனது தந்தையின் நண்பராகக் கருதப்படும் டெப்டி கமிஷனர் அறையை பல்வேறு அறைகளிலிருந்து பிரித்துப் பார்ப்பதுபோல் அவற்றின் பெயர்ப் பலகைகளைப் படித்தாள். அவர் பெயர் தெரியவில்லை. பிறகு அங்குமிங்குமாய் விசாரித்தாள். இரண்டு பேர் ஆளுக்கு ஒரு திசையாகக் காட்டிய போது, சிறிது திகைத்தாள். பிறகு, அவர்களை மாதிரியே அலைந்து

குறிப்பிட்ட அந்த டெப்டி கமிஷனரைக் கண்டுபிடித்த ஒருவர் வழியில் அகப்பட்டார். அவர் சுட்டிக்காட்டிய இடத்திற்கு மரப்படிகள் வழியாக ஏறி, இதர எஞ்சிய மூவரையும் பின்னால் வரும்படி சைகை செய்தாள். முதல் மாடியில் மூன்றாவது அறை. அந்த அறையே குட்டி போட்டது போல் ஒரு சின்ன அறை. இந்த இரண்டு அறைக்கும் இடையே ஒரு கதவுத் தடுப்பு.

அந்த சின்ன அறைக்குள் அங்குமிங்குமாக டெலிபோன்களை சுற்றிக் கொண்டிருப்பவர் முன்னால் பாமா போய் ஒரு வணக்கம் போட்டாள். அதற்கு அவர் டெலிபோனை ஆட்டியே பதில் வணக்கம் போட்டார். பாமா இனிமையாகக் கேட்டாள் :

"சார், டெப்டி கமிஷனர் அங்கிளை பார்க்கணும், இருக்காங்களா?"

"வெளியே போங்கள்" என்று சொல்லப்போன அந்த நேர்முக உதவியாளர், 'அங்கிள்' என்ற வார்த்தையைக் கேட்டதும் தாத்தாவாகக் குழைந்தார். அதே சமயம், இப்படிப் பல பேர் டூப் அடித்து, உள்ளே போய் ஏடாகூடமாய் பேசிவிட்டு, கடைசியில் டி.சி.யிடம், தான் வாங்கிக்கட்டிக் கொண்டதையும் நினைத்துக் கொண்டார். ஆகையால், இருக்கிறார் என்றோ, இல்லை என்றோ சொல்லாமல், அவளையே பார்த்தார். உடனே, பாமா ஆங்கிலத்தில் வெளுத்துக்கட்டினாள். கான்வெண்டில் படித்தவளான அவள், வெள்ளைக்காரி தோற்றது போல் விளாசினாள். குறிப்பிட்ட அந்த டெப்டி கமிஷனர் தனக்கு அங்கிள் என்றும், தான் வந்திருப்பது தெரிந்தால், அவரே அங்கு ஓடிவந்து விடுவார் என்பது போலவும் பேசினாள்.

எந்த அரசு அலுவலகத்திலும் நடைபெறும், மனிதச் சந்திப்பில் தமிழுக்கு மூடிக்கிடக்கும் கதவு, இங்கேயும் அவளது ஆங்கிலத்திற்கு வழி விட்டது. 'இன்டர்காமை' எடுத்து, டி.சி.யிடம் அவள் வரவைக் குறிப்பிட்டார். பிறகு எதுவும் பேசாமல் தனது

வேலையைப் பார்க்கத் துவங்கினார். இப்போது அவருக்கு பாமா உயரத்தில் சிறிது குறைந்தது போல் தெரிந்தது. கால்மணி நேர கால்வலிப்புக்குப் பிறகு, பாமா அவசரப்படுத்தினாள் :

"சார், எப்போ பார்க்க முடியுமுன்னு சொல்லுங்க. இல்லாட்டா முடியாதுன்னாவது சொல்லுங்க. நாங்களும் பிசி தான்."

நேர்முக உதவியாளர், அவளுக்கு எரிச்சலோடு பதில் அளிக்கப் போனார். இவளுக்குத்தான் டெப்டி கமிஷனர் அங்கிளே தவிர, அந்த அங்கிளுக்கு இவளிடத்தில் பங்கில்லை என்பதால், விட்டிருந்தால், விளாசியிருப்பார். அதற்குள், டெலிபோனில் ஒரு கரகரப்பான சத்தம் வந்ததும், அவர் படபடப்பானார். பாமாவை போகலாம் என்பதுபோல் சைகை செய்தார்.

அந்த பிரும்மாண்டமான அறைக்குள் இளங்கோவும், பாமாவும் பக்குவமாகப் போனார்கள். சுழல்மெத்தை நாற்காலியை சுற்றிக் கொண்டே டெலிபோனில் பேசிக் கொண்டிருந்த டெப்டி கமிஷனரை பார்த்தபடியே, அங்கப்பிரதட்சணம் செய்வது போல் சென்றார்கள். திரும்பிப் பார்த்த பாமா, ருக்குமணி பின்னால் வராததைக் கண்டு பி.ஏ. ரூமிற்குப் போனாள். ஐந்து நிமிடத்திற்குப் பிறகு பல்வேறு வாக்குவாதங்களை முடித்து விட்டு, அவளையும், அவள் பையனையும் உள்ளே கூட்டி வந்தாள். டெலிபோனில் பேசிக் கொண்டிருந்த டெப்டி கமிஷனர் அதன் குமிழை மூடிவிட்டு "என்ன வேண்டும்" என்று கேட்டார். ஏதோ பதில் சொல்லப்போன இளங்கோவின் முதுகைக் கிள்ளிவிட்டு, பாமா சாதாரணமாக, பரபரப்பு இல்லாமல் பதிலளித்தாள் :

"நீங்க பேசி முடிங்க அங்கிள். எங்களுக்கு அப்படியொன்றும் அவசரம் இல்ல."

அரசியல்வாதிகள், கேடிகள், கிரிமினல்கள் ஆகியோருடன் பழகிப் போன அந்த டெப்டி கமிஷனருக்கு, 'அங்கிள்' என்ற

வார்த்தை நெகிழ்வைக் கொடுத்தது. அவளை உட்காரும்படி சைகை செய்தார். அவள் உட்கார்ந்ததும், அவளைப் போல் தானும் உட்காரலாமா என்று யோசித்த இளங்கோ, சிறிது நின்றுவிட்டு பிறகு உட்கார்ந்தான். ருக்குமணி ஜம்மென்று உட்காரப்போன மகனை காதைப் பிடித்துத் திருகி தன் பக்கத்தில் நிறுத்திக் கொண்டாள். டெப்டி கமிஷனர், ஒரு டெலிபோன் பேச்சை முடித்து விட்டு, அவர்களைப் பார்ப்பதும், மற்றொரு டெலிபோன் அறுக்க வருவதுமாக இருந்தது. ஒன்றில் "எஸ் ஸார்... எஸ் ஸார்" என்று குழைந்த அவர், இன்னொரு போனில், "என்னா மேன் செய்யறே? கொஞ்சமாவது மூளையிருக்கா?" என்று எரிந்தார். இப்படி ஒரே சமயத்தில் மெழுகுவர்த்தி மாதிரி குழைவதும், எரிவதுமாக இருந்த அவரைப் பார்த்த ருக்குமணி ரஜினிகாந்தை விட, இவர் பெரியவராக இருக்கலாமோ என்று சந்தேகப்படுவதுபோல் பார்த்தாள்.

டெலிபோன் மணிகளும், மைக் பிளிறலும் சிறிது நின்ற போது, பாமா குழந்தைத்தனமாகக் கேட்டாள் :

"அங்கிள், என்னை ஞாபகம் இருக்குதா? பத்து வயசுல உங்களைப் பார்த்தது... பட், உங்க அப்போதைய உருவம் இன்னமும் ஞாபகம் இருக்குது. டாடி... அதான் உங்க பிரண்ட் மிஸ்டர். ரமணன், சதா உங்களைப் பத்தியே போரடிப்பார். பரீட்சையில் உங்க பேப்பரைப் பார்த்து அவர் காப்பியடிச்சாராம், இதனால் உங்களுக்கு பெரிய சைபரும், அவருக்கு சின்ன சைபரும் கிடைச்சுதாம்."

பாமாவின் சிரிப்போடு சேர்ந்து சிரிக்கப் போனார் டெப்டி. இதற்குள் ஒரு மேலிட மிரட்டல் டெலிபோன். கீழிட பிரார்த்தனை டெலிபோன். அதற்குள் பி.ஏ. கொண்டு வந்து கொடுத்த ஒரு பவர் புரோக்கரின் விசிட்டிங் கார்ட். அவரை உடனே பார்க்காவிட்டால் ஆவடி ஆயுத போலீசுக்குத்தான் போக வேண்டும். ஆகையால் அவசர அவசரமாய்க் கேட்டார்:

"சொல்ல வேண்டியதை ஒரு நிமிசத்துல சுருக்கமா சொல்லும்மா."

பாமா சுருக்கமாக எப்படிச் சொல்வது என்பதற்காக கால் நிமிடம் எடுத்துக் கொண்டாள். பிறகு நடந்த விவரத்தை ஒப்பித்துக் கொண்டிருந்தாள்.

டெப்டி கமிஷனர் அவளை இடைமறித்துக் கேட்டார்:

"இந்தப் பையனை கொலை செய்ததாய் கேஸ். ஓகே! பட், அப்படி நடக்கலே, சரிதானே? ஒங்க ஏரியா இன்ஸ்பெக்டரை போய்ப் பாரு. நான் மைக்கில பேசிடுறேன். சரோசாவையும் வார்னிங் கொடுத்து விட்டுடச் சொல்றேன். ஒன் பேரு என்னம்மா, ருக்குமணியா? குழந்தைய சரியா கவனிச்சுக்கத் தெரிஞ்சுக்கோ. பாமா! ஒரு நாளைக்கு சாவகாசமாக வீட்டுக்கு வா. உங்க அப்பாவ அங்கே வந்து என்ன 'டா' போட்டு பேசலாமுன்னு சொல்லு. ஓகே!"

"தாங்க்யூ அங்கிள்" என்று சொல்லப்போன பாமா, அவர் இன்னொரு டெலிபோனில் பேசப் போவதைப் பார்த்துவிட்டு வாயில் அந்த வார்த்தையை சுமந்து கொண்டு நின்றாள். பிறகு அவர் ஒரு மாதிரி டெலிபோனில் பேச்சை இழுப்பதைப் பார்த்துவிட்டு, சத்தம் போட்டு ஒரு தாங்க்ஸை சொல்லிவிட்டு மற்றவர்களோடு வெளியேறினாள்.

சென்னைப் பெருநகர் காவல்துறை ஆணையாளர் அலுவலகத்திலிருந்து உருண்டோடி வந்த இன்னொரு ஆட்டோ ரிக்ஷா, சரோசாவுக்கு அடி உதைகளை வாடகையாகக் கொடுத்துக் கொண்டிருக்கும் பழைய காவல் நிலையத்திற்குள் வந்தது. இங்கேயும் ஒரு போலீஸ்காரர் வந்து அந்த டிரைவரை திட்டக்கூடாது என்பதற்காக, ருக்குமணி வாசலிலேயே இறங்கிக் கொண்டாள். ஆனாலும், அம்மாம்பெரிய போலீஸ் அதிகாரியைப்

பார்த்ததால், அவளுக்கு, இந்தக் காவல் நிலையம், மகுடம் இல்லாத பிசாத்தாய் தோன்றியது.

பாமா, தயங்கித் தயங்கி பின்னால் நடந்த ருக்குமணியை வலுக்கட்டாயமாக கையைப் பிடித்து இழுத்தாள். பின்னால் மெல்ல நடந்த இளங்கோவை முதுகைப் பிடித்துத் தள்ளினாள். அந்த மூவரும், ஆறுமுகப் பயலும், மாடிமேல் குடிகொண்ட இன்ஸ்பெக்டர் அறைக்குள் வந்தார்கள். இப்போதும் அங்கே அதே கிரைம் இன்ஸ்பெக்டரும் இருந்தார். அவரிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர், இவர்களைப் பார்த்ததும் உடனடியாக வாயை மூடிக்கொண்டு, முறைத்தார். பாமா அதை பொருட்படுத்தாதது போல் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, இளங்கோவையும் உட்கார வைத்துவிட்டுப் பேசினாள்:

"ஸார், என் பெயர் பாமா. டி.சி.கிட்டே போயிட்டு வாரோம்!"

"நாங்களெல்லாம் சின்னவங்க. பெரியவங்கக்கிட்ட போன பிறகு எங்ககிட்ட என்ன வேலை?"

இதற்குள், சப்-இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டுப் பேசினார்:

"ஒன்று மட்டும் நினைச்சுக்கங்கம்மா. நீங்க டைரக்டர் ஜெனரல்கிட்ட போனாலும், கடைசியில அது நல்லதோ, கெட்டதோ அதை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு, ஒரு சப்-இன்ஸ்பெக்டர்கிட்ட, அல்லது ஒரு கான்ஸ்டபிள்கிட்டதான் வந்து விழும். இந்த இளங்கோ அந்த சரோசாகிட்ட முறை தவறி நடக்கப்போனார்னு அந்த டெப்டி கமிஷனர்கிட்ட நாங்க சொன்னோமுனா, அவரால மூச்சுவிடக்கூட முடியாது. நீங்கள் எங்களப் பார்த்துட்டு, அப்புறம் முடியாட்டால்தான் டெப்டி கமிஷனர்கிட்டே போயிருக்கணும்."

பாமாவும், இளங்கோவும் சும்மாயிருந்தபோது, இன்ஸ்பெக்டர் ஒரு ஓரமாக நின்றுகொண்டிருந்த ருக்குமணியை சுண்டுவிரலை ஆட்டிக் கூப்பிட்டார்.

“இந்தாம்மா! உன் பேர்தான் ருக்குமணியா? இவன் பேரு தான் ஆறுமுகா?”

“ஆமாங்கய்யா...”

சப்-இன்ஸ்பெக்டர் குறுக்கே புகுந்தார் :

“ஏண்டி, ஒனக்கு மூளை இருக்குதா? குழந்தைய காணுமுன்னு போலீஸ்ல ரிப்போர்ட் செய்யத்தெரிஞ்சுதே, அது கிடைச்சுதுன்னு ஏண்டி சொல்லல?”

புருஷன்கூட பேச யோசிக்கும், ‘டி’-யை அவர் காப்பி குடிப்பது மாதிரி பேசியதால், ருக்குமணி கூனிக்குறுகினாள். உடனே பாமா இன்ஸ்பெக்டரைப் பார்த்து “சார், இவர்... பேசறது டூ மச்” அந்தம்மாவும் ஒரு கௌரவமான குடிமகள்தான் என்றாள் அழுத்தம் திருத்தமாக. இன்ஸபெக்டர் விவகாரத்துக்கு முற்றுப்புள்ளி வைப்பது போல் பேசினார்:

“சரி, விஷயத்துக்கு வருவோம். டெப்டி கமிஷனர், சரோசாவை விடுதலை செய்யச் சொல்லல... குழந்தை கிடைச்ச பேக்ரவுண்டுல விசாரிக்கத்தான் சொன்னார். ஆனாலும், சரோசாவை விடுதலை செய்ய நான் தயாரா இருக்கேன். ஆனால், ஒண்ணு... அவள்கிட்ட பெரிய செட்டே இருக்குது. பழி பாவத்துக்கு அஞ்சாதவங்க. இளங்கோ கையோ, காலோ போனால், அதுக்கு நான் பொறுப்பில்ல. அவள் உள்ளே இருந்தாத்தான், உங்களுக்குப் பாதுகாப்பு. அதுக்குள்ள அவளோட செட்டும் சிதறிப் போயிடும். இல்ல பயந்துடும். ருக்குமணியோட குழந்தைய, சரோசா கடத்திக்கிட்டுப் போனதாயும், நாங்கதான், மீட்டிக் கொடுத்ததாயும் ஒரு கேஸ் போட்டு, அவள ஏழு வருஷம் உள்ளே தள்ளிடலாம். டெப்டி கமிஷனர் முகத்துக்காக நீங்க என்ன சொன்னாலும் நான் செய்யத் தயார். அவள் விடுதலையாகணுமா, இல்ல இளங்கோ உயிரோட இருக்கணுமா? ரெண்டுல ஒன்றைச் சொல்லுங்க...”

இளங்கோவும், பாமாவும் ஒருவரையொருவர் பீதியோடு பார்த்துக் கொண்டபோது, இன்ஸ்பெக்டர் இளங்கோவிற்கு ஏற்படக்கூடிய அபாயத்தை தனது அனுபவ பின்னணியில் மீண்டும் விளக்கினார் :

“சாராய கோஷ்டிங்க கிட்ட இருக்கிற செட்டுங்க, மோசமான செட்டுங்க. பொதுவா இவங்களுக்கும், மிருகங்களுக்கும் அதிக வித்தியாசம் கிடையாது. ஒரு மிருகத்துக்கு, எப்படி தன்னால் தாக்கப்பட்டவன் ஞாபகம் இருக்காதோ, அப்படி இவங்களுக்கும் தங்களால் பாதிக்கப்பட்டவங்களப் பத்தி பின்னால நினைப்பே இருக்காது. பெரிய பெரிய பட்டாக்கத்திய வச்சு, எதிராளியை ஒரு வீச்சு வீசணும். அதுல கை விழுந்தாலும், கால் விழுந்தாலும் கவலையில்லை. அதோட சரி. இளங்கோ மேலே ஒரே ஒரு தடவைதான் பட்டாக்கத்திய வீசவாங்க. அதுல, இவரு தப்பிச்சுட்டா அப்புறம் அவங்களும் கவலைப்பட மாட்டாங்க. இவரு தலை போயிட்டால் கொஞ்ச நாளைக்கு தலை மறைவா இருப்பாங்க. அப்புறம் தானா ரோட்டுக்கு வருவாங்க. காரணம் ஒவ்வொரு சாராய கோஷ்டிக்கும் பின்னால், ஒரு அரசியல்வாதி இருக்கான்... இவங்கள எதுவும் செய்ய முடியாது. பயப்படும்படியா பேசுறேன்னு நினைக்காதீங்க. நீங்க டெப்டி கமிஷனருக்கு வேண்டியவங்க என்பதால விலாவாரியா சொல்லிட்டேன். எதுக்கும் கலந்தாலோசித்து முடிவ சொல்லுங்க.”

இளங்கோவின் முகத்தில் இன்னதென்று சொல்லமுடியாத ஒரு இறுக்கம். பாமா முகத்தில் பல்வேறு சுழிப்புகள். அவனை கையைப் பிடித்து இழுக்காத குறையாக அந்த அறைக்கு வெளியே கூட்டி வந்தாள். பையனின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்த ருக்குமணியும் பதறியடித்து நின்றாள்.

பாமா சிறிது யோசிப்பவள் போல் அங்குமிங்குமாய் சுற்றினாள். ஒவ்வொரு சுற்றும் அவளுக்கு தலைச்சுற்றலைத் தான் கொடுத்தது. குழம்பிப் போய் அவளும் உளறிப் பேசினாள்:

"எனக்குப் பயமாய் இருக்குது இளங்கோ. போலீஸ் முடிவுக்கே விட்டுடுவோம். உங்களுக்கு நாளைக்கு ஏதாவது நடந்துடக்கூடாதேன்னு இன்னிக்கே எனக்குப் பயம் வருது. வம்ப விலை கொடுத்து வாங்க வேண்டாம். என்ன ருக்குமணி நான் சொல்றது?"

இளங்கோ, ருக்குமணியை முந்திக் கொண்டு பேசினான். தோளில் விழுந்த பாமாவின் கையை தனது இடது கையால் எடுத்து, வல்து கைக்குள் சங்கமமாக்கி உறுதிபடப் பேசினான் :

"நமக்கு எதிர்காலத்தில் ஓர் ஆபத்து ஏற்படுறதாய் நினைத்து இப்போ, சரோசாவுக்கு வந்திருக்கிற ஆபத்தை அலட்சியப் படுத்தக் கூடாது... பாமா. என்ன ஆனாலும் சரி, நம்மால அவள் ஜெயிலுக்குப் போகக்கூடாது. இல்லாவிட்டால் நமக்கும் அவளோட செட்டுக்கும் வித்தியாசம் இருக்க முடியாது."

"தனக்குப் போகத்தான் தானம் சாரே... வளர்த்த கடா மார்புல பாயறது மாதிரி ஆயிடப்படாது பாருங்க."

"ஒரு கடாயை நாம் வளர்க்கிறதே, அத வெட்டித் தின்கிறதுக்காகத்தானே. அப்போ அது மார்புல பாயுறதுல என்ன தப்பு? நாம் ஒருத்தருக்கு விசுவாசமா உதவினால், அவங்களும் விசுவாசமா நம்மகிட்ட இருப்பாங்க. இதுல, எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. அதோட யதார்த்தமாய் பார்த்தால், சரோசாவை ஜெயிலுக்கு அனுப்பினால்தான், அவளோட செட்டுக்கு என் மேல கோபம் வரும். இன்ஸ்பெக்டரும், அவள விடுதலையாகுறதுக்கு நாம் மேற்கொண்ட முயற்சிகளை சொல்லத்தான் போறாரு. இதனால அவளுக்கும், அவளோட ஆட்களுக்கும் இப்போ கோபம் இருந்தாலும், அப்புறமா தணிஞ்சுடும். என்ன பாமா... நான் சொல்றது... சரிதானே?"

பாமா சரியா, சரியில்லையா என்று அவனையே திருப்பிக் கேட்பது போல் பார்த்தாள். ருக்குமணி மவுனமாய் இருந்ததில்

இருந்து அவளுக்கும் இளங்கோ சொல்வது சரிஎன்று பட்டது போல் தோன்றியது. இருந்தாலும் பாமா பதறிப் பதறிப் பேசினாள்.

"எனக்குத் தலையே வெடிச்சிடும் போல இருக்குது. இது நாயர் பிடிச்ச புலிவால் மாதிரி தோணுது. விடவும் முடியல, தொடவும் முடியல... இவருக்கு ஏதாவது..."

விம்மப்போன பாமா, தன்னைச் சரிப்படுத்திக் கொண்டாள். இளங்கோ அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தபடியே, அவளையும், ருக்குமணியையும் கூட்டிக் கொண்டு உள்ளே போனான். இன்ஸ்பெக்டர், சப்-இன்ஸ்பெக்டர் உரையாடலுக்கு தடங்கல் ஏற்படுத்தியபடி முடிவை அறிவித்தான் :

"எனக்கு என்ன நடந்தாலும் பரவாயில்லை சார். ஆனால், நியாயத்துக்குத்தான் எதுவும் நடந்துடக்கூடாது. தயவு செய்து சரோசாவை விடுதலை செய்திடுங்க சார்."

மேஜையில் பேப்பர் வெயிட்டை உருட்டிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர், அவனைப் பார்க்காமலேயே பேசினார் :

"ஆல் ரைட்... ரைட்டர் கிட்ட போய் உங்க புகாரை வாபஸ் வாங்குறதாய் ஒரு மனு கொடுங்க. ஒன் பேரு என்னம்மா? ருக்குமணியோ, மக்குமணியோ... ஒன் பையன் கிடச்சுட்டதாய் நீயும் எழுதிக் கொடு. இந்தாப்பா, இவங்கள ரைட்டர்கிட்ட கூட்டிட்டுப் போப்பா... ஓ.கே. மிஸ்டர் இளங்கோ! தாங்க்யூ மிஸ்-ஸா, மிஸ்ஸஸ்ஸா... விஷ்யூ... குட்லக் பாமா."

"சரோசாவை எப்போ சார் விடுவீங்க?"

"போலீசுக்கு எந்தச் சமயத்தில் என்ன செய்யணும் என்று தெரியும். எங்க டூட்டிய நீங்க செய்ய வேண்டாம். இனிமேலாவது, குப்பத்து காரிங்ககிட்ட நாசூக்கா நடந்துக்கங்க. டி.சி.கிட்ட இன்னொரு தடவை பேசி, என்ன முடிவு எடுக்கணுமோ அதை எடுப்போம். போயிட்டு வாறீங்காளா?"

இன்ஸ்பெக்டர், அவர்கள் அங்கேயே தயங்கி நின்றபோதும், அவர்கள் அங்கே இல்லாததுபோல் அனுமானித்து, சப் இன்ஸ்பெக்டரிடம் பேசப் போனார். இதற்குள் அவர்களை ரைட்டரிடம் கூட்டிப் போகும் பொறுப்பை மேற்கொண்ட 'கரும்பு மாமூல்' கான்ஸ்டபிள் பாமாவை கெஞ்சுவதைப் போலவும், இளங்கோவுக்கு அஞ்சுவது போலவும், ருக்குமணியை மிஞ்சுவது போலவும் ஒரே சமயத்தில் பல பார்வைகளை வீசிக் கொண்டு அவசரப்படுத்தினார். அவர்களும், அவர் பின்னால் போய் விட்டார்கள். உடனே, இன்ஸ்பெக்டர், சப்-இன்ஸ்பெக்டரைப் பார்த்து லேசாய் சிரித்தார். அந்தச் சிரிப்பைப் புரிந்து கொண்ட சப்... அதற்குரிய அர்த்தத்தை அவரிடமே விளக்கினார்.

"பயல் ஆறு மாதத்துக்கு தூங்க மாட்டான் சார். டெப்டி கமிஷனர் கிட்டயிருந்து வந்தங்கிறதுல ஆரம்பத்துல தெனாவட்டா நின்னவனை அப்படியே கூனிக் குறுக வைச்சுட்டீங்களே; அவனை வாழைப்பழமா கொழய வச்சு, எல்லாப் பக்கமும் ஊசியாலே குத்திட்டீங்களே. ஆனால், என்ன மாதிரி போலீஸ், கிராமப்புறத்துல இந்த மாதிரி டெக்னிக்கை பயன்படுத்துறது இல்ல சார். பேக்ரவுண்ட் உள்ளவன் முன்னால, பேக்ரவுண்ட் இல்லாதவனை எடுத்த எடுப்பிலேயே 'தேவடியா மகனே'ன்னு கேட்போம். அவனோட பெண்டு பிள்ளைகளையும் வாய்க்கு வந்தபடி திட்டுவோம். பேக்ரவுண்ட் உள்ளவன் பயந்துடுவான். சரி... விஷயத்துக்கு வருவோம்... சுதந்திர தினத்துக்கு பந்தோபஸ்து ஏற்பாடுகள் செய்யணுமே?"

"சுதந்திரத்துக்கும் நமக்கும் என்னப்பா சம்பந்தம்? எப்போ போலீசுல சேர்ந்தோமோ அப்போமே, நம்ம சுதந்திரத்தையும், விட்டுட்டோம். அடுத்தவன் சுதந்திரத்தையும் அபகரிச்சுட்டோம். சரோசாவ... நீயே போய் கூட்டிக்கிட்டு வா."

சப்-இன்ஸ்பெக்டர், தனக்குப் பதவி உயர்வு வந்தது போல் துள்ளி எழுந்தார்.

சரோசாவை எப்படியாவது விட்டுவிட வேண்டும் என்று இந்த சப்-இன்ஸ்பெக்டரை கரும்பு மாமூல் கான்ஸ்டபிள் நச்சரித்துக் கொண்டிருக்கிறார். பதவி ரீதியில் இவர் அவருக்கு முதலாளி, ஆனால் மாமூல் விவகாரத்தில் அவர் இவருக்கு முதலாளி.

இன்ஸ்பெக்டர், சரோசா விவகாரத்தை விட்டு விட்டு, இன்னொரு விவகாரம் கொண்ட எப் ஐ ஆர் ஐ படிக்கத் துவங்கினார். சரோசாவை கிட்டத்தட்ட மறந்தே விட்டார். அப்போது :

"சார், இதோ சரோசா..."

"ஏய், ஒன் பேரு சரோஜாவா? சரோசாவா?"

"நீங்க கடைசியா சொன்ன சொல்லு வரமாட்டேங்குதே சாரே. போலீஸ் எங்களோட தோஸ்துன்னு பேரு. அப்படியும் என்னை இந்தப் பாடு படுத்திட்டாங்களே. கடவாப்பல்லு ஆடுது சாரே; கையி பிசகிட்டு சாரே."

முகம் வீங்கி, கை வளைந்து, உடம்பை உண்மையிலேயே காயம் என்று சொல்லலாம் என்று சொல்வது போல் காயப்பட்டு நின்ற சரோசாவை, இன்ஸ்பெக்டர் பற்றற்ற முறையில் பார்த்தபோது, எங்கிருந்தோ ஓடிவந்த கரும்புக்கார போலீஸ்காரர் அவளுக்கு உபதேசம் செய்தார் :

"ஏய், சரோ! இந்த மாதிரியா இன்ஸ்பெக்டர் ஐயா கிட்டே பேசறது? நானும் சப்-இன்ஸ்பெக்டர் ஐயாவும் சொன்னதுக்காக ஐயா, ஒன்ன விடுதலை செய்யறார். இன்ஸ்பெக்டர் ஐயா டெப்டி கமிஷனர்கிட்ட உனக்காக வாதாடி... போராடி ஒன்ன கொலை கேஸிலிருந்து விடுவிச்சிருக்கார்."

"அதுக்காக கொழந்தைய கடத்திட்டுப் போன நிசமான கேடிய விட்டுடாதீங்க சாரே."

"இப்படிக் கூடக் கூடப் பேசக்கூடாதுடி... இன்ஸ்பெக்டர் ஐயா கையில காலுல விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கிட்டு, முதல்ல வீட்டுக்கு போ."

"இல்ல சாரே, முதல்ல ஆஸ்பத்திரிக்குத்தான் போகணும் சாரே."

அங்கே எதுவும் நடக்காதது போல் எழுதிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டரின் காலில், சரோசா நெடுஞ்சாண்கிடையாய் விழுந்தாள். தரையில் வயிற்றைப் போட்டு மேசையின் அடிக்கம்பில் மார்பைப் போட்டு, அவர் கால்களைப் பிடித்துக் கொண்டு மன்றாடினாள் :

"இதே மாதிரி இனிமே காட்டியும் நான் தப்பு தண்டா செய்தாலும், சார்தான், என்னை மன்னிக்கணும். எங்கள மாதிரி ஆட்களுக்கு போலீச விட்டா யார் கதி சாரே?"

"இந்தாம்மா எழுந்திரு மொதல்ல. இது போலீஸ் ஸ்டேஷனா, கோவிலா?"

கரும்பு கான்ஸ்டபிள், இமிடியட் பாஸ்ஸான சப் இன்ஸ்பெக்டரை பொருட்படுத்தாமலேயே பேசினார் :

"ஐயா சொன்னத நல்லா கேட்டுக்கோ. சப்-இன்ஸ்பெக்டர் கையிலயும், இன்ஸ்பெக்டர் காலிலேயும் நான் ஒனக்காக விழுந்தேன். இன்ஸ்பெக்டர், டெப்டி கமிஷனர் காலில விழுந்து ஒன்ன விடுவிச்சிருக்கார். நீயுண்டு, ஒன் தொழில் உண்டுன்னு இருக்கணும். சொல்றது புரியுதா?"

இன்ஸ்பெக்டர் கத்தினார் :

"யோவ், உன் மாமா, மச்சான் பேச்சை வெளியே வச்சுக்கய்யா. இவள இமிடியட்டா வெளியில கொண்டு விடுய்யா."

கான்ஸ்டபிள், பயப்பட்டவர்போல் நடந்தபடியே அவரை ஒரு சல்யூட்டால் அடித்துவிட்டு, சரோசாவை கண்களால் இழுத்துக் கொண்டு போய் விட்டார். சப்-இன்ஸ்பெக்டர், இன்ஸ்பெக்டரிடம் கேட்டார் :

"என்ன சார் திடீர்னு சூடாயிட்டீங்க?"

"பின்ன என்னப்பா, டெப்டி கமிஷனர் காலுல நான் விழுந்தேன்னு சொல்றான். அறிவு கெட்ட மடயன். அந்தப் பொண்ண போலீஸ் ஸ்டேஷன்ல வச்சே கொஞ்சிடப் போறான். நீயே போய் அவளை ஸ்டேஷனுக்கு வெளியில விட்டுட்டு வா."

இன்ஸ்பெக்டர் அதற்குமேல் பேச விரும்பவில்லை என்பதைப் புரிந்து கொண்ட சப்-இன்ஸ்பெக்டர் அங்குமிங்குமாய் உள்ள அறைகளைப் பார்த்துவிட்டு படியிறங்கினார்.

ஒரு புளிய மரத்திற்கு அடியில் சரோசாவை அவள் தோஸ்துகள் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அதே கான்ஸ்டபிள் அவர்களுக்கு உபதேசம் செய்து கொண்டிருந்தார். சப்-இன்ஸ்பெக்டர் கை தட்டி, அவர்களது கண்களை தன் பக்கம் இழுத்து, அவர்களை வெளியே போகும்படி சைகை செய்தார்.

சரோசா, தனது தோஸ்துகளோடு, நொண்டிக் கொண்டே வெளியே வந்தாள். ஒருவன் முகவெட்டு... அதோடு குளோஸ்கட்டு... இன்னொருத்தன் அம்மைத் தழும்பன், மற்றவர்கள் 'மற்றும் பலர்' என்பது மாதிரி சாதாரணங்கள். முகவெட்டுக்காரன், எதிரே இளநீர் குடித்துக் கொண்டிருந்தவர்களை அடையாளம் காட்டிப் பேசினான் :

"அதோ பாருமே, ஒன்னை கம்பியெண்ண வச்ச, ஒத தின்னவச்ச அந்த இளங்கோப் பயல் இரண்டு குட்டிகளோட எப்படி ஜாலியா நிக்கறான் பாரு. இப்பவே அவன ஒரு சீவு சீவிட்டு வரப்போறேன்."

இதற்குள், அம்மைத் தழும்பன் அவனை ஆற்றுப்படுத்தினான்:

"என் பொறுப்புல விடுடா... நம்ம சரோவுக்கு, ரத்தக் காயத்த வாங்கிக் கொடுத்தவன், ரத்தத்துல மிதக்கணும். நானே அத என் கையால செய்யப் போறேன். டாய்! இளநியா குடிக்கற? உன் ரத்தத்த நான் குடிக்கிறேன் பாரு... மவனே..."

சரோசா அவர்கள் கை ஆட்டிய திசை நோக்கிப் பார்த்தாள். இளங்கோ அவளைப் பார்த்துவிட்டு இளநீரால் முகத்தை மறைத்துக் கொண்டது போல் தோன்றியது. சரோசாவால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. போலீஸ் கொடுத்த உதையில் கழுத்து வலித்ததால் மீண்டும் சகாக்களைப் பார்த்தாள். எந்தவித சுரணையும் இல்லாமல் தோஸ்துகளிடம் தன்னை ஒப்படைத்தவள் போல வழி நடந்தாள்.

## 12

சரோசா விடுதலையாகி ஒரு வாரம் ஓடி விட்டது. இளங்கோ, அவளை இப்போது மறந்து விட்டான். அவள் விடுதலையானதைக் கேள்விப்பட்டு, பாமாவின் தந்தை மிஸ்டர். ரமணன்தான், துள்ளினார். அவருக்கு, அவள் விடுதலையாகி விட்டாள் என்பதை விட, புத்திசாலியான தனது மகளும், மக்குசாமியான சுப்பையாவின் மகனும், தனது முதுகுக்குப் பின்னால் இப்படியொரு விடுதலையை வாங்கிக் கொடுத்துவிட்டார்களே என்ற கோபந்தான். ஒருவேளை இந்த இருவரும் அவரையே இந்திரன் சந்திரன் என்று துதிபாடியிருந்தால், அவரே முன்னால் நின்று சரோசாவை விடுவிக்கப் பாடுபட்டிருப்பார். என்றாலும், பாமா, தனது வருங்காலக் கணவன் மீது பட்டாக்கத்தி பாயக்கூடாது என்ற பயத்தில்

சரோசாவை விடுவித்தாக மறைமுகமாய் சொன்னதை ரமணன் நேரிடையாகவே புரிந்து கொண்டார். 'டா' போட்டுப் பேசும் இளங்கோவை 'நீங்க... நாங்க' என்று மரியாதை போட்டுப் பேசத் துவங்கி விட்டார். சங்கத்துக்காரர்கள் கமிஷனரிடம் எப்போது போகலாம் என்றார்கள். அதற்கு ரமணனோ, தானே கமிஷனரை நேரிடையாகச் சந்தித்து சங்கத்தின் தீர்மானத்தைக் கொடுத்து விட்டதாக பொய்யளந்தார். இதனால் அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர உறுப்பினர்களுக்கு ஒரு ஆசை. ஆனால், உறுப்பினர் பதவியை புதுப்பிப்பதற்கு ஐந்நாறு ஆண்டு சந்தாக்களை கட்டியாக வேண்டும். போயும் போயும் ஒரு துப்புக்கெட்ட சங்கத்தின் விவஸ்தைகெட்ட தலைவரான ரமணனை இறக்குவதற்கு அவர்கள் காசு செலவழிக்கத் தயாராக இல்லை. பாக்கியம்மாவும், பாமாவின் உபதேசத்திற்குப் பிறகு, முக்கி முனங்கி வழிக்கு வந்தாள். இப்படி எல்லோரும் எல்லாம் முடிந்து விட்டதாக நினைத்த போது...

இளங்கோ, வழக்கம்போல் பைக்கில் ஏறினான். அலுவலகங்கள் துவங்கும் நேரம். பஸ் நிலையத்தில் நிற்கும் பாமா இந்நேரம் கத்திக் கொண்டிருப்பாள். கடந்த ஒரு வார காலமாக, இந்த பாமா பஸ்ஸில்தான் போகப் போவது போல ஒரு பாசாங்குடன் வீட்டிலிருந்து புறப்படுவாள். இளங்கோவின் வீட்டைப் பாராமலே போவாள். பிறர் சந்தேகப்படக்கூடாது என்பதற்காக எதிரே வருகிற பஸ்களைக் கூட தனது பஸ்தானா என்பது போல் உற்றுப் பார்ப்பாள். இந்தப் பையன் இளங்கோவும், தற்செயலாய் பஸ் நிலையம் பக்கம் பைக்கில் போவது போலவும், அங்கே அப்போதுதான் அவளைப் பார்ப்பது போலவும், வேறு வழியில்லாமல் அவளை ஏற்றிக் கொண்டு போவது போலவும், ஒரு சின்ன செட்அப். இது நன்றாகத்தான் செயல்பட்டு வருகிறது. இன்றைக்கு கொஞ்சம் லேட். அம்மாவும் தங்கையும் நடத்திய வீட்டு பெரும்போரில் அவனே ஒரு ஐ.நா. வாக மாறி, தீர்க்க வேண்டிய நிலைமை.

இளங்கோ, சக்கரங்கள் சுழலாமல் அவை அப்படியே நிற்பது போன்ற அசுர வேகத்தில் பைக்கை பாயவிட்டான். அந்த கிராஸ் தெருவைத் தாண்டி, பிரதான சாலைக்கு வந்து, வலது பக்கமாக வண்டியைத் திருப்பியபோது, பழைய முனுசாமி இரண்டு கைகளையும் முறுக்காய் விரித்துப் போட்டு, பிறகு, காக்காய் இறக்கைகளை ஆட்டுவது போல இரண்டு பக்கமும் கைகளை ஆட்டி வண்டியை நிற்க வைத்தான். அவன் தள்ளாடித் தடுமாறி நின்றிருந்தால் இளங்கோ வண்டியை வேறு பக்கம் திருப்பி விரைந்திருப்பான். ஆனால், முனுசாமியோ நிதானம் இழக்காமல் நின்றான். கண்களால் காரணம் கேட்ட இளங்கோவிற்கு அவன் பதிலளித்தான் :

“இன்னடா, சரோசா கொடுத்த சாராயத்துல நம்மள அம்போன்னு விட்டுட்டு அலாக்கா படுத்த முனுசாமி இப்போ முழுசா வந்து நிக்றானேனு பார்க்கிறியா? நானு வேணுன்னுதான் அப்படி நடிச்சேன். ஒரு மூட்டைப் பூச்சியை நாமே நசுக்குறப்போ அது செத்தது மாதிரி சுருண்டு கீழே அப்படியே கெடக்குமே... எதுக்காம்? நாம அதை வுட்டுடுவோமுன்னுதானே... இதே போல இந்த முனுசாமி அப்படியே வீந்தா... அவளோட தோஸ்துங்க எனக்கும் உனக்கும் சம்பந்தம் இல்லன்னு நினைக்கணும்பாரு... இல்லாட்டி ஒன்னோட இந்த தோஸ்து இப்போ ஒரு முக்கியமான சமாச்சாரத்தைச் சொல்ல முடியாமல் போயிருக்குமே.”

முனுசாமி தமாசாய் பேசுவது போல் பேசிவிட்டு, மோட்டார் பைக்கின் கண்ணாடி முன்னால் முகத்தைத் தடவிவிட்டபடியே இளங்கோவின் அருகே நெருங்கிப் போனான். அடித்தொண்டையில் ரகசியம் பேசுவதுபோல் பேசினான் :

“எதுக்கும் போலீஸ்லே சொல்லி ஒரு துப்பாக்கி வாங்கி வச்சுக்கோ.”

“துப்பாக்கியா? ஒரு குருவியைச் சுட்டாக்கூடப் பொறுக்காதவன் நான். நரிக்குறவங்க இந்தப் பக்கம் வில்லும்

கல்லுமா வந்தால், அவங்களை சத்தம் போட்டு துரத்துறவன் நான். எனக்கு எதுக்குப்பா துப்பாக்கி?"

"ஏதோ உன் தோஸ்து, சொல்றதச் சொல்லிட்டேன். அப்புறம் ஒன்னோட இஷ்டம்."

"விவரமாத்தான் சொல்லேன் முனுசாமி."

"வயக்கம்போல பட்டை பூடுறதுக்கு அங்கே போனேனா... சரோசாதான் ஊத்திக் கொடுத்தாள். அப்போ அவளோட தோஸ்துங்க உன்னை பட்டாக்கத்தியாலே ஒரு சொருகு சொருகப்போறதா பேசுனாங்க. நீ வேலை பார்க்கிற ஆபீசு, பாமாவை ஏத்திட்டுப் போற பஸ்டாண்டு, நீங்க டுயட் பாடுற பீச் அல்லா இடத்துலேயும் ஒன்ன வாச் பண்றாங்கோ. இன்னும் நாலு நாளைக்குள்ளே தீர்த்துக் கட்டப் போறதாய் சாராயம் குடிக்காமலே சபதம் போட்டாங்கோ."

"இதுக்கு சரோசா என்ன சொன்னாள்?"

"ஏதோ சொன்னாள். அதுக்குள்ளே சாராயம் என்னோட தலைக்குள்ளே பூட்டு. கிக்காய் படுத்துட்டேன். சரோசா பேசறதை பார்க்க முடிஞ்சது; ஆனால் கேக்க முடியலே. இதுல்லாம் நேற்று நைட்லே நடந்த சமாசாரம்."

"சரி. இந்தா... பத்து ரூபாய். ஒரு கிளாஸ் போட்டுக்கோ."

"நானும் மனுசன்தான். இந்தவாட்டி உன்கிட்டே காசு வாங்கறது நானு உன்மேலே வச்சிருக்கிற பிரண்டுசிப்பை அசிங்கப்படுத்துறமாதிரி. ஜாக்கிரதையா போ. நானும் என் பங்குக்கு அப்பப்போ ஒட்டு கேக்கேன்."

இளங்கோவிற்கு, அவனது புல்லட் வண்டி மாதிரி உடம்பெல்லாம் ஆடியது. முடிந்து போனதாய் நினைத்த ஒன்று, ஒரு முடிச்சோடு வந்திருப்பதை அறிந்ததும், அவன், மூளை

மரத்ததுபோல் நின்றான். மெல்ல மெல்ல இன்றோ நாளையோ, தான் தாக்கப்படலாம் என்ற எண்ணம் அச்சமாகி பீதியானது. அதே சமயம் நன்றி மறந்த ஒருத்தி இப்படிப்பட்ட ஒன்றில் ஈடுபட்டால் அதை சந்திக்க வேண்டும் என்ற நொந்துபோன வீராப்புடன் பைக்கை அழுத்தினான். கண்மண் தெரியாமல் ஓட்டினான். என்னதான் தனக்குள்ளே வீரம் பேசிக் கொண்டாலும், எதிரே தற்செயலாக அவனைப் பார்ப்பவர்கள்கூட அவனுக்கு எதிரிகள்போல் தோன்றியது. பாமா நிற்கும் இடத்திற்கு சரியாக முன்னால் நிற்கும் பைக்கை, சிறிது தூரம் தள்ளிப் போய் நிறுத்தினான். தோளில் ஒரு ஜோல்னாப் பையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, பாமா அவனைப் பாராதது போல் நின்றாள். பிறகு அவன் அருகே ஓடிவந்து கத்தினாள் :

"ஆமா, பைக்கை அங்கேயே நிறுத்தினால் என்ன? என்னைக் காக்க வச்சது மட்டுமில்லாமே எதுக்காக இப்படி ஓட வைக்கிறீங்க? காதல் இதுக்குள்ளே கசந்துட்டுதா? இளங்கோ ஒங்களத்தான்... ஏன் திரும்பிக்கூடப் பார்க்க மறுக்கறீங்க?"

இளங்கோ திரும்பிப் பார்த்தான். உறுமிக் கொண்டிருந்த பைக்கை ஆப் செய்து நிறுத்தி விட்டு, அவளையே பேச்சற்றுப் பார்த்தான். அவன் உடலெங்கும் வியர்வைத் துளிகள் வெள்ளமாகிக் கொண்டிருந்தன. அந்த சாலையும், அதன் வாகனங்களும், ஏதோ ஒரு மாய உலகில் போய்க் கொண்டிருப்பது போல தோன்றியது. தலை ஆங்காங்கே அரித்தது. எதிரிகள் நோட்டமிடுகிறார்களோ என்று அங்கேயும் இங்கேயும் பார்த்தபடி முனுசாமி சொன்னதை பாமாவிடம் ஒப்பித்தான்.

அவள் பயந்துவிட்டாள். அவன் பேசப்பேச, முகத்தை கைக்குட்டையால் துடைத்துக் கொண்டாள். அவனை யாருக்கும் பலி கொடுக்கப் போவதில்லை என்பது போல் இடுப்பில் வில் போல் வளைந்த அவன் கைக்குள் தனது கரத்தை சக்கரம் போல்

சேர்த்துக் கொண்டாள். அக்கம்பக்கத்தில் சிலர் குளு சிரிப்பாய் பார்ப்பதை அவளும் பார்த்தாள். ஆனால் பொருட்படுத்தவில்லை. அவள் தனக்காக அப்படி அல்லாடுவதில், அவனுக்கும் சுகம் கிடைத்தது. அதே சமயம் "பாமா, பாமா, நீ இப்படி உன் அன்பை வெளிப்படுத்துவதற்காக ஆயிரம் பட்டாக்கத்திகள் என்மீது பாய்ந்தாலும் பரவாயில்லை" என்பதுபோல் கால நேர சூழல் தெரியாமல் மடத்தனமாகப் பேசப்படும் சினிமா 'டைலாக்'கை பேசாமல் அவன், பேசட்டும் என்பது போல், அவளிடம் ஆறுதல் கண்டது போல், அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் சிறிது நேர இடைவெளிக்குப் பிறகு வார்த்தைகளை மென்று விழுங்கிப் பேசினாள் :

"அந்த ரவுடிப் பசங்களுக்குத் தான் அறிவில்லை, அந்தக் குப்பத்து ரவுடிப் பொண்ணுக்கு வேண்டாம்? நன்றி கெட்ட நாய்."

"நாம்தான் அவள் விடுதலைக்குக் காரணமுன்னு அவளுக்குத் தெரியுமோ, என்னமோ?"

"நீங்க உங்க போலீஸ் பிரண்டு திருமலையப்பன்கிட்டே விசயத்தை சொல்லி, அவன்கிட்ட விளக்கமா சொல்லச் சொல்லி இருக்கலாமே."

"அதுக்காகவே அவரைத் தேடி அலைந்தேன். பதினைந்து நாள் லீவுலே மதுரைக்குப் போய் இருக்காராம்."

"அடக் கடவுளே! பேசாமல் போலீஸ்லே ஒரு கம்ப்ளெய்ண்ட் கொடுப்போமா?"

"எந்த முகத்தோட இன்ஸ்பெக்டரைப் பாக்கிறது?"

"அப்போ டெபுடி கமிஷனர் அங்கிளைப் பார்த்து துப்பாக்கி லைசன்ஸ் கேட்போமா?"

"அது கிடைக்கிறதுக்கு முன்னாடியே என்னைத் தீர்த்துடுவாங்க."

"அப்போ என்னதான் செய்யறது?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை."

"அப்படியே அவுங்க வெட்டுறதா இருந்தால், நம்ம இரண்டு பேரையும் சேர்த்து வெட்டணும். உங்களைப் பிரிஞ்சு என்னாலே இருக்க முடியாது. ஆமா முடியாது தான். நெசமாத்தான். சத்தியமாத்தான்."

பாமாவால், அழுகையை அடக்க முடியவில்லை. அக்கம் பக்கத்தாரின் கவனத்தை அவள் அழுகை கவரப் போவதுபோல் இருந்தது. ஆகையால், இளங்கோ அவர்களின் கண்களில் பாமாவின் முகம் படாதபடி அட்ஜஸ்ட் செய்து நின்றான். அவளை அதிசயத்துப் பார்த்தான். எழுபது வயதுப் பாட்டியை, ஐம்பது வயது அம்மாவை அவளாக அனுமானித்தான். இறுதியில் பாமாவை, பாமாவாக அனுமானித்து அவளை பைக்கில் ஏறும்படி சைகை செய்தான். இந்தச் சமயத்தில் ஒரு மீசைக்காரன் அவனைப் பார்த்து வந்தான். உடனே பாமா பயந்துபோய் அவனை அவசரப்படுத்தினாள். அந்த மீசை இளங்கோவிடம் மணி கேட்க வந்தது, அவர்கள் இருவருக்குமே தெரியாது. எதிரில் ஒருமாதிரி படுகிற அனைவருமே அவர்களுக்கு சரோசாவின் கையாட்களாகத் தோன்றினார்கள். இளங்கோவும் வண்டியை ரவுடி வேகத்தில் ஓட்டினான். யாராவது எதிரே பட்டாக்கத்தியை எடுத்தால் அவர்கள் மீது அப்படியே வண்டியை மோத வேண்டும் என்று முரட்டுத்தனமாக நினைத்தான். உயிர்ப் பயம் அவனைக் கோழையாகவும், வீரனாகவும் மாறி மாறி மாற்றிக் கொண்டிருந்தது.

இதற்குள் சிவப்பு சிக்னல் வந்தது. பச்சை சிக்னலுக்காக பின்னால் காத்திருக்க நிதானமற்ற பேர்வழிகள், வண்டிகளை கோலம் போடுவது மாதிரி அங்குமிங்குமாய் வளைத்து ஒரு போக்குவரத்து நெருக்கடியை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள். அப்போது தற்செயலாக எதிர்த் திசையில் இருந்த பஸ் நிலையத்தைப் பார்த்த இளங்கோ நிமிர்ந்தான். இதனால் அவன்

முதுகில் சாத்தி வைக்கப்பட்ட பாமாவின் மோவாயும் அங்குமிங்குமாய் அவன் முதுகைச் சுரண்டியது. இளங்கோ பார்த்த எதிர்த் திசையில் -

சந்தேகமில்லை. சரோசாதான். எப்படி இவள் சரோசாவாக இருக்க முடியும்? வயிறு முழுப் பானை மாதிரி முன்னுக்குத் தள்ளி இருக்கே? பின்புறம் வேறு ஒரு மாதிரி தெரியுதே. இந்த ஒரு வாரத்திற்குள் அவள் எப்படி ஒன்பது மாதக் கர்ப்பிணியாகி இருப்பாள்? ஒரு வேளை, இவள், அவள் அக்காவாக இருப்பாளோ? தன்னை நோட்டம் பார்ப்பதற்கு வந்திருப்பாளோ? இல்லையானால் போலீஸ் அவள் வயிற்றில் குத்தி வீங்க வைத்திருக்குமோ? அதே முகம்; அதே தோரணை.

இளங்கோ, குழம்பிப் போனான். அதே சமயம், அவள் அவனையே பார்ப்பதுபோல் இருந்தது. அப்படி அவள், தன்னைப் பார்க்கிறாளா என்பதைப் பார்ப்பதற்காக முன்பு கல்லூரிக் காலத்தில் 'சைட்' அடிப்பவனைக் கண்டு பிடிப்பதற்கு ஒருவன் சொல்லிக் கொடுத்த டெக்னிக்கைப் பயன்படுத்தினான். குறுக்காகப் போய்க் கொண்டிருந்த ஒரு பஸ்சை அவன் பார்த்தான். உடனே அவளும் அந்தப் பஸ்சைப் பார்ப்பதுபோல இருந்தது. ஆகாயத்தைப் பார்த்தான். அவளும் அண்ணாந்து பார்த்தாள். சந்தேகமில்லை. இவள் பார்வையில் ஏதோ மர்மம் இருக்கிறது.

இதற்குள், பச்சை விளக்கு வந்துவிட்டது. அவன் போவதையே அந்தக் கர்ப்பிணிப் பெண்ணும், முகத்தை சுற்றவிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துக் கொண்டே வண்டியைத் திருப்பிய இளங்கோ, ஒரு ஸ்கூட்டர்காரனிடம் திட்டு வாங்கினான். அவனை சரோசாவின் கையாளாக அனுமானித்துக் கொண்டு இவனும் பதிலுக்குத் திட்டியபடியே வண்டியை அழுத்தினான். கால்கிலோ மீட்டருக்கு அப்பால் அதை நிறுத்தினான். அவன்

தோளில் கைபோட்டிருந்த பாமா அவனது முகத்தை தன் பக்கமாகத் திருப்பிக் கேட்டாள் :

"என்ன ஆச்சு உங்களுக்கு?"

"எங்க ஆபீஸரு. அதோ, அந்த லேபர் இன்ஸ்டிடியூட்லே ஒரு விவரம் வாங்கிட்டு வரச் சொன்னாரு. சுருக்கெழுத்துல தேர்ச்சி பெற்ற ஒரு ஸ்டெனோவ ஆபீஸ்லே நியமிக்கணும். அதுக்கு டைப்பிங் வேகம் நிமிடத்திற்கு 25 வார்த்தைகள் இருக்கணும். இந்த டைப்பிங் வேகம் சுருக்கெழுத்துலே இருந்து அதை அர்த்தப்படுத்தி டைப் அடிக்கிறதுக்கா, இல்லை ஒரு பாராவைக் கொடுத்து அதை டைப் அடிக்கிறதுக்கா என்கிறது எங்க ஆபீசுல யாருக்குமே தெரியல. இப்படித்தான் பல ஆபீசுலே ஆபீஸர்களோட அறியாமையால், பல தகுதி உள்ளவர்களுக்கு வேலை கிடைக்கிறது இல்லை."

"அப்போ நானும் வாரேன். உங்களைத் தனியா விடமாட்டேன்."

"அங்கே நேரமாகும். இப்ப பஸ்ல போயிடு. சாயங்காலமா ஆபீஸ்ல வந்து உன்னை பிக்கப் செய்துக்குறேன்."

"சாக்கிறதையா போங்க. ஆபீசுக்கு வந்ததும் உடனே போன் செய்யுங்க. அதுவரைக்கும் என் மனது கேட்காது."

பாமா, அப்போது வந்த ஒரு பஸ்சில் ஏறிக் கொண்டாள். இளங்கோ, அவள் டாட்டாவுக்கு, பதில் டாட்டா போடாமல், வண்டியை ஒடித்து வளைத்து ஒரு சுற்றுச் சுற்றி, அந்தப் பெண் நின்று கொண்டிருந்த பஸ் நிலையத்தை நோக்கி வண்டியைப் பாய்த்தான். இதற்குள் அவள், அவன் வருவது தெரியாமல், ஒரு பஸ் நம்பரை உற்றுப் பார்க்காமலேயே அதில் ஏறிக்கொண்டாள். உடனே அவனும் அந்த பஸ்ஸை பாலோ செய்தான். அவன் மனதில் அழுத்திய குற்றச்சுமை அந்த பைக்கின் ஆக்சிலேட்டரையும்

அழுத்தியது. பாமாவிடம் பொய் சொன்னதை மனம் ஒப்பவில்லை. அவன், ஆபீசர் அப்படி ஒரு விவரத்தை கேட்டுவிட்டு வரச்சொன்னது உண்மைதான். அந்த உண்மையை தனக்குச் சாதகமாக வளைத்து, தர்மர், துரோணரை ஏமாற்றியது போல் தானும் ஏமாற்றி விட்டதாக நினைத்தான். ஆனாலும் அவளுக்குச் சிரமம் கொடுக்கக் கூடாது என்றுதான் அப்படிச் செய்ததாய் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். அதேசமயம், ஒருத்தர் அவரது நோக்கங்களால் தீர்மானிக்கப்படுவதில்லை. மாறாக செயல்களாலேயே தீர்மானிக்கப்படுகிறார் என்று யாரோ ஒரு கிரேட்மென் சொன்னதாக ஒரு பத்திரிகையில் வெளியான வாசகங்கள் அவன் மனதை பாம்பாய் கொத்தின. அதையும் மீறி அந்த பஸ்சின் பின்பக்கம் பாம்பு போல் வளைந்து வளைந்து போய்க் கொண்டிருந்தான்.

சரோசா இவளோ... அவளோ... எப்படியும் அசல் சரோசாவைச் சந்தித்து... அவள் விடுதலைக்கு தானே காரணம் என்பதை விளக்கி, அவளிடம் இருந்தும், அவள் கும்பலிடம் இருந்தும், தனக்கு விடுதலை வாங்கியாக வேண்டும்.

## 13

அந்த 'கர்ப்பிணிப்பெண்' பஸ்ஸிலிருந்து இறங்கி, லேசாய் திரும்பி ஓரங்கட்டிப் பார்த்தபடியே நடந்தாள். பிறகு இடுப்பைப் பிடித்துக்கொண்டு சிறிதுநேரம் நின்றாள். பிள்ளை வயிற்றுக்குள் மோதுகிறானாம் - மீண்டும் தன்பாட்டுக்கு நடந்து கொண்டிருந்தாள். பழைய கோவில் வளாகத்தின் முனைக்கு வந்ததும், மீண்டும் நின்றாள். அந்த வளாகத்தின் எல்லையில் மானுடக் கழிவுகளாய் உட்கார்ந்திருந்த மனித வரிசையில் ஒரு கிழவர் எழுந்து சிறு

குழந்தைபோல் தத்தித்தத்தி நடந்து அவளிடம் நெருங்கினார். அவரை - அந்த நயினாவை - அவள் தன் பக்கமாய் சாய்த்துக்கொண்டே, தன்னையே ஊன்றுகோலாய் பிடித்துவைத்தபடி அவரை நடத்திக்கொண்டே நடந்தாள். "இன்னா நயினா, எத்தனைவாட்டிச் சொல்றது? நாஸ்தா பண்ணினோமா, குப்புற அடிச்சுப் படுத்தோமான்னு இல்லாமே, இங்கே உன்க்கி இன்னாவேல" என்று செல்லமாகக் கோபித்தபடியே, அவர் தலையில் படர்ந்த துரும்புகளைத் தட்டிவிட்டாள். அவரை அவரது வாடிக்கையான இடத்தில் குந்த வைத்துவிட்டு ஒரு ஒடுங்கு பாதைப் பக்கம் வந்தாள்.

ஒரு சின்ன பனித்துளி தன்னுள்ளே முழுப் பனையை பிரதிபலிப்பதுபோல், ஒடுங்கிய சந்தின் முனைக்கு அப்பால் தெரிந்த ஏரியாவை நோக்கி மெல்ல நடந்தாள். அந்தப் பாதையைத் தாண்டியதும் அந்தக் கோவில் மறைத்த சேரிப்பகுதி தென்பட்டது. குண்டும், குழியுமான சாலை... ஒற்றைக்கண் பிசாசுபோல் பாதாளச் சாக்கடைகளைக் காட்டிக் கொண்டிருக்கும் சைபூன்கள். பெருமூச்சுவிடும் கார்ப்பரேஷன் பம்புகள். வளைந்து நெளிந்து சென்ற அந்தப் பாதையின் இருபுறத்திலும் நாயர் தேநீர்க் கடைகள். நாடாரின் பலசரக்குக் கடைகள்; இண்டர்நேஷனல் முடிதிருத்தகங்கள்; சர்வதேச தையல் கடைகள்; பலரை உருப்படாமல் செய்த ஒரு நடிகரின் மூஞ்சியை பல கோணங்களில் காட்டும் போஸ்டர்கள் ஒட்டப்பட்ட தட்டிகளையே சுவர்களாகக் கொண்ட ரசிகர் மன்றம்; மேடு பள்ளமுமான கோடுபோல தென்னங்கீற்று அடைத்த மறைவிடங்கள்; அந்த மறைவிடங்களையே எல்லைச் சுவராகக் கொண்ட சேரிக் குடிசைகள். ஆங்காங்கே ஓடிக்கொண்டிருந்த பன்றிகள், நோயாளி நாய்கள்-இப்படி சாலையின் எல்லையின் ஓரங்கள் இரண்டும் சமத்துவம் இல்லாத கட்டிடங்களாய் நிரப்பப்பட்டிருந்தன. என்றாலும், அந்த ஒழுங்கீனமான கட்டிட வரிசைகளை புதைப்பது போல் அந்தக் கட்டிடம் கம்பீரமாய்

நின்றது. வாசலை மறைக்கும் பால்கனி, அதன் மேல் தளத்தில் டி.வி. ஆன்டனா, உள்ளே அடுக்கடுக்காய் அறைகள், தங்கம்போல் மஞ்சளாய் மின்னும் சோபாசெட். எதிரே ஒரு டிவி செட். கீழே ஒரு விசிஆர். மேலே ஒரு டூ இன் ஒன்.

அந்தக் கர்ப்பிணிப்பெண், உள்ளே போய் காலிங்பெல்லை அழுத்தினாள். கதவு திறக்கப்படாமலேயே, ஜன்னல் வழியாக ஒரு பெண் முகம், பேய் முகம் போல் அங்குமிங்குமாய் ஆடிக்கொண்டே பேசியது. அப்போது அதன் கழுத்தில் கிடந்த நெக்லஸ், ஜன்னல் கம்பிகளில் மோதி, 'குங்க்குங்' என்ற ஒலி எழுப்பியது.

"ஏய் சரோசா, ஒனக்கு எத்தனவாட்டி சொல்றது, பின்பக்கமா போகப்படாது?"

"பந்தலில பிரசவத்தை வச்சுக்க முடியாதே - "

சரோசா, அப்படிச் சொல்லிவிட்டுச் சிரிக்கத்தான் போனாள். ஆனால், சிரிப்பைக் கொடுப்பதற்காக உள்ளடங்கி விலகிப்போக வேண்டிய பற்கள், ஒன்றையொன்று கடித்துக்கொண்டன. இந்தத் தடிச்சி, இந்த வீடு 'குட்சயா' இருக்கப்போ, அந்த ஆசாமிக்கி சின்னவீடா வந்தவள். ஒண்டவந்த இந்தப் பிடாரி, இந்த வீட்டு லட்சுமியை விரட்டிட்டு. ஆரம்பத்துல கலக்கல கத்துக்கொடுத்தவளே இவதான். பொம்மனாட்டிக்கி பொம்மனாட்டியா உதவிக்கு வந்தவள். இப்ப என்னடான்னா டாவு காட்டுறா டாவு... 'அடியே கஸ்மாலம், நீ பூட்டிருக்குற கம்மலு, சுண்டல் கஞ்சியில வந்ததுடி... கழுத்துல பாம்புமாதிரி தொங்குதே நெக்கலசு 'ஊரலுல' வந்துதுடி. என்னய்யா உள்ள வரவேண்டாம்னு சொல்ற? இதுக்குப் பேருதாண்டி டைம்ங்கறது...'

சரோசா, ஜன்னலில் பதிந்த பூசணிக்காய் முகத்தை கொட்டக் கொட்ட பார்த்தபடியே, மனதிற்குள் அவளைக் கண்டபடி திட்டினாள். அந்தத் திட்டு, அவள் காதுகளுக்கு உரக்கவே கேட்டது. ஜன்னல்காரி இன்னும் கதவைத் திறக்காமல்

ஏதோ பதில் சொல்லப் போனபோது, இன்னொரு முகம் தோன்றியது. அது உடம்பை நிமிர்த்தியபோது தளதளப்பான வயிறு தெரிந்தது. கழுத்து செயின் தொப்புளை மறைத்தது. சரோசா அந்த முகத்திடம் முறையிட்டாள் :

"பாரு துரையண்ணே! அக்கா கதவ தெறக்கமாட்டக்காள்."

"அடேடே, சரோசாவா? ஒனக்காகக் காத்துக்காத்து கண்ணே நோவெடுத்துட்டுது. வழியிலே பழகாத 'நாய்' ஏதும் மடக்கிட்டோன்னு பயந்துட்டேன். ஏய் சாந்தி, கதவத்தெறமே."

"சாந்தி, சாந்தியில்லாமல் முனங்கிக்கொண்டே அந்தக் கதவை, வீறிட்டுக் கத்தும்படி இழுத்தபடியே திறந்தாள். சரோசாவோ சொந்த வீட்டுக்குள் நுழைவது போல, உள்ளே போனாள். துரையையும், பெரிய வீடாகிப் போன அவன் சின்ன வீட்டையும் ஒருக்களித்துப் பார்த்துவிட்டு, அவர்கள் நின்ற வரவேற்பு அறையைத் தாண்டி, இரண்டாகப் பிரிந்த ஒரு கிளை அறைக்குள் போனாள். வயிற்றில் ரப்பர் கயிற்றால் கட்டியிருந்த கால்பந்து பிளாடரை எடுத்து, அங்கிருந்த ஒரு மேஜையில் வைத்தாள். இதனால், பின்பக்கம் ரப்பர் கயிற்றின் பிடி தளர்ந்தது. பிட்டத்தில் பொருத்தப்பட்ட இன்னொரு பிளாடர் கீழே விழப்போனது. சரோசா அதைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள். பிறகு அதை மேஜை தொட்டிலில் கிடத்தினாள். இப்படி தனக்குத்தானே பிரசவம் பார்த்துக் கொண்டு, ஜாக்கெட்டை இழுத்துவிட்டு சுருங்கிப்போன பாவாடையை கால்வரைக்கும் பரப்பிவிட்டுக் கொண்டு, புடவையை கட்டினாள்.

சரோசா, பட்டறிவால் பேசினாள் :

"இனிமே ரூட்ட மாத்தணுமுண்ணா! பஸ்சுல ஏறப்போ ஏறுக்கு மாறா பார்க்கிறாங்க. நாவலூர் பக்கமும் ஒரே ரெய்டு. இரண்டு மணிநேரம் காத்திருந்தேன். ஸ்பாட்டுக்கு வராண்டாம்னு மணி சொல்லிட்டான். சவுக்குத் தோப்புக்குள்ள போகச் சொன்னான். அங்க வந்து சரக்கக் கொடுத்தான்."

"நீ சொல்றதும் சரிதான். இனிமே கடல்வழியா சரக்கக் கொண்டு வரணும். கர்ப்பிணிப் பொண்ணுவேடம் இப்போ எல்லாருக்கும் தெரிஞ்சிப்போச்சு."

"எனக்கு பயம்மா கீதுண்ணா... போலீஸ்ல அவ்வளவு ஒத தின்ன பொறகு வாய்க்கையே வெறுத்திட்டு. பழையபடி மாட்டிக்கிட்டா ஒடம்பு தாங்காதுண்ணா."

"தொழிலுல இதெல்லாம் சகசம்மே."

துரைக்கு, நாற்பது வயதிருக்கும். கறுப்பு என்றாலும், காக்கா பொன்கறுப்பு, துருத்திய வயிறு என்றாலும் அதைத் தூக்கி நிறுத்தும் உறுதியான மார்பெலும்பு. சரோசாவின் வயிறு மேலே பிரசவித்த சரக்குகளை கரங்களில் ஏந்தி முன் நடந்தான். சரோசா, அவன் பின்னாலேயே போய்க் கொண்டிருந்தாள். ஆறுதலுக்காகக் கூட ஒரு வார்த்தை சொல்லாமல், தொழில் தர்மத்தை அவன் சொல்லிக் காட்டியது, 'வேணுமுன்னா இருந்தா இரு, இல்லாவிட்டால் போ' என்பது மாதிரி அவளுக்குத் தோன்றியது. அவள் யோசித்து நடந்ததால் நிலைப்படி நெற்றியில் தட்ட, அதை தடவிவிட்டுக் கொண்டே குனிந்து பின்புற வரவேற்பறைக்கு வந்தாள். அங்கே கிடந்த இரண்டு நாற்காலிகளின் சட்டங்களிலும், இருகால்களையும் ஒருகால் மாதிரி போட்டுக் கொண்டு இரண்டுபேர் அட்டகாசமாய் கிடந்தார்கள். அவளைப் பார்த்ததும் தங்கள் பக்கம் வரும்படி கையசைத்தார்கள். அவளோ செல்லாக் கோபத்தை பொறுமையாக்கி, புறவாசலில் இருந்து கீழே குதித்தாள்.

புறவாசலையொட்டி ஒரு பெரிய பந்தல் போடப் பட்டிருந்தது. தென்னங்கீற்றிலான மூங்கில் பந்தல். மூன்று பக்கம் மறைத்து ஒரு பக்கத்தை வாயாகக் காட்டிக் கொண்டிருந்தது. எதிர்ப்புறம் கடலே ஒரு அடைக்கலம் மாதிரியும் காட்சியளித்தது. இந்தக் கடலிலிருந்து தோணிகளில் சரக்குகள் வருவதும் போவதும்

சகஜம். அந்தப் பந்தலுக்குக் கீழே ஓரடி உயரத்திற்கு மணல் பரப்பு. ஏழெட்டுபேர் தாறுமாறாகக் கிடந்தார்கள். ஒருவன் படுத்தக்கொண்டே குடித்துக் கொண்டிருந்தான். இன்னொருத்தன் குப்புறக் கிடந்தான். ஒருத்தன் கல்லுளிமங்கனாய் சுவரில் சாய்ந்திருந்தான். அத்தனைபேர் முன்னாலும் கண்ணாடிக் கிளாஸ்களில் வெள்ளித்திரவம் நிரம்பியிருந்தது. ஒரு அம்மைத்தழும்பு ஆசாமி வெளியே இருந்து உள்ளே வந்தான். இன்னொருத்தன், வீட்டுக்குள்ளேயிருந்து வெளியே வந்தான். வெளியேயிருந்து வந்தவன், வேர்க்கடலைப் பொட்டலங்களையும், சிகரெட் பாக்கெட்டுகளையும் கொடுத்தபோது, உள்ளேயிருந்து வந்தவன் நண்டுகளையும், இறால்களையும், மசாலா முட்டைகளையும் ஆவிபறக்கக் கொண்டு வந்தான். அந்தப் பக்கமாய் வந்த சரோசா முட்டுக்காலிட்டு உட்கார்ந்தாள். இதற்குள் துரை ஒரு கேனை கொண்டுவந்து, ஒரு கடிகார ஆசாமியிடம் ஒரு கிளாஸ் நிறைய ஊற்றினான். அந்த ஆசாமி சந்தேகம் கேட்டான் :

"ஏம்பா, இது நெசமாவே ஸ்பெஷல்தானா?"

துரை பதிலளிக்கப் போனபோது, சரோசா அந்த ஆசாமியின் முன்னாலிருந்த கிளாசைப் பிடுங்கினாள். மணல் இல்லாத வழுக்கைத் தரையில் நான்கைந்து சொட்டுக்களை ஊற்றினாள். ஒரு ஆசாமியின் முன்னால் கிடந்த தீப்பெட்டியை அங்கிருந்து படுத்தபடியே, கையில் கவ்விக்கொண்டு நிமிர்ந்தாள். சாராயத்துளிகள் மேல் தீக்குச்சியை உரசி மேலே பிடித்தாள். அந்தத் திரவம் குப்பென்று பற்றி எரிந்தது. இனந்தெரியாத ஒரு 'கிக்' நெடி - கடல் காற்றும், கருவாட்டு வாடையும், சடசடவென்று சத்தம் போட்டு அந்தத் திரவத்திற்கு ஒரு மவுசைக் கொடுத்தன. சரோசா வியாக்யானம் செய்தாள் :

"எங்கத் தொழிலு மோசந்தான், இல்லங்கல. ஆனால் அதுலயும் ஒரு நியாயம் கீது. ஸ்பெஷல் கிளாஸ் பத்து ரூபா, சாதா

அஞ்சு ரூபா. வேணுமுன்னா ரெண்டையும் குடிச்சு, டெஸ்ட் பண்ணிக்கோ; இல்லாட்டி நடையக்கட்டு."

அப்போது முப்பது, முப்பந்தைந்து வயது ஆசாமி ஒருவன் உள்ளே வந்தான். குறுந்தாடிக்காரன். சரோசாவின் அப்போதைய வயிறுமாதிரி அவனுடைய வயிறும் பெருத்திருந்தது. சட்டென்று சட்டையைத் தூக்கி மறைத்து வைத்திருந்த நான்கு தேங்காய்களைக் கீழே வைத்தான். பனியனுக்குள் கிடந்த, ஒரு சீப்பு வாழைப்பழத்தையும், இரண்டு ஆப்பிள் பழத்தையும் எடுத்துவைத்தான். சரோசா சிரித்துக் கொண்டே கேட்டாள்:

"என்ன கோவிந்தண்ணே, சுண்டக்கஞ்சி கிடைக்கலியா?"

"அத ஏம்மா கேக்கிறே; அந்த கஞ்சிக்காரன், நானு பத்து வருஷம் சர்வீசு போட்டிருக்கறதையும் கணக்கில எடுத்துக்காம வெரட்டிட்டான். காசு இல்லாகாட்டி என்னம்மா? சரக்குக்கு சரக்கு கொடுக்கிறப்போ வாங்கினா என்னம்மா? சோதாப்பய, என்னைய சாதாப்பயலா நினைச்சிட்டான்... தூ."

சரோசா, என்ன செய்யலாம் என்பது போல் துரையைப் பார்த்தாள். துரை, அந்த சுண்டக்கஞ்சிக் காரனோடு ஒருவார காலமாக நிழல் யுத்தம் செய்து கொண்டிருக்கிறான். ஒரு சொம்புக் கஞ்சியை அவன் பதினைந்து ரூபாயிலிருந்து பத்து ரூபாய்க்கு இறக்கியதால், இவன் கலக்கல் விற்பனைக்குக் கஷ்டம் வந்திருக்கிறது. இதனால், இரண்டு கோஷ்டிகளும் கம்பு, அரிவாள் இல்லாமல் மோதிக்கொண்டன. ஆகையால் இப்போது அவன் ஜாக்கிரதையாய் பேசினான் :

"இந்தாப்பா, ஊர்க் கத வேணாம். தேங்காய் ரெண்டு ரூபா; வாயப்பயம் அஞ்சு ரூபா; ஆப்பிள் எட்டணா. இஷ்டமிருந்தாக் கொடு. இந்தக் கணக்குப்படி ஒனக்கு ரெண்டு கிளாஸ்கூடத் தேறாது. ஆனாலும் தாரேன், சம்மதமா?"

கோவிந்தின் சம்மதமில்லை என்பது போல் வாயை பன்றி உதடுகள் மாதிரி ஆக்கிக் காட்டினான். பிறகு எகிறப்போனான். எகிறினான்.

"இன்னாடா துரை... பெரிய தொரைன்னு நெனைப்பா? நேத்து பெய்த சாராய மழையில இன்னிக்கி வந்த காளான் பய நீ... நாலு ரூபா தேங்காய ரெண்டு ரூவாய்க்கி கேக்கிறீயே, இந்தக் குப்பத்துல நீ மட்டும்தான் காய்க்கிறேங்கிற திமிரா, இன்னாடா?"

துரை, அவனை அலட்சியமாகப் பார்த்தான். 'நீயெல்லாம் தாங்குவிடாயா' என்பது மாதிரி. இதற்குள் கோவிந்தின் உள்ளே 'சரோ... சரோ...' என்ற சத்தம் கேட்பதைப் பார்த்து எட்டிப் பார்த்தான். பிறகு வாயை சுருக்கி, தலையை குறுக்கி அவர்களின் கால்பக்கத்திற்கு இணையாக தலையைக் கவிழ்த்துக்கொண்டே கெஞ்சினான் :

"நீங்கோ அந்தண்ட இருக்கத பார்க்கல சாரே; மன்னிச்சிடுங்கோ சாரே."

உள்ளேயிருந்து ஒரு குரல் அதட்டியது :

"ஜல்தியா குடிச்சிட்டு ஜல்தியா போயேன்யா. வெளியில போய் நாங்க இருக்கோம்னு ஔறி வச்சே, கையில காப்புதான்."

"அய்யோ சாரே, அப்படிச் செய்வேனா? உங்கள இன்னிக்கி நேத்துமா பாக்கேன், எத்தன வருஷமா பாக்கேன்."

அந்தப் பந்தலில் மரத்தூணில் சாய்ந்தபடி கல்லுளிமங்கனாக இருந்த ஒருத்தர், இப்போது கீழே விழுந்தார். பறவைகள் மாதிரி விநோதமான சத்தங்களை எழுப்பினார். இதற்குள் அம்மைத் தழும்பனும், டவுசர் போட்ட ஒருவனும் துரையைப் பார்க்க, அவன் கண்ணடித்தான். அந்த ஆசாமியின் சட்டைக்குள் கைவிட்டு ஐநூறு ரூபாய் நோட்டுகளில் இரண்டை எடுத்து சுருட்டு மாதிரி காதில் மடித்து வைத்துக் கொண்டு, மூன்று

நோட்டுகளை அவரது பைக்குள் திணித்துவிட்டு, அவரை அலாக்காகக் தூக்கிக்கொண்டு வெளியே போனார்கள். இந்தச் சமயத்தில் உள்ளே இருப்பவர்கள் "சரோ... சரோ... கமான்" என்று சத்தமிட்டார்கள்.

சரோசாவுக்கு எரிச்சலாக இருந்தது. கஷ்டப்பட்டு கர்ப்பிணியாய் வந்த தன்னை அலட்சியமாகப் பேசி அந்த உழைப்பை அங்கீகரிக்காத துரையின் மீது ஒரு கோபம். சொந்தப் பெண்டாட்டியைக் கூப்பிடுவது போல கூப்பிடும் போலீஸ் துரைமார்கள் மீது இன்னொரு கோபம். அடிஅடியென்று அடித்துவிட்டு, இப்போது அணைக்கத் துடிக்கும் அந்தக் கரங்கள் அவளுக்கு வெட்டரிவாளாகத் தோன்றின. இவ்வளவுக்கும் காரணம் யார்? அவன்... அந்தக் குயந்தப் பய அவன விடப்பிடாது...

சரோசா தனக்குள்ளேயே அழுது கொண்டிருந்தாள். போதாக் குறைக்கு, துரை அண்ணன் வேறு' அவள் கர்ப்பிணி கஷ்டத்தை கண்டுக்காமல் அலட்சியப்படுத்தியது அழுகையை அழுத்தமாக்கிறது. இந்தச் சமயத்தில் அந்தப் பெரியவரை வழியனுப்பி வைத்துவிட்டு மீண்டும் உள்ளே வந்தவர்கள், காதில் மடித்து வைத்த இரண்டு நோட்டுக்களை துரையிடம் கொடுத்துவிட்டு, சரோசாவைப் பார்த்து ஒரு தகவல் சொன்னார்கள் :

"சரோ! நீ சொல்லுவியே கொழந்தப்பய 'இளங்கோ', கோவில் பக்கமா ரவுண்டடிச்சுட்டு நிக்காம்மே"

சரோசா ஆணையிடுவது போல் பேசினாள் :

"நான் பஸ்ல வரும்போதே அந்த கஸ்மாலம் பாலோ பண்ணுவதுபோல தோணிச்சு. வீட்டுக்குப் போறான்னு நினைச்சது எவ்வளவு தப்பாப்போச்சி. என் நிம்மதியக் கெடுக்கத்துக்குன்னே முளைச்சிருக்கான் அந்த சோதாப்பயல். என்ன ஏதாவது செய்யும் முன்னாடி, நீங்க அவன ஏதாவது செய்துட்டு வாங்கோ."

அந்த இருவரும் கீழே கிடந்த இரண்டு உருட்டுக் கட்டைகளை எடுத்துக்கொண்டு புறப்படப்போனார்கள். "பாவம், அல்பாய்சு அவனுக்கு" என்று ஒருவன் சொல்லிவிட்டு வெறிச்சிரிப்பாய் சிரித்தான்.

## 14

அந்தப் பந்தல் மாளிகையிலிருந்து வெளியேறப் போன இரண்டு கிங்கரர்களும் உடம்பை குழைவாக்கிக் கொண்டே குழையடித்தார்கள். "வாங்கண்ணே வாங்கண்ணே" என்று பரபரப்பான குரலோடு, கண்ணுதவி இல்லாமலே பின்னோக்கி நடந்தார்கள். உள்ளே வந்தவர், அந்த மணல் பரப்பில் வளையம் போட்டுக் கிடந்தவர்களை நோட்டமிட்டார். கருவாடும், கிளாசுமாக இருந்த அவர்கள், அவரை கண்டுக்கவில்லை. ஒரேயொருத்தர் நாலு கிளாசுகளை உள்ளே தள்ளியபிறகு ஞானத்தின் உச்சநிலையில் இருந்தார். பரம சாதுவாகத் தோன்றிய அவர், அந்தப் புதிய மனிதரைப் பார்த்து ஆசீர்வாதம் செய்ய கையை தூக்கியபோது, துரை அந்த கைக்குள் இன்னொரு கிளாசை வைத்தான்.

உள்ளே வந்தவருக்கு, ஐம்பது வயதிருக்கலாம். முகம் காய்ப்புக் காய்ப்பாயிருந்தது. தலை பம்மைபோல் தோன்றியது. ஆசாமி கொஞ்சம் குள்ளம்; ஆனாலும் அழுத்தமான உடம்பு. பழுத்த மஞ்சள் நிறத்தில் சபாரி உடை. தலைமட்டும் கொக்கு மாதிரி துண்டாகத் தெரிந்தது. ஆக்கல் (ஊறல்), காத்தல் (காய்ச்சல்) அழித்தல் (விற்றல்) ஆகிய முப்பெரும் தொழில்களைச் செய்யும் மூர்த்திமும். ஒருகாலத்தில் பைசாக்களுக்காக ஏங்கியவரை, இப்போது லட்சங்கள் ஏக்கமாய் பார்க்கின்றன. பேங்கில் உள்ள லாக்கர்கள் ராமனுக்குக்

காத்திருந்த அகலிகை போல் காத்திருக்கின்றன. விருகம்பாக்கத்திற்கு அப்பால் உள்ள காட்டுப் புதர்களில் தலைகளை மட்டும் காட்டிக் கொண்டிருக்கும் நூற்றுக்கணக்கான பானைகளையும், மகாபலிபுரம் சாலைகளில் மயானப்பகுதிகளில் காய்ச்சும் பானைகளையும், நகரம் எங்கும் நடமாடும் வேன்களையும் ஆதிக்கம் செய்பவர். ஆனாலும், அவரிடம் சில நல்ல குணங்கள் உண்டு. குடிக்க வைப்பாரே தவிர, அடிக்கமாட்டார். அடைக்கலம் என்று வந்தவர்களைக் காட்டிக்கொடுக்க மாட்டார். இப்படித்தான் பேசிக்கொள்கிறார்கள். பார்ப்பதற்கு மனிதர் பரமசாது. கேட்பதற்கோ இனிமையான குரல்... பழகுவதற்கு சர்வகட்சி மனிதர். அவரிடம் நன்கொடை வாங்காத கட்சிகளோ, பிரமுகர்களோ இல்லை என்று சொல்லலாம்.

சரோசா, ஏதோ பேசப்போனபோது, துரை அவள் வாயை தன்கழுத்தால் மறைத்தபடி, "வாங்கண்ணே, உள்ளே வாங்கண்ணே! நாய் மாதிரி ஓடிவர நானிருக்கப்போ... நீங்க எதுக்கண்ணே இங்க வந்தீங்க" என்று அசல் நாய்மாதிரி பிட்டத்தை ஆட்டிக்கொண்டு, அவரை நெருங்கிப் போனான். அந்த மனிதர் "ஏன் நான் இங்க வரப்பிடாதுங்கிறீயா" என்று சொல்லி விட்டுச் சிரித்தார். கடிகார தங்கச்செயினையும், அதற்கு இணையாகக் கட்டியிருந்த ஒரு தாயத்தையும் தடவி விட்டுக்கொண்டார்.

"உள்ளே வாங்கண்ணே!"

"இப்போ அதுக்கு நேரமில்லை."

துரைக்குப் புரிந்துவிட்டது. அண்ணன், கணக்கு வழக்குப் பார்க்க வரல. போலீஸ் ரெய்டப்பத்தி எச்சரிக்கவும் வரல. அப்படி வந்திருந்தா முன்பக்கமாய் வந்திருப்பார். அங்கேயே சோபாசெட்டில் உடம்பைக் கிடத்திக்கொண்டு சாந்தியோடு சிரிப்பும் கும்மாளமுமாய் பேசிக் கொண்டிருப்பார். 'துரை எங்கே' என்று அவளிடம் ஒப்புக்குக்கூட கேட்டிருக்க மாட்டார். அண்ணனின்

ரத்தக்கண்களைப் பார்க்கும்போது அவர் 'அதுக்குத்தான்' வந்திருக்கார். துரை எண்ணெயும் நெய்யுமாய் குழைந்தான்.

"அண்ணே, நம்ப ஆட்களுக்கு சொல்லியனுப்பட்டுமா?"

"இதை கேட்டுக்கிட்டா செய்யணும்?"

துரை உள்ளே ஓடிப்போய் ஒரு நாற்காலியை எடுக்கப்போனான். பிறகு இந்த மாதிரி சமயங்களில் அண்ணன், ஒற்றைக்காலில் நின்றாலும் நிற்பாரே தவிர, உட்காரமாட்டார் என்று உள்ளே ஓடினான். ஜன்னல் வழியாக அண்ணனைப் பார்த்த தனது வீட்டுக்காரியை, அவர் கண்ணில் காட்டாமலே உள்ளே இழுத்துப்போனான். வெளியே நின்ற அண்ணனின் கண்களில் அப்போதுதான் சரோசா விழுந்தாள். அன்போடு கேட்டார்:

"என்ன சரோசா டல்லா இருக்கே?"

"அண்ணாத்தே இருந்தும், நானு டல்லாப்போற தலைவிதி வந்துட்டு."

"நானும் கேள்விப்பட்டேன். இந்த துரை கையில என்ன வளையல் போட்டுகினு இருந்தானா?"

"பூட்டுப்பூட்டு நச்சிட்டாங்கண்ணே. முதுக பெண்ட் எடுத்துட்டாங்கண்ணே. இன்னும் தலைய திருப்ப முடியலண்ணே. அண்ணன் இப்படிப் பேரும் புகழுமா இருந்தும் நானு பொம்மனாட்டி நாதியில்லாம போயிட்டேண்ணா."

அண்ணன், சரோசாவின் பக்கம் போகப்போனார். பிறகு அது தனது தகுதிக்குக் குறைவு என்பதுபோல் அவளை தன்பக்கம் வரும்படி கையாட்டினார். அவள் வந்ததும், அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தபடியே ஆறுதல் சொன்னார்:

"நீ சொல்லிட்டே.... நான் சொல்லல. அந்தச் சமயம் பார்த்து அண்ணன்வேற ஆந்திராவுக்கு அரசியல் விஷயமாய் போயிட்டேன். இந்த சோமாரி துரை, ஒரு டெலிபோன்ல எனக்குச் சொல்லி யிருக்கலாம். அனுமார் சஞ்சீவி மலைய தூக்கிக்கிட்டுப் போனதுமாதிரி நீ இருந்த போலீஸ் ஸ்டேஷனையே தூக்கிக்கிட்டு வந்து ஒடைச்சிருப்பேன். இப்பவும் குடிமுழ்கிடல. ஸ்டேஷன்ல ஒன்ன எந்தெந்தப் பசங்க ஒதச்சாங்களோ அவங்க நம்பர்ங்களை என்கிட்டக் குடு... அப்புறம் என்ன நடக்குதுன்னு பாரு. ஏண்டா துரை ஒன் பொண்டாட்டிய போலீசுல இப்படி கூட்டிக்கிட்டுப் போய் ஒதுச்சா நீ சும்மா இருப்பியாடா கயிதே, கயிதே. சரோசா நம்மப் பொண்ணுடா."

கையாட்களுக்குத் தகவல் அனுப்பிவிட்டு மூச்சிறைக்க அங்கு வந்த துரை, அண்ணனை பயந்து பார்த்தான். அவன் சிந்தனையெல்லாம் அண்ணனை சம்சாரம் பார்க்கிறாளா என்பதில்தான் இருந்தது. அந்தக் கணக்கில், சரோசா கணக்கைக் கழித்துவிட்டான்.

அண்ணன், அதட்டலோடு பார்த்தபோது, துரை பேச்சை மாற்றினான். லாக்கப்பிலிருந்த சரோசாவை தான் மீட்பதற்குப் புறப்பட்டபோது தனக்குன்னு வாய்ச்சவள் 'போகாதே போகாதே என் கணவா' என்று தன்னை அழவைத்துப் பேசியதை அண்ணனிடம் எப்படிச் சொல்வது? ஆகையால் அவன் பேச்சை மாற்றினான்.

"ரெய்டு வராங்கன்னு சொல்றாங்கண்ணே!"

"நான் கேட்டதுக்குப் பதில் சொல்லாம, பட்டுக்கோட்டைக்கு வழி கேட்டால் கொட்டப்பாக்கு எட்டணா என்கிற கதையில பேசுறியே? என்ன சரோசா! ஏதோ எங்கிட்ட சொல்லணும்போல நிக்கிறே?"

"ஆமாண்ணே... என்ன போலீசுல பிடிச்சுக்கொடுத்த ஒரு பிள்ளாண்டான் ரோதனை தாளலண்ணே. அண்ணன் கம்பெனியில சரக்க எடுத்துக்கிட்டு பஸ்சுல கர்ப்பிணியா சிங்காரிச்சுட்டு வந்தேன்னா, இவன் என்னடான்னா மோட்டர் பைக்கில பாலோ பண்றான். இப்பகூட மெயின் ரோட்ல நிக்கானாம். எனக்கு பயமா இருக்குண்ணே. பழையபடியும் உள்ளே போயிட்டா அப்பால நயினா கதி?"

துரை, சரோசாயை அண்ணன் போனபிறகு தாளிக்க வேண்டும் என்று உடனடியாகத் தீர்மானித்தான். ஆனால், சரோசாவோ கண்கள் துருத்தி நிற்க, வேசாய் விம்மப்போனாள். அதற்குள் அண்ணன், அவள் தலையை தடவியபோது, அவளுக்கு ஒரு பாதுகாப்பு உணர்வு ஏற்பட்டது. அவரும், அங்கே நின்ற அம்மைத்தழும்பனை அதட்டினார் :

"ஏண்டா டேய், வெள்ளையா! நம்ம ஏரியாவில, அவன் நம்மள டபாய்க்கிறான்னா என்னடா அர்த்தம்? இன்னுமா அந்தப் பயல விட்டுவச்சிருக்கீங்க? உங்களால முடியாட்டி சொல்லுங்கடா சோதாப்பசங்களா."

"அவன ஒழுங்கு பண்ணத்தாண்ணே புறப்பட்டோம். அதுக்குள்ளே அண்ணன் வந்துட்டீங்க. நாலு நாளைக்கி முன்னேயே முடியவேண்டிய கேசு. சரோசாதான் தடுத்துட்டாள்."

"நெசந்தாண்ணே, இவங்கோ அவன சாவடியா அடிச்சிட்டால், அப்பால பங்காளக்காரங்க என்னை போலீசுல ஒப்படைச்சிடப் படாதேன்னு பயந்தது நிசந்தாண்ணே. என்னோட பயத்தில நியாயமிருக்குண்ணே. ஏன்னா, பழகின போலீசே பயங்கரமா அடிச்சிட்டாங்கண்ணே."

"போலீஸ், பெரிய போலீஸ்! நானு பார்க்காத போலீசா? பொறுப்ப என்கிட்ட விட்டுடு. அவன் பங்காளவக்கூட

இடிச்சிக்காட்டுறேன். சில விஷயங்களுல நாம முந்திக்கணும். அவன ஒன்னை பாலோ செய்யறது, என்னை செய்யறதுமாதிரி. இன்னிக்கே அவன ஒரு வழி பண்ணிடறேன்."

அண்ணன், சபாரி சட்டையை தூக்கிப்பிடித்து, பனியன் போடாத வயிற்றைக் காட்டியபோது, பத்துப்பதினைந்துபேர் தற்செயலாய் வருவதுபோல் ஒருவர்பின் ஒருவராக வந்தார்கள். டீகாய் பேண்ட் போட்டு, சட்டைகளை இன் செய்த மூன்று பேர்... பின்பக்கமாய் முடிவளர்த்த மூன்றுபேர்... அகலவாக்கில் இரண்டு, நீளவாக்கில் நான்கு... அத்தனைபேரும் அண்ணனை ஒரே கண்ணாய் பார்த்தார்கள். ஆனால் அண்ணனோ சுற்றும்முற்றும் பார்த்தார். அதைப் புரிந்துகொண்ட துரை, இன்னும் குடிக்கக் கேட்ட பரமசாது மனிதரையும், மணலில் புரண்ட ஒருவரையும் கழுத்தைப் பிடித்து தூக்கியபோது நான்கைந்துபேர் அவர்களை மென்மையாகப் பிடித்துக் கொண்டு வெளியே போனார்கள். வெளியே கோவிந்தன் கூப்பாடு போட்டான். "இன்னாய்யா பொண்டாட்டிகூட இப்படி தொடமாட்டாள்... அப்படி தொடறீங்களே. டச் பண்ணாதய்யா. நீயுமாச்சு உன் சரக்குமாச்சு; ஒரு சொம்பு சுண்டக்கஞ்சிக்கி ஒன் ஸ்பெஷலு ஜமாய்க்குமா? இன்னாய்யா ஸ்பெஷலு... பொல்லாத ஸ்பெஷலு."

வெளியே போட்ட கூப்பாட்டை அண்ணன் சிரித்துக் கொண்டே உள்வாங்கினார். பிழைச்சுப் போகிறான் என்பது மாதிரியான சிரிப்பு. எவரையும் தன்னால் எதுவும் செய்யமுடியும் என்றாலும், அப்படி முடியக்கூடியதை செய்யாமல் இருக்கும் தனது பெருந்தன்மையை வெளிப்படுத்தும் சிரிப்பு. அந்தச் சிரிப்பு போனதும், அண்ணன் கிசுகிசுப்பாகப் பேசினார் :

"இன்னிக்கி நைட்ல கரைக்டா ஒருமணிக்கு, நம்ம லாரி தியாகராய நகர்ல ஒரு பங்களாவுக்குப் போகுது. அந்த வீட்டுல இருக்கிறவங்கள நாம வழக்கமா செய்யறது மாதிரி செய்துடணும்.

நம்ம ஆசிரமத்துக்கு எட்டு மணிக்குள்ள வந்திடுங்க. இந்தா துரை, ஆயிரம் ரூபா... பசங்களுக்கு கேக்கறதயெல்லாம் கொடு... ஏழுரைக்கெல்லாம் அவங்கள வழியனுப்பி வைக்கிறதுக்கு நீதான் காரண்டி."

"சரிண்ணே! எந்த பங்களா? என்ன விஷயமாய்?"

"ஒனக்கு சம்பந்தமில்லாத விஷயம்... ஆனாலும் சொல்றேன். அந்தப் பங்களாவை ஒரு சேட்டு இருபது லட்ச ரூபா கொடுத்து வாங்கியிருக்கான். ஆனா அந்த வூட்டுல பத்து வருஷமா வாடகைக்கு இருக்கிற சோமாரி பெரிய ஆபீசராம். காலிபண்ண மாட்டானாம். கோர்ட்டுக்குப் போடான்னு சொல்லிட்டானாம். சேட்டு, என்னையே கோர்ட்டா நினைக்கிறான். காலி பண்ணாதவனை 'காலி' பண்ணாம முடியுமா?"

அனைவரும், அண்ணனை அதிசயித்துப் பார்த்தார்கள். சிலர் விசிலடித்துக் கொண்டார்கள். துரை தவிர மற்றவர்களுக்குக் கொண்டாட்டம். ஆசிரமம் என்று சொல்லப்படும் அனாதரவான இடத்தில், உடற்பயிற்சி நிலையம் என்ற பெயரில் உள்ள ஒரு கல் கட்டிட வீட்டுக்குள் இருக்கும் சைக்கிள் செயின்கள், பட்டாக்கத்திகள், உருட்டுக்கட்டைகள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு லாரியில் போகவேண்டும். அண்ணன் காட்டுற பங்களாவில இருக்கிற வங்களை ராத்திரியோட ராத்திரியா தூக்கித்தூக்கி லாரியில போடணும். உயிருக்கு ஆபத்து இல்லாம ஊமைக் காயங்களாய் ஏற்படுத்தி, தட்டுமுட்டுச் சாமான்களோட ஏத்தணும். அப்புறம் தெற்கே செங்கல்பட்டுப் பக்கமோ, வடக்கே எண்ணூர் பக்கமோ நடுக்காட்டுல விட்டுடணும். ரோந்து போலீஸ் பார்த்தால், அண்ணன் கவனிச்சுக்குவார். அந்த வாடகைக்கார ஆபீசரு குடும்பத்தோட கோர்ட்டுக்குப் போனால்...? அண்ணனுக்கு அதுக்குன்னே வக்கீலுங்க இருக்காங்க. அப்படிப்பட்ட ஒரு வீட்டுல இப்படிப்பட்ட ஒரு குடும்பம் இல்லவே இல்லன்னு நிரூபிச்சுடுவாங்க.

கையாட்கள், ஆளுக்கு ஆயிரம் ரூபாய் கிடைக்கும் என்று ஆனந்தக் கூத்தாடியபோது, துரை மட்டும் வயிற்றைத் தடவினான். அண்ணனுக்கு இந்த விவகாரத்தில் குறைஞ்சது அய்ந்து லட்ச ரூபாய் கிடைக்கும். இந்தப் பசங்களுக்கு மொத்தம் இருபதாயிரம். எனக்கு அஞ்சே அஞ்சாயிரம்... அற்பக்காசு. அப்புறம் அவ்வளவும் முள்ளங்கிப் பத்தையா அண்ணனுக்கே! அட கண்றாவியே! இன்னாய்யா நியாயம்?

அண்ணன், தனது மோவாயை மோப்பம் பிடிப்பதைப் பார்த்த துரை, சமாளித்தான். "வூட்டுக்குள்ள வாங்கண்ணே" என்று உள்ளே நடமாடிய வீட்டுக்காரியை நோட்டம் போட்டபடியே கேட்டான், நானு இல்லாதப்போ முன்பக்கமா வந்து அந்த முண்டக்கிட்ட குழையுறது. இருக்கப்போ பின்பக்கமா வாரது... இந்த அண்ணன் எந்தப் பக்கத்துல சேர்த்தி?

அண்ணன், லேசாய் புன்முறுவல் செய்தார். பிறகு ஒரு ஐம்பது ரூபாய் நோட்டை சரோசாவின் கைகளில் திணித்துவிட்டு, "சீக்கிரமா வாங்கடா, முடிச்சப் பொறவு குடிக்கலாம்; குடிச்சப் பொறவு முடிக்க முடியாது" என்று சொல்லிவிட்டு வெளியேறினார்.

அந்த செட்டு, அண்ணன் பின்னால் இப்போது போகக்கூடாது என்பதைப் புரிந்துகொண்டு அங்கேயே நின்றது. ஆனால், அண்ணனுடன் உருட்டுக் கட்டைகளோடு நான்கு பேர் புறப்பட்டார்கள். அவர்களுக்கு எதிரே வந்த பன்றிகளையும், கோழிகளையும் விரட்டியபடியே வழியமைத்துக் கொடுத்தார்கள். அண்ணன் கோவில் வளாகத்திற்கு வெளியே வந்தபோது, அவர் முன்னால் ஒரு மாருதி கார் வந்து நின்றது. உட்காரப்போன அண்ணனைப் பார்த்துக் கண்ணடித்து, அருகேயுள்ள ஒரு விடுதியில் இளங்கோ ஒரு சர்பத்தையோ, குளிர்பானத்தையோ உறிஞ்சிக் கொண்டிருப்பதைச் சுட்டிக்காட்டினார்கள்.

அண்ணனும் அங்கே பார்த்து லேசாய் தலையாட்டிவிட்டு, ஒருவன் காதில் ஏதோ கிசுகிசுத்தார். மாருதி, காற்று வேகத்தில் பறந்தது.

## 15

அண்ணனை வழியனுப்பி வைத்துவிட்டு, அந்த நால்வரும், அந்த விடுதிப் பக்கமாக வந்தார்கள். வரிசையாக உள்ள மூன்று விடுதிகளில் முக்கியமான விடுதி அது. அங்கே வகுப்பறை போல் திறந்தவெளியில் நாற்காலி மேசைகள் போடப்பட்டிருந்தன. ஒரு பாட்டிலுக்குள் கொக்கு மூக்கு மாதிரியான ஸ்ட்ராவை வைத்து உறிஞ்சிக்கொண்டிருந்த இளங்கோவை நின்ற இடத்தில் நின்றபடியே "டாய் ஒன்னத்தான், இங்க வாடா" என்றனர்.

விடுதிக்காரர் எதுவும் நடக்காதது போல், முகத்தை முதுகாக்கிக் கொண்டார். அங்கே உட்கார்ந்திருந்த டூரிஸ்ட்கள் அவன் நண்பர்கள் அவனைக் கூப்பிடுவது போல் நினைத்தார்கள். தலைநிமிர்ந்த இளங்கோ, புரிந்துகொண்டான். அதேசமயம் அவர்களிடம் சரோசாவை. தான்தான் மீட்டுக் கொடுத்தது என்று ஆதியோடு அந்தமாகச் சொன்னால், அவர்களை சமாதானப்படுத்த முடியும் என்று நம்பினான். ஆனாலும் உள்ளே ஒரே உதறல். மெல்ல எழுந்து அவர்களை சிநேகிதமாகப் பார்த்துக்கொண்டு அருகே போனான். அங்கே நிறுத்தி வைத்திருந்த தனது பைக்கில் கையைப் போட்டுக்கொண்டே அவர்களிடம் அவன் பேசப் போனபோது, அந்தக் கும்பல் அவனை மல்லாக்கத் தள்ளியது.

இளங்கோ மட்டும் மல்லாக்க விழவில்லை. அவன் ஆதாரமாகப் பற்றிய பைக்கும் அவன்மேல் விழுந்தது. அவன் அந்த

வாகனத்திற்குள் அங்குமிங்குமாய் நெளிந்து கொண்டிருந்தபோது, இரண்டு பேர் வந்து பைக்கை அவனோடு சேர்த்துத் தரதரவென்று இழுத்தார்கள். பிறகு அந்த பைக்கைத் தூக்கி வேறுபக்கமாய் தள்ளினார்கள். இரண்டு பேர் பெரிய பெரிய கற்களை எடுத்து அந்த பைக்கின் சக்கரங்களிலும், கண்ணாடிகளிலும் போட்டார்கள். கண்ணாடிச் சிதறல்கள் அங்குமிங்குமாய் துள்ளின. ஒருவன் சக்கரங்களின் டயர்களில் காற்றைப் பிடுங்கிவிட்டான். வேலை இல்லாமல் இருந்த இரண்டுபேர் லேசாய் தலையைத் தூக்கிய இளங்கோவை முடியைப் பிடித்துத் தூக்கினார்கள். ஒருவன் வாயில் குத்துவிட்டான். இன்னொருத்தன் அவன் இடுப்பிலும் காலிலும் உருட்டுக்கட்டையால் அடித்தான். இளங்கோ சுருண்டு விழுந்தான். இரண்டு கண்களுக்கும் இடையே இரண்டு முட்டிக் கைகளையும் வைத்துக்கொண்டு விழித்தான். சத்தம் போட வேண்டும் என்றோ, எதிர்த்து அடிக்க வேண்டும் என்றோ அவனுக்கு எண்ணம் வரவில்லை. தட்டுத்தடுமாறி எழப்போன அவனை மீண்டும் தரையில் ஒரு உதை கொடுத்துக் கிடத்தினார்கள்.

அங்குமிங்குமாய் நடமாடிக் கொண்டிருந்தவர்கள், சிறிது தொலைவில் ஒன்று சேர்ந்து கும்பலானார்களே தவிர, அந்த 'உதைக் களத்தை' நெருங்கவில்லை. வேடிக்கை பார்ப்பதுபோல் போன கார்களை, பின்னிருக்கை மனிதர்கள், முன்னிருக்கை டிரைவர்களின் முதுகுகளைத் தட்டி அவசரப்படுத்தினார்கள். பல பெட்டிக் கடைகள் மூடப்பட்டன. சில்லரைக் கடைக்காரர்கள் எதிர்ப்பக்கம் குனிந்து கொண்டார்கள். சில கடைகள் எதுவுமே நடக்காதது போல் அப்படியே திறந்திருந்தன. வீட்டு வேலைகளுக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த பெண்கள், விசனத்தோடு நின்றார்களே தவிர, அந்த அடாவடியை தட்டிக் கேட்கவில்லை. தொலைதூரத்து வீடுகளிலும் உன்னிப்பான

இரண்டு கால் கூட்டங்கள். இதற்கள் "ஏண்டா வேடிக்கை பார்க்கிறீங்கோ? போங்களேண்டா சோமாறிங்களா, சோதாப்பசங்களா" என்று இளங்கோவை அடித்தவர்களில் ஒருவன் இளைப்பாறும் வகையில் எகிறியபோது, நெருங்கி நின்ற ஒரு சின்னக் கூட்டமும் சின்னாபின்னமாகியது.

ஆட்டோக்களும், கார்களும், ஆங்காங்கே மனித நடமாட்டமும் மொய்த்த கடற்கதைச் சாலைக்கு அருகேயுள்ள புதர்ப் பகுதியை நோக்கி அவனை காலால் எத்தியெத்தி உதைத்துதைத்து, கால்பந்தை அடிப்பதுபோல் அடித்துக் கொண்டே போனார்கள். பிறகு அவனை தூக்கி நிறுத்தி, அவன் கைகளை இரண்டு பேர் பிடித்துக்கொள்ள, பின்னால் இரண்டு பேர் முதுகில் காலாலும் கையாலும் எகிற, அவனை புதர்ப் பகுதிக்குக் கொண்டு வந்தனர். கருவேல மரச்செடிகள் கொண்ட அந்தப் புதரில் அவனைக் குப்புறத்தள்ளினார்கள். அவன் உடலெங்கும் முட்கள் ஊடுருவின. ஒரு முட்கிளை அவன் வாய்க்குள் புகுந்து பற்களுக்குள் ஊடுருவி நாக்கைத் துளைபோட்டது. அப்படியும் விடாமல் அந்தப் 'போராளிகள்' அவனை பின்பக்க சட்டைக்காலரை கழுத்தோடு சேர்த்துப் பிடித்திழுத்தார்கள். ஒருவன், அவன் தலைமுடியை பிடித்துப் பிடித்து ஆட்டியபோது இன்னொருத்தன் அவனை முட்டிக்கு முட்டி வாங்கினான். போலீசாரிடம் இப்படி சில சமயம் வாங்கிக் கொண்ட அவர்கள், அதே விகிதாச்சாரத்தில் அவனுக்குத் திருப்பிக் கொடுத்தார்கள். அடிக்குஅடி 'சோமாரி, சோதா' என்ற வார்த்தைகள். 'டேய், டாய்' என்ற பிளிறல்கள். எழுதமுடியாத கெட்டகெட்ட வார்த்தைகள். இளங்கோ மூச்சற்று, முனங்கலற்றுக் கிடந்தபோது, ஒருத்தன் அவன் கை கடிகாரத்தைக் கழற்றிக் கொண்டான். டவுசர் பையன் அவன் சட்டைப்பையை கிழிக்கப் போனான். முடியாமல் போனதால், இளங்கோவின் வயிற்றில் காலைப்போட்டு அதை ஆதாரமாக்கிக் கொண்டு,

சட்டைப்பையை இழுத்து, அதற்குள் இருந்த ரூபாய் நோட்டுகளைச் சுருட்டி காதில் வைத்துக்கொண்டு, கால்களை எடுத்தான். இன்னொருத்தன் உருட்டைக்கம்பால் அவன் தலைக்குக் குறிபார்த்தபோது, ஒருத்தன் உஷார்படுத்தினான்.

"வாணாண்டா! அண்ணன், நோவடிக் கொடுங்கோ, சாவடி வேண்டாம்னு சொன்னது தெரியாதா? அவர் அப்படிச் சொன்னா அதுல ஏதாவது அர்த்தமிருக்கும்."

அனைவரும் இளங்கோவை அந்தப் புதர்ச் செடியிலேயே போட்டுவிட்டு, வீரியமாய் நடந்தார்கள். வேர்வையை துடைத்தபடி, நின்று, நிதானமாகப் போனார்கள். ஒருவன் இளங்கோவை நோக்கி மீண்டும் ஓடிவரப் போனான். சகாக்கள் அவனைப் பிடித்துக் கொண்டார்கள். இப்போது அவர்களுக்கு நேரமில்லை. சேட்டு வீட்டில் இருப்பவர்களுக்கு வழிகாட்ட இப்பவே கொஞ்சம் சாராயத்தைக் குடிக்க வேண்டும்.

இளங்கோ, மகாபாரதத்தில் பீஷ்மர் அம்புப்படுக்கையில் கிடந்தது போல் முட்படுக்கையில் கிடந்தான். வாயில் ஒருபக்கம் வெள்ளை வெள்ளையான நுரை. மறுபக்கம் சிவப்புச்சிவப்பான ரத்தம். நடுவில் வெள்ளையும், சிவப்பும் கூட்டணி கொண்ட கலவை. நெற்றிப் பொட்டில் பெரிய பள்ளம். அந்தப் பள்ளத்தில் ரத்த ஊற்று. ஒரு கை அசைவற்றுக் கிடந்தது. இன்னொரு கை அங்குமிங்குமாய் ஆடியது. கால் பாதங்கள் ரத்தச் சேற்றில் நனைந்து கொண்டிருந்தன. துணியை அடித்துத் துவைத்துப் பிழியாமல் காயப்போட்டது போன்ற தோற்றம். அவனுக்கு ஏற்பட்ட அக்கிரமம் தாங்க முடியாததுபோல் ஒரு ஆமணக்குச் செடி கடற்கரைக் காற்றில் ஆடி அவன் முகத்தை வருடிவிட்டது. அருகேயுள்ள எருக்கலைச் செடிகள் வெள்ளை பல்பு மாதிரி பூக்களைக் காட்டியபடி ஒப்பாரியிட்டன. அவனோ பேச்சற்று, மூச்சற்றுக் கிடந்தான்.

அவன் மயக்கமாய் கிடந்த புதர்ப்பக்கமாய் வந்து போன ஸ்கூட்டர்கள் திரும்பிப் போயின. சிறிது தூரம் கடந்துபோய் வேடிக்கையாய் நின்றன. சில கார்கள் இதெல்லாம் சகஜம் என்பதுபோல் சகஜமாய் ஓடின. சில சைக்கிள்காரர்கள் "இந்தாங்கப்பா" என்று சொல்லிவிட்டு நின்றபோது, அடித்தவர்கள் திரும்பிப் பார்த்து, "போயிக்கினே இருய்யா" என்று மிரட்டியதும், உருளைச்சக்கரங்களோடு ஓடிவிட்டார்கள். அந்தப் பக்கமாய் போன 'கால்நடை' மனிதர்கள், அவன் குடித்துவிட்டுக் கிடப்பதாய் நினைத்து "இந்த மாதிரி ஆட்கள் இப்படித்தான் கிடக்க வேண்டும்" என்று பேசிக்கொண்டே போனார்கள். அருகேயிருந்த பலமாடிக் கட்டிடங்களில் ஆண்களும், பெண்களும் வெளியே பால்கனிகளில் வேடிக்கை பார்த்துக்கொண்டே நின்றார்கள். ஒரு கால் கூட, கீழே இறங்கவில்லை.

இளங்கோ மெள்ளமெள்ளச் செத்துக் கொண்டிருப்பது போல் இருந்தது. காகங்கள், அவன் உடம்புக்கு மேலே ஆகாயத்தில் மொய்த்தன. அவனைக் கொத்தித் தின்பதற்காக சில ஆங்காங்கே உட்கார்ந்தன. பிறகு அவன் ஈன முனங்கலாய் முனங்குவதைப் பார்த்துவிட்டு, அது அடங்குவதற்காகக் காத்திருந்தன.

அந்தப் பக்கமாய் பூக் கூடையில்லாமல் தலைவிரி கோலமாய் வந்த ருக்குமணி, அப்படியே வாய் பிளந்து நின்றாள். அவன் இளங்கோதானா என்பதுபோல் கிட்டே நெருங்கிப் போனாள். பிறகு "அய்யய்யோ... அய்யய்யோ..." என்று அரற்றினாள். அங்குமிங்குமாய் சுற்றி, அவன் மூக்கில் விரல் வைத்துப் பார்த்தாள். கை வேசாய் சுட்டது போலிருந்தது. அருகே பலமாடிக் குடியிருப்புகளில் பால்கனிகள் மேல் திடீர் அவதாரம் எடுத்தவர்களை நோக்கி, கைகளை ஆட்டி 'வாங்கோ... வாங்கோ' என்று சமிக்ஞை செய்தாள். அந்தத் தலைகள் உடனே மறைந்தன. அந்தச் சாலையில் போய்க்கொண்டிருந்த வாகனக்காரர்களைப்

பார்த்து கையெடுத்துக் கும்பிட்டாள். அவர்கள் லாகவமாக ஒதுங்கிக்கொண்டார்கள். சில கார்க்காரர்கள் திட்டிக்கொண்டே போனார்கள். "குடிகாரப் புருஷனுக்கா வக்காலத்து வாங்குறே?" என்று வேறு வக்கணை பேசிக்கொண்டு நிற்காமலே ஓடினார்கள்.

பூக்கார ருக்குமணிக்கு, கண்டும் காணாமல் போன அந்த யந்திர மனிதர்களின் கோழைத்தனம் தனது துணிச்சலுக்கு உரமாகி மனதுள்ளே பூத்திருக்கும் மனித நேயத்திற்கு உருவமாகியது. சேலையை வரிந்து கட்டிக்கொண்டு, அவன் தலையை நிமிர்த்தினாள். பிடரியில் துளைத்த முட்களை செடியோடும், கொடியோடும் ஒடித்துப் போட்டாள். ஆனாலும், பல முட்கள் அவன் உடம்பின் பல இடங்களில் கொள்ளுமாதிரி கறுப்புக்கறுப்பாய் கண் சிமிட்டின. ஒரு சப்பாத்திக்கள்ளி முள், செருப்புப் போடாத தனது கால்களைத் துளைப்பதையும் பொருட்படுத்தாது ருக்குமணி அவனை தூக்கப் போனாள். சப்பாத்தி முள்ளால் கால் துடித்தது. அதை எடுப்பதற்குக் குனித்தாள். அப்படிக் குனிந்தால் அவனை அப்படியே மீண்டும் புதர்ச் செடியில் மல்லாக்க வீழ்த்த வேண்டும். அவள் பல்லைக் கடித்துக்கொண்டு அந்த வலியைப் பொறுத்துக் கொண்டாள். சப்பாத்திமுள்ளின் கோரப் பற்களில் காலை குடியேற்றிக் கொண்டே, இளங்கோவை தன் பக்கமாய் இழுத்து, அருகில் உள்ள மணற்பரப்பில் போட்டாள். தொலைவில் ஒரு கூட்டம் தென்பட்டது. தலையில் கூடைகளோடு வந்துகொண்டிருந்த அந்தக் கூட்டத்திற்காக, அவள் காத்திருந்தாள்.

ருக்குமணி, 'டப்டப்' என்ற சத்தம் கேட்டுத் திரும்பினாள்.

பாவாடை தெரிய, சேலையையே தாவணி மாதிரி கட்டியிருந்த ஒருத்தி, அங்கே வந்து நின்றாள். முழங்கை வரைக்கும் நீண்ட சட்டைக்காரி; மோவாயை அட்டகாசமாய் அங்குமிங்குமாய் ஆட்டியபடியே ருக்குமணிக்குப் புத்திமதி சொன்னாள்:

"இந்தாம்மா... இவன் என்ன செய்தானோ, ஏது செய்தானோ? எந்தப் பசங்களோ இவன செம சாத்தா சாத்திட்டுப் போயிட்டானுங்க. உனிக்கி இன்னாச்சு? நீதான் இத அடிச்சுப்போட்டுட்டு அழுகிறது மாதிரி நடிக்கேன்னு போலீஸ் புடுச்சிட்டுப் பூடும்மா; போலீசுக்குக் குற்றவாளி முக்கியமில்ல; குத்தஞ் செஞ்ச இடத்துல நிக்கறவனுகதான முக்கியம். பேசாம போய்க்கினே இருப்பியா... அய்ய! ஒன்னத்தாம்மே..."

கீழே உட்கார்ந்து, இளங்கோவின் உச்சந்தலையிலிருந்து கொட்டிய செந்நீரைத் துடைத்துக் கொண்டிருந்த ருக்குமணி ஆவேசப்பட்டு எழுந்தாள். இடுப்பின் இருபக்கமும் கைகளை வில்போல் வளைத்துக் கொண்டு, வாய்க்கு வெளியே நாக்கை அம்புபோல் நீட்டிக்கொண்டு தெனாவட்டாய் நின்றவளையும், மாடிக் குடியிருப்புகளில் மறைந்து நின்று வேடிக்கை பார்ப்பவர்களையும் மாறிமாறிப் பார்த்தபடியே கத்தினாள் :

"ஏம்மா, இந்த அநியாயத்த பார்த்துட்டு போயிக்கினே கீறதுக்கு நான் என்ன பங்களாக்காரியா? அடேய்! பங்களா பசங்களா! பண்ணிப் பயல்களா! இந்த உடம்புகள வெச்சிக்கிட்டு ஏண்டா நிக்கிறீங்க? ஒருத்தன் நாய் மாதிரி நடுரோட்ல கெடக்கான்... அவனை என்னான்னு வந்து பார்க்கப்பிடாதாடா? இதேமாதிரி ஒரு நாய் செத்துக்கிடந்தாகூட உடனே கார்ப்பரேஷனுக்கு போன் பண்ணுவீங்களேடா... ஒரு மனுஷனுக்கு ஏண்டா செய்யமாட்டேங்கிறீங்க? அல்பங்களா!"

பூக்கார ருக்குமணி ஆங்காரியாய், ஓங்காரியாய் நடுச்சாலையில் தாண்டவமாடினாள். மாடி வீட்டுக்காரர்களுக்குக் கேட்க வேண்டும் என்பதுபோல் அந்தக் குடியிருப்புப் பகுதிக்கு ஓடியோடிப் போய் திட்டினாள். அவள் கையாட்டியும் நிற்காமல் போன ஒரு அம்பாசிடர் கார்மீது கல் எறிவதற்காகக் கீழே கூடக் குனிந்தாள். பிறகு, மேலே தென்பட்ட குடியிருப்புக்காரர்களைப்

பார்த்து "நீங்க நாசமாப்போக! நீங்க சாகும்போது ஒங்கப் பொணத்துல ஒரு பூக் கூட விழாது" என்றாள். பின்பு செய்வதறியாது திகைத்து நின்றாள்.

அங்கே வந்துநின்ற பெண், ருக்குமணியின் போக்கால் அதிர்ந்து போனாள். லேசாக இளகிய மனதை பலவந்தப்படுத்திக் கொண்டு, "ஏய், ஒன்னத்தான், பேசாம போயிக்கினே இரும்மே" என்றாள்.

ருக்குமணி வெடித்தாள் : "நான் என்ன எருமக்கடாவாடி 'மே...'ங்கறே? இந்தப் பிள்ளாண்டானப்பத்தி ஒனக்குத் தெரியுமாடி? இதுக்கும் ஒரு சேரிப் பொண்ணுக்கும் தகராறு வந்து, அந்தப் பொண்ண, இது போலீசுல ஒப்படைச்சுது. போலீஸ்காரனுங்க என்னடான்னா அந்தப் பொண்ணுதான் என் குழந்தையக் கொன்னதா வழக்கு ஜோடிக்கப் போனாங்க. இது அநியாயம்னு தெரிஞ்ச இந்தப் பிள்ளாண்டான், பெரிய போலீஸ் ஆபீசருக்கிட்ட என்னையும், கட்டிக்கப்போற பொண்ணையும் கூட்டிக்கினுப் போயி, அந்தச் சேரிப் பொண்ணுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்து. இன்னாப் பிரயோசனம்? கட்சீல, அந்த இன்ஸ்பெக்டர் சொன்னாப்புல அந்த ரத்தக்காட்டேரி - நன்றிகெட்ட நரி - அதான் அந்த சரோசாவோ, கிரோசாவோ, இந்தப் பிள்ளாண்டான ஆள் வைச்சி அடிச்சி, இப்படி அக்கிரமம் பண்ணிட்டாள் இந்த மவராசன் கொக்குக் கொத்தின நண்டு மாதிரி துடிக்குது. எப்படி இத அம்போன்னு விட்டுட்டுப் போக முடியும்?"

ருக்குமணி விம்மினாள். அங்கே நின்றவள், கைகளை நெறிப்பதையோ, இளங்கோவின் பக்கம் நெருங்கி அவனை மவுனமாகப் பார்ப்பதையோ, இவன் சரியாகக் கவனிக்கவில்லை. இதற்குள் மீன்காரப் பெண்களும் அங்கே கூடிவிட்டார்கள். கூடைகளை இறக்கி வைத்துவிட்டு, அவற்றை காகங்கள் துழாவுவதையும் பற்றிக் கவலைப்படாமல், இளங்கோவின் பக்கம் போனார்கள். ஒருத்தி ஆலோசனை சொன்னாள் :

“உசிரு இழுத்துக்கிட்டுக் கெடக்குது. உடனே ஆஸ்பத்திரிக்கு தூக்கிக்கிட்டுப் போனா பிழைச்சுக்கும். பாவம் இந்த பையனப் பார்த்தா அடாவடி மாதிரி தெரியல. இவன அடிச்சுப் போட்ட கம்மனாட்டிங்க மட்டும் என் கையில கெடச்சா மீன் முள்ளாலேயே அவங்கோ கண்ணக்குத்தி வெளியில இழுத்தப்பூடுவேனாக்கும். இப்போ காட்டி ஆசுபத்திரியில சேக்காக்காட்டி உசிரு பூடும்.”

எல்லாப் பெண்களும் சேர்ந்து அந்தப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்த ஆட்டோக்களையும், வாடகைக் கார்களையும் கையாட்டி, காலாட்டிப் பார்த்தார்கள். இறுதியில் ஒரு வேன் வந்து நின்றது. முன்னால் டிரைவர் இருக்கை கொண்ட கூண்டும், பின்னால் தார்பாய் மேல்வாக்கில் படர்ந்த ஒரு சின்ன வேன். அதற்குள் காய்கறிகள் மூட்டை மூட்டையாகக் குவிந்து கிடந்தன. ஏழெட்டுப்பேர் அந்த மூட்டைகளுக்கும், கூடைகளுக்கும் இடையே விரவி நின்றார்கள். மணல்மேட்டில் கிடப்பவனைப் பார்த்ததும், “தூக்கித் தாங்கோ, தூக்கித் தாங்கோ” என்றார்கள். கீழே நின்ற பெண்கள் இளங்கோவை ரத்தம் சிந்தத் தூக்கி மேலே கொடுக்க, அங்கே நின்றவர்கள் வாங்கிக் கொண்டார்கள். ஒரு மூட்டையில் அவன் தலையை ஒருக்களித்து சாய்த்து உட்கார்ந்த நிலையில் வைத்தார்கள். அந்த டெம்போ வண்டியில் ருக்குமணியும் ஏறிக்கொண்டாள். அங்கே நின்ற பெண்ணும் “நானும் ஒத்தாசைக்கு வாரேன்க்கா” என்று சொல்லியபடியே ஏறிக்கொண்டாள்.

அந்த வேன், சுருண்டு வளைந்து ஓடியது. அங்கேயிருந்தவர்கள் ஏதோ பெரிய காரியம் செய்துவிட்டோம் என்ற பெருமிதமில்லாமல் அவனைப் பார்த்தார்கள். வெயிலில் காய்ந்து உறைந்து போயிருந்த ரத்தத்துண்டுகளைக் கண்டார்கள். கத்தரிக்காய் காம்பு ஒன்று அவன் பிடரியில் குத்தியதைக் கண்ட ருக்குமணி ஒரு கையை பின்னால் கொண்டுபோய் அவன் தலையை தாங்கிப் பிடித்துக் கொண்டாள்.

வேறு வழியில், போகப் போன வேன் டிரைவரை அந்த இருக்கையின் பிடரியில் தட்டித்தட்டி திரும்ப வைத்துப் பேசினாள்.

"இந்தப் பிள்ளாண்டான் எனக்குத் தம்பி மாதிரி. பெரிய இடத்துப் பிள்ளை. கொஞ்சம் அப்பால இதோட வீடிருக்கு. அங்க போய் அவங்கக்கிட்ட சொல்லணும். அப்புறமா ஆகவேண்டியதப் பார்க்கலாம். அண்ணாத்தே ஒன்னத்தான், வண்டியத் திருப்பு."

பூக்காரப்பெண்ணுக்கு உதவியாக வேனில் ஏறியவள் இப்போது மிரண்டாள்.

நல்ல வேளையோ, கெட்ட வேளையோ கடிகாரம் கட்டிய ஒரு லுங்கிக்காரன் ருக்குமணிக்குப் புத்தி சொன்னான் :

"முதல்ல, இந்தப் பையன ஆசுபத்திரியில சேர்த்துடணும். நாம லேட் பண்ணுற ஒவ்வொரு நிமிஷமும் இவன் உயிரு போய்கிட்டிருக்கிறதா அர்த்தம். ஏதோவொரு ஆசுபத்திரியில சேர்த்துட்டு, அப்புறமா அவங்க வீட்டுல போய் சொல்லிடு. இப்ப வீட்டப் பார்த்துப் போனா அப்புறம் அந்தப் பையன் காட்டப் பார்த்துப் போக வேண்டியிருக்கும்."

வண்டி வேசாய் நின்றது, பிறகு கடிகாரக்காரன் சொன்னால் சரியாக இருக்கும் என்பதுபோல் அது வேறு பக்கமாய் திரும்பி ஓடியது. ருக்குமணியும் யோசித்தாள். 'அந்த வீட்டிற்குப் போனால் அந்தம்மா இருக்காங்களோ மாட்டாங்களோ, அதுக்கு வாச்சிருக்கிற பொண்ணு செத்தாக்கூட அழத்தெரியாத மடச்சாம்பிராணி. முதல்ல, இதக் காப்பாத்தணும். அப்பால மற்றத பாத்துக்கலாம்!'

ருக்குமணி, அந்த வேன்வாசிகள் கேட்கும் முன்பே நடந்தவற்றை கோபாவேசமாகக் கண்களைக் கசக்கிக்கொண்டும், இடையிடையே திணறிக்கொண்டும், இதற்குக் காரணமான குப்பத்துக்காரியை வாய்க்கு வந்தபடி வைதுகொண்டும் விளக்கிக்

கொண்டிருந்தாள். அதோடு, தனது பையன் எப்படிப் பெரிய போலீஸ் அதிகாரி முன்பு சமர்த்தாக நின்றான் என்பதையும் லேசாகச் சொல்லி வைத்தாள். பிறகு, அவர்களுடைய கதையையும் கேட்க வேண்டும் என்பதற்காக ஒரு கேள்வி கேட்டாள் :

"ஆமா, பத்து மணிக்குள்ளே காய்கறி வேனுங்க வந்துடும். நீங்க ஏன் லேட்டு?"

ஒரு பழக்காரம்மா தனது முகத்தை அழுகிய பழம் போல் ஆக்கிக்கொண்டு பதில் சொல்லப் போனபோது, கடிகாரம் கட்டிய லுங்கிக்காரன் முந்திக்கொண்டான் :

"அத ஏன் கேக்குற? அநியாயம் அக்கிரமம்... என்னோட விவரம் தெரிஞ்ச நாளிலிருந்து இப்படி கூத்து நடக்கிறது தெரிஞ்ச கத தான். ஆனா, இப்போ நடக்குறதோ தாங்கமுடியாத கூத்து. இன்னிக்கிக் கோட்டையில சர்வகட்சி தலைவர்களோட கூட்டமாம். தலைவருங்க வாராங்கன்னு போலீஸ்காரங்க எங்கள தலையெடுக்கவிடாமப் பண்ணுறாங்க. பாரிமுனையில ஒன்பது மணிக்குப் புறப்பட்ட இந்த வேனை, பாலத்துக்குப் பக்கத்துல ஒருமணி நேரமா காக்கப் போட்டாங்க. அப்புறம் ஒருத்தரு கோட்ட ஸ்டேஷனுக்குப் போற பாலம் வழியா போகச் சொன்னாரு. பல் ஆஸ்பத்திரிக்கிட்ட வந்தப்போ ஒரு போலீஸ் ரைட்டுல போகச் சொன்னாருன்னு வேனை விட்டோம். அந்தப் பக்கம் நின்ன இன்னொருத்தர் லெப்டுல போகச் சொன்னாருன்னு வேனை ஒடிச்சோம். லெப்டு போலீசும் திட்டுது, ரைட்டு போலீசும் திட்டுது. நடுவில் வந்தா இன்னொரு போலீசும் டிரைவரை அடிக்க வருது... பதில் சொல்றதை, எதிர்த்துப் பேசுறதாய் நினைத்து. மூணுமணி நேரமா காஞ்ச கருவாடாப் பூட்டோம். அய்யோ, ஏழபாழன்னா இந்தப் போலீஸ்காரங்க குதிக்கிற குதி..."

"எய்தவன் இருக்கப்போ, அம்ப நோகறதுல என்ன பிரயோசனம்?"

"தாய் எட்டடி பாஞ்சால் குட்டி பதினாறு அடி பாயுற கத. தலைவர்களுக்குப் பாதுகாப்புத் தேவதான்... இல்லங்கல. ஆனாலும் சினிமாக்காரன், ஒருத்தன வீரமா காட்டுறதுக்கு ஒன்பது பேரை பேடியாக்குறது மாதிரி, அவங்களோட பாதுகாப்புக்கு தல காஞ்சவங்கதான் கிடைச்சாங்களா? டெய்லி இப்பிடி காக்க வெச்சா, நம்ம பொழப்பு என்னாவறது? இப்பவே மணி ஒன்னு, காய்கறி வாடிப்பேச்சி; பழம் வேற அழுகிடும். அடக்கடவுளே!"

"பேசாம ஒவ்வொரு தலைவருங்க வீட்டுமுன்னாலயும் அழுகிப்போன பழங்களக் கொட்டணும். தலைவருக்காக மக்களா, மக்களுக்காக தலைவரான்னு நேருக்கநேரா கேள்வி கேக்கணும். ஆனா, போலீசு எங்க விடுவான்? இப்படிப் பொலம்பறதோட சரி."

"ஆயா, பஸ்சுல வருவே, இப்ப ஏன் வேனுல வரே?"

"லக்கேஜு மூணு ரூபா... டிக்கெட்டு இரண்டு ரூவா. நான் என்ன கூடையில சாராயக்கேன வச்சி, அந்த வாசனைய மறைக்கிறதுக்கு கருவேப்பலையப் போட்டு மூடியா கொண்டு வாரேன், கேக்கிறத கொடுக்கறதுக்கு? பாவம் இந்த வேன் புள்ளாண்டான் பரிதாபப்பட்டு எல்லாத்துக்கும் மூணுரூவா போதும்னு சொல்லிட்டான்"

வேனில் இருந்த அந்த ஏழைபாழைகள் இப்படி பல்வேறுவிதமாகப் பேசிக்கொண்டே போனார்கள். அவ்வப்போது லேசாய் மூச்சுவிட்டுக் கொண்டிருந்த இளங்கோவையும் பார்த்துக் கொண்டார்கள். ருக்குமணி அவ்வப்போது இளங்கோ உடம்பில் பீறிட்ட ரத்தங்களை முந்தானையால் துடைத்துக் கொண்டிருந்தாள். கருவேப்பிலையில் சில ரத்தத் துளிகள் பட்டன. ஆயா, அந்த இலைக்காம்பை ஒடித்து வெளியே போட்டாள்.

அந்த வேன், ஒரு மருத்துவமனை முன் நின்றது. அந்த மருத்துவமனைக்குள் என்ன நடக்கிறது என்பது தெரியாத வண்ணம் கறுப்புக் கண்ணாடிகள் சுவர்களாக இருந்தன.

ருக்குமணி, அந்த வேன்வாசிகளை கையெடுத்துக் கும்பிட்டபடியே "பாம்புக்கு பாம்பின்கால் தெரியும் என்பது மாதிரி, ஏழைக்கு ஏழை ஒத்தாசை செய்தீங்க" என்றாள். உடனே கடிகார லுங்கி "ஒன் உதாரணம் சரியில்லே!" என்றான். "நாம என்ன பாம்புங்களா? அரசாங்கப் பூனை பிடிக்கிற எலிங்க..." என்றான்.

அந்த வேனிலிருந்து ருக்குமணியும், அவளுக்குத் தோழியாக வந்தவளும் கடிகார லுங்கியும் இளங்கோவை கீழே இறக்கப் போனபோது, அந்த மருத்துவமனையின் முகப்பில் நின்ற காரில் ஏறப்போன ஒரு ஸ்டெதாஸ்கோப் மனிதர், அங்கே வந்தார். அவர்கள் உள்ளே வந்துவிடக் கூடாது என்பதற்காக அவரே வெளியே வந்தார். பணக்காரர்களுக்கு காலில் ஒரு முள் குத்தினாலும் அவர்களைப் படுக்க வைத்து ரத்தப் பரிசோதனை, சிறுநீர் சோதனை, எச்சில் சோதனை, எக்ஸ்ரே, தேவைப்பட்டால் ஸ்கேனிங் என்று முள்ளை எடுப்பதற்குப் பதிலாக அந்த முள்ளை காலிலிருந்த கண்ணுக்குள் தள்ளிவிட்டு விடும் அந்த டாக்டருக்கு அந்த அன்னக்காவடிகளின் கையிலிருந்த கேஸ் தேறாதது போல் தோன்றியது. கேஸ் தேறினாலும் 'காஷ்' தேறாது. அவர் கத்தினார்:

"என்னய்யா வேணும் உங்களுக்கு?"

"இவருக்குக் காயம், ஆக்சிடென்ட், இல்லயில்ல... அடிபட்டுட்டு... தப்பு தப்பு. அடிச்சிட்டாங்க."

"போலீசுக்குக் கொண்டுபோக வேண்டிய கேச எதக்குய்யா ஆசுபத்திரிக்கி கொண்டு வறீங்க? இவர இங்க சேர்த்துட்டு, நானும் கோர்ட்டு கோர்ட்டா அலையணுமா? இவர நீங்களே அடித்துக் கொண்டு வந்திருக்கு மாட்டீங்க என்கிறது என்ன நிச்சயம்? போலீசுக்குப் போய் அப்புறமா கவர்மென்ட் ஆஸ்பத்திரிக்குப் போங்கோ."

"அது எங்களுக்குத் தெரியும்."

"தெரிஞ்ச பிறகும் இங்க எதுக்கு வந்தீங்க?"

"வேன்ல வந்தா இப்படிப் பேசிடுவீங்க. ஏர்-கண்டிஷன் கார்ல வந்தா இப்படிப் பேசுவீங்களா?"

"யோவ், மரியாதையா போறீங்களா, இல்ல நானே போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் செய்யவா?"

"அந்த வியாபார டாக்டர் அப்படிச் செய்தாலும் செய்வார் என்று பயந்துபோன வேன்காரர்கள், இளங்கோவைத் தூக்கி பழையபடியும் கத்தரிக்காய் மூலையில் கிடத்தினார்கள். ஆனாலும், அந்தக் கடிகார லுங்கிக்காரனுக்கு மனம் கேட்கவில்லை. கோபம் அடங்கவில்லை. வேன் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தபோதே அவன் கத்தினான் :

"யோவ் டாக்டரு! நீயெல்லாம் ஒரு டாக்டரா? பேசாம கழுத்துல கிடக்கிற ஸ்டெதாஸ்கோப்புலயே தூக்குப் போட்டுச் சாகவேண்டிய ஆளு நீ."

அந்த வேன் துள்ளிக்குதித்து ஓடியது. பெரும்பாலான சாலைகளில் ரக்கைக் கட்டாமலேயே பறந்தது. இருபத்திநான்கு மணிநேர கிளினிக்குகளும், அரிமா சங்கங்கள் நடத்தும் சமூகசேவை மருத்துவமனைகளும் வழியடைத்தன. பெரிய பெரிய மருத்துவ மனைகளை நெருங்குவதற்கு இந்த வேனுக்கு பயம். "இதற்கு மேலும் வண்டியை ஓட்ட டீசல் இல்லை" என்று டிரைவர் உள்ளேயிருந்து கத்தினார். இந்தச் சமயத்தில் என்ன செய்வது என்று தெரியாமல் எல்லோரும் ருக்குமணியைப் பார்த்தபோது அவளுக்குத் தோழியாகத் தன்னைத்தானே நியமித்துக் கொண்டவள் "அந்தண்ட நிறுத்துங்க" என்றாள். அவள் சொன்ன இடத்தில் ஒரு பாடாவதி மருத்துவமனை.

ருக்குமணியும் அந்தப் பெண்ணும் காய்கறிக்காரர்கள் தூக்கிக் கொடுத்த இளங்கோவை தாங்கிப் பிடித்துக் கொண்டார்கள். பிறகு அவனை தங்களது தோள்களில் போட்டபடியே அந்த மருத்துவமனையின் ஒரு கல் தூணில் சாய்த்தார்கள். ருக்குமணி அவளைப் பார்த்து "இங்கேயும்

சேர்க்காட்டா'' என்றாள். உடனே அந்தப் பெண் ''சேர்க்க வைக்கிறேன் பார்'' என்றாள். இதற்குள் ஒய்யாரமான மூன்று நாற்காலிகளில் ஒரு தலை மேலே தென்பட்டது. வரவேற்புப் பெண் கத்தினாள் :

"என்ன வேணும்? போங்கப் போங்க! இதென்ன சத்திரமா, சாவடியா?"

அந்தப் பெண் போட்ட சத்தத்தில் அவளுக்கு அருகேயுள்ள நாற்காலியில் உட்கார்ந்து ஆர்ச் மாதிரி இருந்த மேசையில் தலையைப் போட்டுக்கொண்டிருந்த ஒரு முப்பது வயது ஆசாமி நிமிர்ந்தான். அவனுக்கு சிகிச்சையளிக்கவே ஒரு முழு மருத்துவமனை தேவை. அந்தப் பெண்ணை அடையாளம் கண்டுகொண்டு அவள் பக்கமாக வந்தான் :

"அடேடே, நீயா? என்னம்மா விஷயம்? யார் இது?"

"ஸ்பெஷல் இருக்குண்ணே. ஒனக்குன்னு நாலு கிளாச எடுத்து வச்சிருக்கேன்."

"சித்த நேரத்துல வந்துடறேன். டாக்டர் ரவுண்டு முடியட்டும்."

"அப்புறம் அண்ணே... இது பெரிய இடத்துப் பிள்ளாண்டான். எப்படியோ ஏடாகூடமா நடந்துட்டு. நீதாண்ணே இங்க சேக்கணும்."

"அதெப்படி, நான் என்ன டாக்டரா?"

"இந்தாண்ணே ஐம்பது ரூவா, யாருக்காவது கொடுக்கணும்னா கொடுத்து..."

"சரி, ஓசப்படாம நில்லு. ரூம் ரெடி பண்ணிட்டு, கொடுக்க வேண்டியவங்களுக்குக் கொடுத்துட்டு வாறேன்."

அந்த நோஞ்சான் பேர்வழி தூணில் சாய்த்து வைக்கப்பட்ட நோயாளியை ஒருதடவை திரும்பிப் பார்த்துவிட்டு மாடிப்படிகளில் ஏறினான். அந்த ஐம்பது ரூபாயும் அவனுக்குத்தான் என்பது

அவளுக்கும் தெரியும். ஆனாலும் அவன் சுயமரியாதையை குந்தகப்படுத்தாமல் பேசியதில் அவளே பெருமைப்பட்டாள். 'அடடே... எனிக்கிக்கூட புத்தியிருக்கே...

இதற்குள் ஐந்து நிமிடத்தில் அந்த ஆசாமி கீழே வந்துவிட்டான். அவன் பின்னால், இரண்டு பையன்கள் ஸ்டெச்சரோடு வந்தார்கள். அவர்கள் இளங்கோவை அந்த ஸ்டெச்சரில் தூக்கிப் போட்டுக் கொண்டிருந்த போது அந்த ஆசாமி சரோசாவிடம் சாவகாசமாகப் பேசினான் :

"இந்த நர்சிங்ஹோமில் கிரவுண்டுல ரூம் கிடையாது. மாடியிலதான் பேஷன்ட் பார்க்கிறாங்க. யாராவது ஹார்ட் பேஷன்ட்டா இருந்தா அவங்களையும் ஸ்டெச்சர்ல தூக்கிக்கிட்டு மாடிப்படி வழியா நடந்து போகணும். அப்பவே அந்த ஆசாமி டொக்குனு போயிடுவான். லிப்ட் இல்லாம நர்சிங்ஹோம் மாடி இருக்கக்கூடாதுங்கிறது சட்டம். ஆனால் இந்தக் காலத்துல சட்டமா பேசுது? காசில்லா பேசுது? அப்புறம் சரோசா, அந்த ஸ்பெஷல் இருக்குமா இல்ல வேற யாராவது...?"

"ஒனக்குன்னு வெச்சத ஒனக்குத் தாரேண்ணே. சும்மா 'கும்'முன்னு இருக்கும். அப்புறண்ணே, இந்தப் பிள்ளாண்டான நல்லாக் கவனிக்கணுமுண்ணே."

பூக்கார ருக்குமணி அவளை இப்போது ஸ்பெஷலாகப் பார்த்தாள். சந்தேகம் இல்லை... அதே தத்தேறி முண்டதான். போலீஸ் ஸ்டேஷனுக்கு வெளியில இதோ ஸ்டெச்சருல கிடக்குற பிள்ளாண்டானும், அதுக்கு சம்சாரமாய் வாரவளும், நானும், இளநீர் குடிக்கப்போ இவள சரியாப் பார்க்கல; அப்போ பைஜாமா, இப்போ சேலை. இவள விடப்பிடாது.

ருக்குமணி ஆகாயம் அதிர்வதுபோல் கத்தினாள் :

"ஏண்டி, எச்சிக்கல நாயே! கொழுந்தையையும் கிள்ளி, தொட்டிலயும் ஆட்டறீயா? அரகொற உயிரோட துடிச்சிக்கிட்டு இருக்கிற இந்தப் பிள்ளாண்டான விஷ ஊசி போடணும்னு இந்த எச்சிக்கல ஆஸ்பத்திரியில சேர்க்கப் பார்க்கிறீயா? மவளே! ஒன்ன விடமாட்டேன்டீ. நீ ஜெயிலுல கம்பி எண்ணாம இருக்க முடியாதுடி."

ருக்குமணி ஆவேசப்பட்டாள். மாடிப்படிகளில் ஸ்டெச்சரில் சவாரி செய்து கொண்டிருந்த இளங்கோவின் பக்கம் 'குய்யோ முய்யோ' என்று கத்திக்கொண்டே ஓடினாள். அந்த ஸ்டெச்சரைப் பிடித்து இழுத்தாள்.

# 16

பூக்கார ருக்குமணி போட்ட கூச்சலில் வரவேற்புக்காரி வசந்தா திடுக்கிட்டு எழுந்தாள். அதற்குள் ஒரு டெலிபோன், அதுவும் காதலனிடமிருந்து. அந்த டெலிபோன் குமிழை ஆசைப்பட்டவனின் முகமாக அனுமானித்துக்கொண்டு அதைக் கன்னத்தில் போட்டுப் புரட்டி சிரிப்பும் சிணுங்கலுமாய் "நீங்க ஒண்ணும் பேச வேண்டாம்" என்று பேசியபடியே மீண்டும் இருக்கையில் உட்கார்ந்தாள். காதல் பேச்சுக்கு முன்னால் எந்தக் கூச்சல் எடுபடும்?

சரோசாவும் மாடிப்படிகளில் தாவிக்குதித்துப் போனாள். கோபமாகப் பார்த்த ருக்குமணியை அவள் கூனிக்குறுகிப் பார்த்தாள். 'ஏன் இப்படிக் கத்துறேன்னு' திருப்பிக் கேட்க நினைத்தாள். ஆனால் வாய்க்குள் நாக்குப் புரளவில்லை. என்றாலும், ருக்குமணியின் தோளைப் பிடித்துத் தன் பக்கமாக இழுத்தாள். இதற்குள் சத்தம் கேட்டு

கீழே வந்த நோஞ்சானிடம் "இது எங்க குடும்ப விவகாரம், முதல்ல இந்தப் பிள்ளாண்டான கவனிண்ணே" என்றாள். சிறிது தயங்கிய அந்த ஆசாமி வாசல்படியில் ரகளை ஏற்பட்டால் வெளியே தெரியும் சிவப்புத் தொப்பிகள் உள்ளே வரலாம் என்று பயந்து, தானும் அந்த ஸ்டெச்சரில் கைகொடுத்து இளங்கோவை மேலே தூக்கிக்கொண்டு போனான். அவனைக் கொல்வதற்கு அப்படி ஒரு சதி நாடகம் நடப்பதாக நினைத்த ருக்குமணி கூப்பாடு போடப்போனாள். இதற்குள் பழமும் தின்று கொட்டையும் போட்ட சரோசா, அவள் வாயைப் பொத்திக் கொண்டு மாடிப்படிகளில் நகர்த்தி அந்தப் படி தட்டிய சமதளத்தில் அவளை நிறுத்தினாள். அவள் பிடியிலிருந்து விடுபட முடியாமல் திணறிய ருக்குமணியை தோளை அழுத்தி, கீழே உட்கார வைத்துவிட்டு இவளும் உட்கார்ந்தாள். அவளைப் பார்த்து கையெடுத்துக் கும்பிட்டுக்கொண்டும், அவள் கத்தப்போனால் வாயை மீண்டும் பொத்துவதற்காக ஒரு கையை அகப்பை மாதிரி வைத்துக்கொண்டும் அவளிடம் மன்றாடினாள் :

"இந்தா பாரும்மா, நானுதான் அந்தப் பிள்ளாண்டான ஆள் வைச்சி அடிச்சேன். அவன் துடிக்கிற துடிப்பப் பார்த்து ரசிக்கணும்னுதான் அந்தப் பக்கமா வந்தேன். நான் நினைச்சிருந்தா ஒரு விசிலடிச்சி என் தோஸ்துகள வரவழைச்சி ஒன்னையும் அவன மாதிரியே செய்திருக்கலாம். செய்யக்கூடியவதான். அப்படியே இல்லாட்டியும் வேன்ல போகறப்போ, கோவில் பக்கமா ஒரு சத்தம் போட்டிருந்தா, என் தோஸ்துங்க வந்து வேனை மறிச்சிருப்பாங்க. இப்பக்கூட எங்கண்ணனுக்கு ஒரு போன் போட்டா, நீ தான் இவன கொன்னேன்னு போலீசுலே ஒன்னையே என்னால உள்ள தள்ளமுடியும். ஆனால், நீ எப்போ இந்தக் குழந்தப் பையன் 'இந்தப் பாவிக்காக பெரிய அதிகாரிய பார்த்தான்னு சொன்னியோ அப்பவே, நான் மனசு மாறிட்டேன். இந்த பிள்ளாண்டான் கேவலம் ஒரு குப்பத்துக்காரிக்கு - அதுலயும் தன்னையே அடிச்சிப்போட்ட ஒர்த்திக்கி - போலீசுல வாதாடினார்னா அது மனுஷன் செய்யற

காரியமில்ல; கடவுளாலதான் அப்படிச் செய்யமுடியும். இது சத்தியமான வார்த்த. முதல்ல அந்தப் பிள்ளாண்டான காப்பாத்தணும். அவரு சரியாகட்டும். அப்புறம் நீ வேணும்னாலும் என்னை செய்துக்கோ. நான் எங்கயும் போகலை. இங்கதான் இருக்கப் போறேன்."

ருக்குமணி, அவனையே உற்றுப் பார்த்தாள். அவன் சொல்வதில் ஏதோ உண்மை ஒலிப்பதுபோல் இருந்தது. இதற்குள் இளங்கோவை ஒரு அறைக்குள் கொண்டுபோவதை, இரு பெண்களும் பார்த்தார்கள். உடனே அங்கே ஓடிப் போனார்கள்.

முதல் மாடியில், முனையில் உள்ள அறை. ஒரு கட்டிலில், ஒரு ஸ்பிரிங் சாய்வுப் பலகையில் அவனை சாய்த்துப் போட்டார்கள். மெத்தை போடப்பட்ட இரும்பு ஸ்பிரிங் கட்டில். பக்கத்திலேயே இருநாற்காலிகள். ஒரு வாஷ்பேஸின். வசதியாகத்தான் இருந்தது.

இளங்கோ மல்லாந்து கிடந்தான். மூக்கில் ரத்தம் கசிந்து அதன் துவாரங்களை அடைத்தது. கண் விழிக்கப் பார்ப்பதுபோல் இமைகள் துடித்தன. சரோசா அவனையே பார்த்தாள். அதைத் தாங்க முடியாததுபோல் சுவரில் முகம் போட்டாள். அந்த மஞ்சள் சுவரில், கண்ணீர் வெண்கோலம் போட்டுக் கீழிறங்கியது. இந்தச் சமயத்தில் நடுத்தர வயது டாக்டர் ஒருவர், கூட வந்த நோஞ்சானைத் திட்டிக்கொண்டே உள்ளே வந்தார் :

"கண்டவனை எல்லாம் உள்ளே கொண்டு வாறியே, உனக்கு பொறுப்பு இருக்கா? ஏம்மா, கவர்மெண்ட் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகாம என் பிராணனை எதுக்கு வாங்கறே? போலீஸ் கேஸ்... போலீஸுக்கு முதல்ல தகவல் கொடுக்கணும்."

"முதல்ல இவர கவனியுங்க டாக்டர். நான் கீழே போய் டெலிபோன்ல போலீஸுக்கு சேதி செல்லிட்டு வாறேன்."

"நீ இருக்கியே... நீ எப்போ இங்க சேந்தியோ, அப்பவே, இந்த ஆஸ்பத்திரி உருப்படாமப் போயிட்டு. நர்ஸிங் ஹோம் லாட்ஜா மாறிட்டு. இதுக்கு முன்னாடி தாலுகா ஆபீஸ்ல பியூனா இருந்தியோ?"

டாக்டர், இப்போது சிரித்து விட்டார். கையில் வைத்திருந்த சிரிஞ்சையும் ஊசியையும் அலாவுதீன் மந்திரம் மாதிரி ஏதோ செய்துவிட்டு, இளங்கோவின் கையில் ஊசி போட்டார். நரம்பு ஊசியோ, சதை ஊசியோ? சுரணையற்றுக் கிடந்தவன், இப்போது வலி தாங்க முடியாமல் அங்குமிங்குமாய் தலையை ஆட்டினான். டாக்டர், வார்டுப் பையன் கொடுத்த பெரிய வட்டக் கண்ணாடி ஒன்றை இளங்கோவின் தலைக்குமேல் படரவிட்டு உற்றுப் பார்த்தார். "அடடே, எவ்வளவு முள்ளுங்க" என்று அவரே சொல்லிக் கொண்டார். பிறகு, எவர்சில்வராய் மினுமினுத்த ஒரு இடுக்கியை தலைக்குள் விட்டு ஒவ்வொரு முள்ளாக எடுத்துப் போட்டார். அந்தச் சமயம், வார்டுப் பையன் (அவன்தான் அங்கே நர்ஸ்) டிஞ்சரையோ அல்லது வேறு எதையோ நனைத்த பஞ்சை வைத்து இளங்கோவின் காயங்களைத் துடைத்து விட்டான். நெற்றிப் பொட்டை "எம்மாடி" என்று சொன்னபடியே பார்த்துவிட்டு, பஞ்சை அதனருகே கொண்டு போனான். இளங்கோ வலி பொறுக்க முடியாமல் கைகால்களை அங்குமிங்குமாய் ஆட்டினான். டாக்டர் அங்கே நின்ற இரண்டு பெண்களையும் பார்த்து, "பணத்தைக் கட்டிட்டீங்களா? அப்படியாவது எனக்கு சம்பளம் வருதான்னு பார்க்கலாம். சரி வெளியில நில்லுங்க" என்று சொல்லி அவர்களை விடாக்கண்டராய் வெளியேற்றிவிட்டு, கதவைத் தாழிட்டார்.

அந்த அறைக்கு வெளியே வந்த சரோசாவிடமும் ருக்குமணியிடமும் 'ஸ்பெஷல்' மனிதர் கண்டிப்போடு பேசினான் :

"ஆபத்துக்குத் தோஷமில்லேன்னு சேர்த்துட்டேன். நான் இருந்ததால டிபாசிட் பணம் கட்டாமலே சேர்த்தாச்சு. ஆனால் அப்படி டிஸ்சார்ஜ் செய்ய முடியாது. குறைஞ்சது ஆயிரம் ரூபா கறந்துடுவாங்க. என்ன சொல்றே சரோசா?"

"அந்தக் கவலையே உனக்கு வேண்டாமண்ணே. இன்னும் ஒரு அவர்ல தந்துடறேன். நீ ஸ்பெஷலுக்கு வரப்போ தலையை அடகு வச்சாவது தாரேன். அண்ணன் என்ன உதவாமலா போயிடுவாரு? என்னவோ என் போதாத காலம்."

சரோசா மேற்கொண்டு பேச முடியாமல் அரைகுறை வார்த்தைகளோடு விக்கி நின்றாள். உள்ளே பயங்கரமான சத்தம். ருக்குமணிக்கு, டாக்டர் விஷ ஊசி போடுகிறாரோ என்று இன்னும்கூட சந்தேகம். சரோசாவை முறைத்தாள். ஸ்பெஷல் பேர்வழி விளக்கம் கொடுத்தார் :

"நெத்திக் காயத்துக்கு டாக்டர் தையல் போடுறார்னு நெனைக்கேன். எப்படியோ ஆசாமி தப்பிச்சிட்டான். ஏன் சரோசா, இவனப் பார்த்தா பட்டைக் கேஸாத் தெரியல... நல்ல பையனாய் தோணுது. அப்படி இருக்கையில் உன் வழில எப்படி வந்தான்."

"அது பெரிய கதை அண்ணாத்தே. சொன்னாலும் தீராது, சொல்லியும் மாளாது. அந்தச் சக்களத்தி, பொறம்போக்கு முண்டை, என்னை எந்த நேரத்துல பெத்துப்பூட்டாளோ, அப்பவே..."

"சரி சரி, நான் கீழே போய், வசந்தாவை சமாளிக்கேன். காசுன்னு வந்துட்டா காதலனையும் மறந்துடறவள். சீக்கிரமா வா; ஸ்பெஷல் போட்டாப்போலவும் ஆச்சு... ஆஸ்பத்திரி காச வாங்கினாப்லயும் ஆச்சு."

இப்போதே சரக்கை மோப்பம் பிடித்தபடி நோஞ்சான் ஆசாமி போனதும், தனித்து விடப்பட்ட ருக்குமணியும் சரோசாவும் சிறிது நேரம் ஒருவரை ஒருவர் பார்க்கவில்லை. பிறகு பூக்காரியின்

ருத்ரப்பார்வையை சாராயக்காரி தவிர்த்தாள். இறுதியில் ருக்குமணி மறக்கக்கூடாததை மறந்துவிட்டு இப்போ அது நினைவுக்கு வந்ததுபோல் திடுக்கிட்டுப் பேசினாள் :

"நல்லவேளை, இப்போதாவது ஞாபகம் வந்துட்டு... இளங்கோவோட வீட்ல போயி சேதி சொல்லி, அவங்களைக் கூட்டிட்டு வரணும். இங்கயே இரு; அவங்களுக்கு நீ ஜவாப் சொல்லியாகணும். அப்புறம் உன்பாடு, அவங்கபாடு. அந்த கஸ்மாலம் சாரு ரமணன், நீ சத்தா சமுத்திரத்துக்குள்ள போனாலும் போலீஸ் வலையால வீசிப் பிடிச்சுடுவான். அவங்க வாரது வரைக்கும் இங்கயே நில்லு. சொல்றது காதுல விழுதா?"

சரோசா, காதில் விழுந்ததை கண்ணீராகக் காட்டினாள். பிறகு அதை லேசாகச் சுண்டிவிட்டு கைகளைக் கட்டிக் கொண்டாள். நடக்கது நடக்கட்டும் என்பது மாதிரி சிறிது நின்றுவிட்டு, பிறகு ருக்குமணியைப் பார்த்துப் பதிலளித்தாள் :

"நீ நெனைக்கிறது மாதிரி நடக்காதுன்னாலும், நான் போகப் போறதில்லே. அனுமார், லவகுசாகிட்ட கட்டுப்பட்டது மாதிரி நானும் அண்ணன்கிட்டப் போகாமல், இங்கயே கட்டுப்பட்டு நிக்கேன். இளங்கோ மன்னிச்சிடுவார்னு ஒரு நம்பிக்கை. எதுக்கும் அவரு கண்விழிச்ச பிறகு நீ போ; இல்லாட்டி நானே கொன்னுட்டேன்னு நீ சொன்னாலும் சொல்வே."

"ஆனாலும் உனக்கு இவ்வளவு ரப்பு ஆகாதுடி. பாவி! உன்னைக் காட்டியும் கொடுக்க முடியல. காட்டாமலும் இருக்க முடியல. உனக்கு நான் உடந்தைன்னு கடைசியில நானுகூட ஜெயிலுக்குப் போகணும். என்னவோ, அந்தப் புள்ளாண்டான் நல்ல காலம், நான் அந்தப் பக்கம் வந்தேன். என்னோட வீட்டுக்காரனத் தேடி அங்கே வந்தேனோ, இதுவப் பார்த்தேனோ... பாவி மனுசன், பஜார்ல ஒரு பங்களாம்மா விசயதசமிக்குன்னு நாலு தேங்காயும் ஒரு சீப்பு வாயப் பயமும் மூணு ஆப்பிளும்

வாங்கி எங்கிட்டக் கொடுத்தாங்க. 'அவசரமா கொஞ்சம் வெளியில போறேன். உன் வீட்ல வச்சுக்க, ஒரு அவருக்குப் பிறகு பங்களாவுல வந்து கொடுத்துடு'ன்னு அந்தம்மா சொல்லிச்சு. வீட்டுக்குக் கொண்டு வந்தால், நானு மீனு கழுவிக்கிட்டு இருக்கப்போ அந்த சோமாறி அவ்வளத்தையும் தூக்கிக்கினு சாராயத்துக்கு விலை கொடுக்கப் பூட்டான். அந்தம்மா என்னைப் பத்தி என்ன நினைப்பாங்க? அதுங்கிட்டருந்து தேங்காய மீட்கறதுக்கு வந்தா நீ இந்தப் புள்ளாண்டானை தேங்காயை உடைச்சது மாதிரி உடைச்சுட்டே."

"அப்போ நீ கோவிந்தோட சம்சாரமா?"

"அது பேரு கோவிந்து இல்ல; என்ன கோவிந்தா பாட வைக்கிற கஸ்மாலம்."

அப்படியும், இப்படியுமாய் ஒருமணி நேரம் ஆகிவிட்டது. இரண்டு பெண்களும் இளங்கோவின் அறைக் கதவை அவ்வப்போது பார்த்துக் கொண்டார்கள். திறந்தபாடில்லை. ருக்குமணி அவ்வப்போது 'வீட்ல போய் சொல்லப் போறேன்' என்று முருங்கை மரத்தில் ஏறியபோது, சரோசா, பெண் விக்ரமாதித்யையாக மாறினாள். இதற்குள் கதவு திறக்கப்பட்டது. வெளியே வந்த டாக்டரை இரண்டு பெண்களும், அவசர அவசரமாய் முண்டியடித்த அவரை உள்ளே தள்ளிக்கொண்டே அந்த அறைக்குள் போனார்கள். டாக்டர் "சீ... சீ..." என்று சொன்னபடியே கைக்குட்டையால் ஸ்டெத்தாஸ்கோப்பை துடைத்து விட்டார். பிறகு தான் குணப்படுத்திய பேஷண்டை பெருமிதம் தாங்க முடியாமல் பார்த்துக்கொண்டே நின்றார்.

கட்டிலில் கிடந்த இளங்கோவின் தலையில் சில இடங்களில் மொட்டை போடப்பட்டு, பிளாஸ்டர்கள் ஒட்டப்பட்டிருந்தன. நெற்றிமேட்டுத் தோல் இழுத்துக் கட்டப்பட்டு வெள்ளைக் கயிறு மாதிரி ஒன்று தெரிந்தது. வாய்க்குள்ளும் நான்கைந்து

பிளாஸ்டர்கள். கால்களில் சின்னச் சின்னக் கட்டுக்கள். எல்லாவற்றிற்கும் மேலாக வலது கை கழுத்தோடு சேர்த்து வெள்ளைத் தூளியில் வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்துவிட்டு ருக்குமணி "ஐயையோ" என்றபோது, டாக்டர் "பயப்படாதே. கை முறியலே. பிசகி இருக்கு; சரியாயிடும். இது என்ன உன் வீட்டுக்காரனா?" என்றார்.

"எனிக்கு தம்பி சாரே..."

"அப்போ இந்த அம்மாவோட வீட்டுக்கார மச்சானா?"

அந்த இரண்டு பெண்களும் குறுஞ்சிரிப்பாய் சிரித்தபோது அவர்கள் நன்றியில்லாமல் தன்னைக் கிண்டல் செய்வதாய் அனுமானித்த டாக்டர், இன்னும் நன்றி தெரிவிக்காத அந்தப் பெண்களைப் பார்த்து, "பேஷண்டை டிஸ்டர்ப் செய்யக்கூடாது. கெட் அவுட்" என்றார். பிறகு அவரே வெளியேறி விட்டார்.

இளங்கோ, கண்விழித்தான். எல்லோரும், எல்லாமும் மங்கல் மங்கலாய்த் தெரிந்தன. அவனைப் போல் அடிபட்டுக் கிடப்பது போல் தோற்றம் காட்டின. கண்களைக் கசக்கினான். விவகாரம் மெல்ல மெல்ல விரிந்தது. அடிபட்ட வரலாறும் தெரிந்தது. ஆனால் இப்போது இருக்கும் இடம்தான் புரியவில்லை. 'அம்மா' என்று ஒரு தடவையும், 'பாமா' என்று இன்னொரு தடவையும் மனதுக்குள் கூவியபடியே, தலையைத் தூக்கினான். ருக்குமணிதான் கண்ணில் பட்டாள். "எப்படியோ, மாரியாத்தா உன் கண்ணத் தெறந்துட்டா; பிழைச்சுக்கிட்டே" என்றும், "நானுதான் உன்னை இங்கு கொண்டு வந்தேன் சாரே... தோ, இந்த கஸ்மாலம் யாருன்னு சொல்லுப் பார்க்கலாம்?" என்று சொன்னபோது இளங்கோவுக்குப் புரிந்தது.

இளங்கோ, ருக்குமணியைப் பார்த்து சோகமாகப் புன்முறுவல் செய்தான். சரோசாவைப் பார்த்ததும் புன்முறுவலை அடக்கிக் கொண்டான். சரோசா அவன் அருகே போய், கைகளால்

கண்களை மூடிக் கொண்டாள். அவள் உடம்பு முகத்தோடு சேர்ந்து குலுங்கியது. ருக்குமணி இளங்கோவிடம் விளக்கமளித்தான் :

"ராத்திரில எதுக்கும்மே சூரிய நமஸ்காரம்? சாரே! இந்த தத்தேரிதான் ஒன்னை ஆள் வெச்சு அடிச்சுப் போட்டது. நானு, நீ இவளுக்காகப் பட்டபாட்டைச் சொன்னாலும் சொன்னே அம்மாவுக்கு பொத்திக்கிறயுகை வருது. வீட்ல போய் சொல்லிட்டு வரட்டுமா சாரே?"

இளங்கோ சரோசாவை சிரமப்பட்டு முகம் திருப்பிப் பார்த்தான். அவளோ, அவனைப் பார்த்துக் கையெடுத்துக் கும்பிட்டாள். அந்தக் கைகளை விரித்து அதற்குள்ளேயே முகம் புதைத்து விம்மினாள். பிறகு அவனருகே போய் நின்று, "நானும் போலீஸ்ல சரண்டர் ஆகப் போறேன் சாரே. எனிக்கா பாடுபட்ட ஒன்ன இப்படி படாத பாடுபடுத்திட்டு நானு வெளில திரிய விரும்பல சாரே. உன் கைக்கி வெள்ளத்துணி போட்ட இந்தப் பாவி கைக்கு, இரும்பு விலங்கு போடணும் சாரே" என்று அழுதழுது சொன்னாள். அவன் ஏதாவது பேச வேண்டும் என்பதுபோல் அவன் வாயையே பார்த்தாள். இதற்குள் ருக்குமணி வெளியேறப் போனாள்.

இளங்கோ தட்டுத்தடுமாறி தலையாட்டியபடியே சொன்னான் :

"ஆக்சிடெண்டுன்னு சொல்லு. பாமாவுக்கும் சொல்லச் சொல்லு. மறந்துடாதே! ஆக்ஸிடெண்டுதான் - பைக்கிலே இருந்து கீழே விழுந்துட்டேன்."

ருக்குமணி, இளங்கோவைப் பெருமையாகவும், சரோசாவை சிறுமையாகவும் பார்த்தபடி வெளியேறினாள். இளங்கோ முக்கல் முனங்கலோடு, சரோசாவைப் பார்த்து லேசாய் சிரிக்கப் போனான். அவள், ஏதோ பிராயச்சித்தம் செய்யப் போகிறவள்போல்

மேஜையிலிருந்து ஒரு டம்ளர் தண்ணியை அவன் வாயருகே கொண்டு போனாள். அவள் மனம் நோகக்கூடாது என்பதற்காக அதைக் குடித்துவிட்டு, இளங்கோ, அவளைப் போகும்படி சைகை செய்தான். அப்படியும் அவள் போகாமல் நிற்பதைப் பார்த்துவிட்டு ஒடியாத கையால் அவளை லேசாகத் தள்ளிவிட்டான். அவன் எதற்காகப் போகச் சொல்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட சரோசா, அவன் கால்களைப் பிடித்தபடியே விம்மினாள். அவன் அடிவயிற்றிலிருந்து ஒரு மூச்சை வாய்க்குக் கொண்டு வந்து, “போம்மா” என்று சத்தம் போட்டுச் சொன்னான்.

சரோசாவோ, போகுமிடமில்லாததுபோல், போக வேண்டிய இடம் பிடிக்காததுபோல் அங்கேயே நின்றாள்.

## 17

நாய்கள் கூடக் குரைக்காத நடு நிசி...

துரையின் சாராயக் கொட்டடிக்குக் கிழக்கே மண்டிக் கிடக்கும் குடிசைப் பகுதி. ஒன்றின் சுவர் இன்னொன்றுக்கு சுவரான தொடர் குடிசைகள். தொடர் தொடராய் சோடி சேர்ந்த குடிசைகளுக்கும், நான்கு கம்பிகள் அகல வாய்ப்பில் செருகப்பட்ட ‘ஜன்னல்கள்’. இந்த குடிசை வரிசைக்கு அங்கேயும் இங்கேயும் தாறுமாறாய் சிதறிக்கிடந்த தகர டப்பாக் குடிசைகள்; கோணிக்கதவுப் பொந்துகள்; ஒன்றோடு ஒன்று நெருக்கித் தள்ளிக் கொண்டிருந்த குடில்கள். இதற்கு மத்தியில் ஒரு பொட்டல் வெளி. அங்கேயும் ஒரு குடிசை இருந்ததுக்கு அடையாளமாக மூங்கில் பட்டைகளும், ஓலைக் கசிவுகளும் சிதறிக்கிடந்தன. அக்கம் பக்கத்து குடிசை மகுடங்களும், அருகே இருந்த ஒரு வாகை மரமும் ஆகாயக்

கூரையாக, அந்தப் பொட்டல் 'தலைமறைவாக' இருந்தது. அதற்கு இருந்த ஒரேயொரு வழியையும் ஒரு அம்பாசிடர் கார் கதவு போல வழிமறித்து நின்றது.

அந்தப் பொட்டல் வெளி புகைந்து கொண்டிருந்தது. ஒரு பெரிய அடுப்பின் மேல் மூன்றடுக்குப் பானைகள் மண்கரகங்கள்போல் அடுக்குடுக்காய் வைக்கப்பட்டிருந்தன. கீழே முதுமக்கள் தாழி மாதிரியான பெரிய பானை. அது கீழே வீசிய நெருப்பில் களிமண்ணே சிவந்து கல்லானது போல் அடிவாரத்தைக் காட்டியது. சென்னைப் புறநகர்ப் பகுதி ஒன்றில் நாட்கணக்கில் முகமூடி வாய்களோடு புதைக்கப்பட்டிருந்த மண் பானைகள், சிறிது தொலைவில் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. அத்தனையும் கலக்கல்கள். இவற்றில், போன வாரம் இட்டு நிரப்பப்பட்ட வார்னிஷ், சின்னச் சின்ன பாட்டரிகள், ஒயர்கள், அழுகிப் போன பழங்கள், வெல்லம், கருவேலம் பட்டை போன்ற பொருட்கள் இப்போது நீரோடு சேர்ந்து நீர்த்துப் போயிருந்தன. ஒரு டவுசர்காரப் பையன், அந்தப் பானைகளுக்குள், கையில் வைத்திருந்த ஒரு கண்ணாடிக் குப்பியிலிருந்து இரண்டு மூன்று துளிகளைத் தெளித்துக் கொண்டிருந்தான். இப்படி 'போஷாக்கு'ச் செய்யப்பட்ட ஒரு பானைதான், அந்த அடுப்புக்கு மேல் இருந்தது. இதைவிடச் சிறிய ஒரு பானை அதற்குமேல் இருந்தது. சிறியது என்றால் கீழே இருப்பதை விடச் சிறியது; ஆனால் சாதாரணப் பானையைவிடப் பெரியது. இந்தப் பானைக்குள் ஒரு அலுமினியப் பாத்திரம் எப்போதோ வைக்கப்பட்டிருந்தது. இந்தப் பானைக்கு வெளியே குழந்தையின் தொப்புள் கொடி போல் ஒரு டியூப்; அந்தப் பானையின் குழாயடி டேப்புக்குள் இருந்து வெளிப்பட்ட இந்த டியூப், வெளியே வைக்கப்பட்ட தார் நிறத்தில் உள்ள ஒரு கேனுக்குள் ஊடுருவி இருந்தது. இந்த நடுப்பானைக்குமேல் இன்னொரு பானை. அதன் வாய் ஒரு மண் ஜாடியால் மூடிக்கிடந்தது. இந்த மூன்று பானைகளுக்கும் இடையே உள்ள, இடைவெளி மண்ணால்

பூசப்பட்டு, அவற்றிற்கு ஒரே பானைபோல் ஒரு தோற்றத்தைக் கொடுத்தது.

துரை, பத்தடி தள்ளி, ஒரு நாற்காலியில் சோர்ந்து கிடந்தான். அங்கே காய்ச்சப்படுவதற்கும், தனக்கும் சம்பந்தம் இல்லை என்பது போல், கண்மூடிக்கிடந்தான். ஆனால் அம்மைத் தழும்பனான கோபால், அவனுடைய கூட்டாளிகளான இன்னாசி, மணி, மொட்டை, ராக்கப்பன், சந்திரன் போன்ற வகையறாக்கள் அங்கும் இங்குமாகச் சுழன்றார்கள். சரோசா, தனது இஷ்டத்துக்கு விரோதமாக நிற்பவள் போல், அந்த வாகை மரத்தில் சாய்ந்து, அருகே உள்ள ஆழ்கடலையும் மேலே ஆகாயத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

அடுப்புத்தீ, நட்சத்திரப் பொறிகளாக மேலோங்கி மேலோங்கி, ஊறல் பானையின் அடிவாரத்தையே திரவமாக்கப்போவது போல் எரிந்தது. 'சடசட' என்ற நெருப்புச் சத்தம். அதன் சினப்பொறிகள் ஓலைத்துகள்களோடு உரசி, உரசி அங்கும் இங்குமாய் நாட்டியம் ஆடின. ஆகாயமும், பூமியுமாய் ஒரே சமயத்தில் தாவுவது போல் தோன்றின. அடுப்புப் போட்ட கத்தல், எதிரே ஆர்ப்பரித்த கடலுக்கு ஜால்ரா போடுவது போல் இருந்தது.

இந்தப் பின்னணியில், ரத்தச் சதைபோலான தாழிப்பானையின் அடிவாரச்சூடு தாங்கமுடியாது, ஆவியான ஊறல், அடுத்த பானைக்குள் புகுந்து அதற்கு மேலே தாவி, முதல் பானையின் ஈரக்கசிவான அடிவாரத்தில் மேகமண்டலமாகி, பின்னர் தலைக்காவிரி போல் மெல்லியத் துளிகளாகி, அந்தப் பானையின் அடிவாரத்தில் பிறப்பெடுத்து; அலுமினியப் பாத்திரத்தில் விழுந்து கர்ப்பக்குழாய் மாதிரியான ரப்பர் குழாய் வழியாய் சாராய காவிரியாகி, அந்த கேன் கடலுக்குள் சங்கமமாகிக் கொண்டிருந்தது.

துரை, சீக்கிரம் வேலையை முடித்துவிட்டு முடங்கிக் கொள்ள வேண்டும் என்ற ஒரே எண்ணத்தில், இருந்த இடத்தில் இருந்தபடியே அதட்டினான் :

“இன்னாங்கடா, ஒரு அவுரு ஆவுது, வேடிக்கை காட்டுறீங்க.”

‘குருதோஸ்து’வின் சிக்னலைப் புரிந்து கொண்ட இன்னாசி, மேல் பானையை டவலைக் கொடுத்துத் தூக்கிய பொழுது, கோபால் அடுப்பு விறகை சிறிது வெளியே எடுத்தான். இதற்குள், இன்னொருத்தன் அந்தப் பானையை வாங்கி, அதில் கொதித்த நீரை கீழே கொட்டிவிட்டு, மீண்டும், அதை மத்திய பானைக்குமேல் மல்லாக்க வைத்தான். இன்னொருத்தன் கீழே கிடந்த ஒரு பிளாஸ்டிக் கேனை தூக்கி அதற்குள் இருந்த தண்ணீரை அந்தப் பானையின் வாய்க்குள் தாரை வார்த்தான். அப்போது பானைத் தண்ணீர் கீழே சிந்தி நெருப்புமேல் பட்டு, அந்த நெருப்பை நாகப்பாம்பாய் சீறவைத்து, பின்னர் பூனைக்குட்டியாய் ஒப்பாரி போட வைத்தது.

துரை, உடம்பை நெளித்தபடியே கத்தினான் :

“அசல் நாட்டுப்புறண்டா நீ... தொழிலில் சுத்தம் வேணுண்டா சோமாறி.”

“நாட்டுப்புறமுன்னா, அசமந்தமுன்னு நினைக்காதண்ணா... இப்போ நமக்கே கத்துக் கொடுப்பாங்க. இந்த காச்சலையே எடுத்துக்கோ. நாம அடிக்கடி மேல்பானை தண்ணிய மாத்தறோம். ஆனா நாட்டுப்புறத்துல பம்பு செட்டு தண்ணியையே வாய்க்கால் மாதிரி அந்தப் பானை மேல விடுறாங்கோ. அந்தப் பானையோ நம்ம அண்ணாத்தே வீடு மாதிரி சும்மா கும்முன்னு குளுராவே இருக்குது. சிலரு நிலத்துலயே ஊறல ஊத்தி வைக்கிறாங்க.”

துரை, இப்போது பலமாகச் சிரித்தான்; சத்தம் போட்டுச் சிரித்தான். அந்தச் சிரிப்பில், எல்லோரும் சேர்ந்து அதன் ஒலி

அடார்த்திக்கு, ஒரு அழுத்தம் கொடுத்தார்கள். ஆனால் சரோசா மட்டும் சும்மாவே நின்றாள். துரை, அவளை செல்லமாக அதட்டினான் :

"இன்னாமே ஒனிக்கி கேடு? ஐல்தியா, ஸ்பெஷல் தயாரிமே. அம்மாம் பெரிய கார எவ்வளவு நேரம் காக்க வைக்கிறது? இந்தா வாங்கிக்கோ."

அடித்துப்போட்ட இளங்கோவையும், அவன் துடித்த துடிப்பையும், மனதுக்குள் உள்வாங்கி, மருவிக் கொண்டிருந்த சரோசாவுக்கு, துரையின் பேச்சு காதுகளை உரசவில்லை. அதோடு அவளைப் போலவே ஏழ்மையில் இருந்தாலும், பாசமும், நேசமும் கொண்ட ருக்குமணியை நினைக்க நினைக்க, அவள் அண்டமாகவும், இவள் அணுவாகவும் பெருகிக்கொண்டும், சருங்கிக் கொண்டும் இருப்பதுபோல் தோன்றியது. இந்தக் கோலத்தில், இளங்கோ தன்னைப் பார்த்தால் அவன் என்ன நினைப்பான் என்ற எண்ணம் அவளை சாராயம் போடாமலேயே 'கிக்காக்கியது'. துரை, மீண்டும் அதட்டினான் :

"ஒனக்கு இன்னாமே ஆச்சுது? நானே உயிரோட கீறேன். உனிக்கு என்ன கேடு? இந்தா, இத பட்டும் படாமலும் தட்டுமே. முக்கிடாதே."

சரோசா மெல்ல மெல்ல நகர்ந்து, துரை நீட்டிய ஈரப்பொட்டலத்தை வாங்கிக் கொண்டாள். அதற்குள் இருந்த ஊமத்தை விதைகள், அந்த வெள்ளைத் துணிக்குள் மாரியாத்தாவின் ஆயிரங்கண்கள் போல் சிமிட்டின. அதை வாங்கிக் கொண்ட சரோசா ஒரு 'தெவசாவில்' ஊற்றப்பட்டிருந்த திரவத்தின்மீது அந்தப் பொட்டலத்தை பட்டும் படாமலும் தட்டிக் கொடுக்கத்தான் போனாள். ஆனாலும், தன்னை அறியாமலே, அந்தப் பொட்டலத்தை அந்தத் திரவத்திற்குள் முக்கி முக்கி எடுத்தாள். சாதாவாக இருந்த அந்தச் சாராயம், இப்போது 'ஸ்பெஷல்' ஆகிவிட்டது. இதன் விலையும் கிக்கும் இரண்டு மடங்காம்.

சரோசா அந்த ஸ்பெஷல் சாராயத்தை இன்னொருவனுடன் சேர்ந்து கேனில் ஊற்றினாள். அப்போது கார் டிக்கியை த் திறந்த மணி ஆச்சரியம் தாங்காமல் கத்தினான்:

"துரண்ணே! இந்தண்டே வந்து பாரு. காரோட டிக்கி அசல் மாட்டுத்தொட்டி மாதிரி கீ துண்ணே. டயர் கியர் எதுவுமில்லாமே சதுரமா அசல் தரை மாதிரி இருக்குதுண்ணே."

"அடப்போடா எட்டன். அண்ணாத்தைக்கு டிக்கிய தொட்டியாக்குற ஐடியாவ கொடுத்ததே நானுதான்டா."

"சரக்கு எங்கண்ணே போகுது?"

"எங்கே போனால் உனக்கு என்னடா கயிதே?"

"ஏண்ணே இப்படி லொள்ளு லொள்ளுனு கத்தறே?"

"பின்னே இன்னாடா... அண்ணாத்தே, சர்க்கார் லைசன்சுல ஓடுற ஒயின் சாப் அல்லாத்திலேயும் விஸ்கி, பிராந்தி, ரம் இருக்கவேண்டிய பாட்டல்ல இந்த சரக்க ஊத்தி விக்கிறார்ன்னு டமாரம் அடிக்க முடியுமா? கம்மனாட்டி; என் வாயை கிளறிட்டான் பாரு."

"அதனாலதான் இப்போ பார்ல குடிக்கிறவங்க எல்லாம் மார்ல கை வைக்காங்களா?"

"ஏய் சரோ, கார்ல ஏத்தேமே."

சரோசா, அந்தக் கேனை தூக்கப்போனபோது, செட்டில் புதிதாகச் சேர்ந்திருக்கும் ராக்கப்பன் அங்கே வந்து கீழே மண்டியிட்டு, அந்த கேன் மூடியைத் திறந்து, கையை அதற்குக் கீழே வைத்துக்கொண்டு கேனை கவிழ்த்துக் கொஞ்சம் குடித்தான். சரோசா அவனைக் குப்புறத் தள்ளினாள். கையை ஓங்கப்போனவள்... பின்னர் அதே கையால், ஒவ்வொரு கேனாகத் தூக்கிக்கொண்டு போய் கார்

டிக்கியில் வைத்துக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு தடவையும் இளங்கோ, அவளை வழிமறிப்பதுபோல் இருந்தது. ருக்கு, அவளை பின் பக்கமாய்ப் பிடித்துத் தன் பக்கம் இழுப்பது போல் இருந்தது. இந்தச் சமயத்தில் ராக்கப்பன் கூப்பாடு போட்டான் :

"அய்யோ, என் கண்ணு பூட்டே! வயிறு எரியுதே! அய்யய்யோ என் கண்ணு! அய்யோ என் வயிறு!"

எல்லோரும் அவன் பக்கமாக ஓடி வந்தார்கள். அவன் தரையில் சுருண்டு சுருண்டு நெளிந்தான். மேற்கொண்டு கத்த முடியாமல் வாய் கோணியது... கைகால்கள் வெட்டின. கழுத்து பின்பக்கமாய் திரும்பப் போனது... எல்லோருக்கும் புரிந்துவிட்டது. துரை கத்தினான்; சரோசாவை அடிக்கப்போவது போல் கைகளை ஓங்கிக்கொண்டு அதே சமயம் அந்தக் கைகளை அவள் தலையில் இறக்காமல் சத்தம் போட்டான் :

"நான் நெனச்சபடியே, அந்தப் பொட்டலத்த முக்கி முக்கி விஷச் சாராயமா ஆக்கிட்டியமே... தோ பார்! அந்தப் பொட்டலம் ஈரமா நனஞ்சிருக்கு பார். நீயல்லாம் ஒரு தொழில்காரியா? இப்போ இவன் குடும்பத்துக்கு யார் ஜவாப்பு?"

சரோசா திருப்பிக் கத்தினாள் :

"நானு மொத்துனதுல விஷமாகல. அதோ அந்த ஓணா மூஞ்சி விஷத்துல இரண்டு துளிய ஊத்துறதுக்குப் பதிலா சொட்டுச் சொட்டா ஊத்துனான். அப்பவே எனிக்கு சந்தேகம்."

"அப்போ நீ வேடிக்கை பார்த்துட்டு இருந்திருக்கே?"

"சரிதாம்பா, உன் கையாலேயே எனிக்கும் ஒரு கிளாஸ் தந்துடு. அவனைப் போலவே நானும் ஆயிடுறேன். இந்தத் தொழிலு எனக்கு வேணா வேணான்னு சாயங்காலம் வாயிலும் வயித்துலுமா அடிச்சி உன்கிட்ட சொன்னேன்... நீ கேட்டாத்தானே!"

இதற்குள், கீழே கை கால்களை வெட்டிக் கொண்டிருந்தவன் ஆடி அடங்கி விட்டான்; அப்படியே விறைத்துக் கிடந்தான். அவன் வாயோ 'சொல்லாதே யாரும் கேட்டால்' என்பதுபோல் கோணிக் கிடந்தது. கண்கள் பாடை போல் வெளுத்து இருந்தது. சரோசா முகத்திற்கு கைகளை மூடியாக்கிக்கொண்டு விம்மினாள். துரை இப்பொழுது அவளுக்கு ஆறுதல் சொன்னான் :

"படுகளத்துல ஒப்பாரி கூடாதுமே. இன்னாசி, கோணி கொண்டுவா. பிணத்த தூக்கினு போயி கடலுல போடணும். நானு அண்ணாத்தைக்கு போன்ல விஷயத்தை சொல்லிட்டு வாறேன். எதிர் கோஷ்டி அங்கப்பன், ஆளுங்கட்சியில சேர்ந்த ஜோர்ல, நாம காய்ச்சிற வழக்கமான இடத்துல வம்பு பண்றான்னு இங்க வந்தால், இங்கேயும் இப்படி ஆயிட்டுதே."

சரோசாவுக்கு, இப்போது தன்னை முன்னாலும், பின்னாலும் ருக்குவும், இளங்கோவும் நின்றுகொண்டு ஆளுக்கொரு பக்கமாக இழுப்பது போல் இருந்தது. இப்படிப்பட்ட பல சாவுகளைப் பார்த்தவள்தான் அவள். ஆனால் இன்றோ அந்தப் புது தோஸ்து விறைத்துக் கிடந்ததைப் பார்க்கப் பார்க்க, அவள் மனமே அந்த ரூபத்தில் கிடப்பது போல் இருந்தது. திடீரென்று அவளே செத்து ஆவியாகி பேயுருவம் கொண்டது போல் எழுந்தாள். அந்தக் கார் பக்கம் ஓடினாள். அந்த டிக்கி தொட்டியில் இருந்த கேன்களை எடுத்து, கடல் பக்கமாக ஓடி ஓடி வீசிப் போட்டாள். துரை வந்து, அவளைப் பிடித்துக் கொண்டான். மற்ற தோஸ்துகளும், அந்தப் பிணத்தைக் கோணிக்குள் செருகப்போன இதர தோஸ்துகளும், அங்கே வந்து நின்றபோது, துரை கத்தினான்:

"என்னமே ஆச்சி ஒனக்கு? எதுக்காக கேனை கடல்ல எரியுற?"

சரோசா திருப்பிக் கேட்டாள் : "அப்போ அல்லாரும் இத குடிச்சிட்டு சாகணுங்கறியா?"

"அது அண்ணாத்தையோட விஷயம். அவர் என்ன சொல்றாரோ அதைச் செய்றதுக்குத்தான் நாம இருக்கோம். ஒருவேளை எதாவது முறிவு மாத்திரை போட்டுக்கூட அண்ணாத்தே மாயாஜாலம் செய்யலாம். உனிக்கி இன்னாமே வந்தது?"

"துரை அண்ணே! துரை அண்ணே! ஒன்னை கையெடுத்துக் கும்பிடறேன்; எனிக்கி இந்தத் தொழில் வேணாம்; என்ன விட்டுடு, விட்டுடு."

சரோசா, அந்தக் காரை காலால் ஒரு உதை உதைத்துவிட்டு, தலைவிரி கோலமாக ஓடினாள்.

## 18

ஐந்தாறு நாட்கள் அடங்கி, ஆறாவது நாள் துவங்கியது.

இந்த இடைவெளிக்குள், இளங்கோவுக்கு வேண்டியவர்கள் எல்லோருமே அவனைப் பார்த்துவிட்டார்கள். பெற்றோர், உற்றோர், அலுவலக சகாக்கள் அனைவரும் அவனுக்கு ஏற்பட்ட 'விபத்தை' தலைக்குப் பதிலாக தலைப்பாகையோடு போனதாய் நினைத்துக் கொள்ள வேண்டும் என்றார்கள். அவனுடைய அம்மா கிட்டத்தட்ட அங்கேயே கிடந்தாள். எல்லோரையும்விட அலறி அடித்து, அவனை முதல் தடவையாய் மருத்துவமனையில் பார்த்த பாமாவும் அங்கேயே தவம் கிடப்பதுபோல் கிடந்தாள். ஆனால் பாக்கியம் பார்த்த பார்வையில் லேசாய் ரோஷப்பட்டு, இப்போது தாய்க்காரி இல்லாத சமயமாய் பார்த்து வந்து கொண்டிருக்கிறாள். அவளுக்கு மட்டும், இளங்கோவுக்கு ஏற்பட்டது விபத்தா அல்லது ஆபத்தா என்கிற சந்தேகம் இன்னும் போகவில்லை. அப்படி

ஏடாகூடமாக ஏதாவது நடந்திருந்தால் இளங்கோ சொல்லி இருப்பார் என்ற நம்பிக்கை; அப்படியான ஒரு உரிமை...

அந்த மாடிக்குக் கீழே வரவேற்பு வளையத்திற்குள் நோஞ்சானின் தயவில், சரோசா தன்னை மறைத்துக்கொண்டு காத்துக் கொண்டிருந்தாள். மேலே பாமா போயிருக்கிறாள். அவள் போன பிறகுதான், இவள் போக வேண்டும். அரைமணி நேரத்திற்குப் பிறகு பாமாவும், நோஞ்சான் பாணியில் சொல்லப்போனால் அவளுடைய 'கிடாத்தலை' அப்பன் மிஸ்டர்.ரமணனும் கீழே படியிறங்கினார்கள். சரோசா, தலையை குனிந்துகொண்டாள். அவர்கள் மருத்துவமனையை விட்டு மறைந்ததும், அவளுடைய தலை வரவேற்பு வட்டத்திற்கு மேல் மூன்றடி உயரத்தில் எழுந்தது. வழிகொடுக்கும் சாய்வுப் பலகையை நிமிர்த்திக் கொண்டு, வெளியேறி மாடிப்படிகளில் ஏறினாள். இதற்குள், அவனை, அவள் மூன்று நான்கு தடவை பார்த்து விட்டாள். அவனிடம் கெஞ்சிக் கூத்தாடி மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று அவள் பேச நினைக்கும்போதெல்லாம், பார்வையாளர்கள் வந்துவிடுவார்கள். அவர்களது ஆடை ஆபரணங்களைப் பார்த்துவிட்டு, இவளே தனக்குள் கூசிக்கொண்டு வெளியே வந்துவிடுவாள்.

சரோசாவின் உருவம் வாசலில் தெரிந்தவுடனேயே, இளங்கோ அவளை அடையாளம் கண்டு "வா சரோசா" என்றான். அவளும் சொல்லப் பொறுக்காதவளாய் அந்த அறைக்குள் தாவினாள். அவன் முகத்தைப் பார்த்தாள். நெற்றிப்பொட்டின் வீக்கம் குறைந்திருந்தது, காதைப் பார்த்தாள்; பிளாஸ்திரி இன்னும் எடுக்கப்படாமல் இருந்தது. ஒரு கை, இப்போதும் ஒரு மாதிரி தெரிந்தாலும், அது தூளியில் தொங்கப்போடாமல், அவன் மடியில் கிடந்ததில், அவளுக்கு மகிழ்ச்சி.

சரோசா கையில் இருந்த ஒரு ஆப்பிள் பழத்தை அவனிடம் தயங்கியபடியே நீட்டினாள். பலர் இப்படி அவனுக்குக் கொடுப்பதை தொலைவில் நின்று பார்த்த அவளுக்கு, நோயாளிகளுக்கு இப்படி பழவகைகளைக் கொடுக்க வேண்டும் என்பது இப்போதுதான் புரிந்திருக்க வேண்டும். அவனுக்கு ஏதோ ஒரு டெலிபோன் வந்தது. யாரோ அலுவலக ஆசாமி. இவனும் "தேங்க்யூ ஸார்... தேங்க்யூ ஸார்... உடம்பை ஜாக்கிரதையாகத்தான் பாத்துக்கறேன் ஸார்; இனிமேல் கண்டபடி வண்டியை ஓட்டமாட்டேன் ஸார்" என்று அவன் அப்படிக் குழைந்து பேசியதைப் பார்த்தால் டெலிபோனில் அடுத்த முனையில் பெரிய அதிகாரி ஒருவர் பேசியிருக்க வேண்டும். டெலி போனை கீழே வைத்துவிட்ட அவன், சரோசாவைப் பார்த்தான். அவளது ஈரப்பட்ட முகத்தைப் பார்த்தபடியே ஒரு சந்தேகம் கேட்டான்:

"ஆமா சரோ, நானும் உன்னை கவனிச்சுட்டுத்தான் வரேன். இங்கே ஆளுங்க வரும்போதும் போகும்போதும் கண்ணை கசக்குறயே, ஏம்மா?"

சரோசா அவனை சங்கடத்துடன் பார்த்தாள். பிறகு அவனிடமே ஆலோசனை கேட்பதுபோல் ஒப்பித்தாள் :

"கண்ணை கசக்கலே சாரே; கண்ணே கசங்குது! அதென்னமோ எனிக்குத் தெரியலே, இங்கமட்டுமில்லை, எங்கேயும் ரெண்டுபேரோ மூணுபேரோ அன்னியோன்யமாய் பேசிட்டிருந்தால் எனிக்கு அயுகை வந்துடும். நேத்து பாரு... இந்த கஸ்மாலம் புடிச்ச மழையிலே ஒரு பொடிப்பயலும், ஒரு பொண்ணு தன்னோட முந்தானையை எடுத்து அவன் தலையில மூடனாய். இந்த பாசத்தை பார்த்துட்டு நான் அழுதுட்டேன் சாரே. யாராவது கொயந்தைய கொஞ்சறதப் பாத்துட்டாப் போதும், அயுதுடுவேன். யாராவது 'சொகமா இருக்கிறியானு' மெய்யாவே கேட்டாப் போதும், அயுதுடுவேன். எனக்கே ஏன் இப்படினு புரியல. எதுக்கும் ஆஸ்பத்திரி தோஸ்துக்கிட்டே சொல்லி இங்கே வார

பைத்தியக்கார டாக்டரண்டே என்னையும் தோவுண்டு டெஸ்ட் பண்ணிக்கலாமுன்னு இருக்கேன். சர்தானே சாரே?"

இளங்கோ, அவளை இப்போது புதுமாதிரியாகப் பார்த்தான். அவளைப் பார்க்கப் பார்க்க, அவனுக்கே அழுகை வரும்போல் தோன்றியது. ஆகையால் அவள்மீது ஏவிவிட்ட பார்வையை தவிர்த்துவிட்டு, அங்குமிங்குமாய் பார்த்தான். அவளைப்பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க, அவள் கல்லுள் மறைந்த சிற்பம்போல் தோன்றினாள். அந்த தடிப்பேறிய உடம்பிற்குள் ஒரு குழந்தை அழுது கொண்டிருப்பதுபோல் தென்பட்டது. அவளை முழுமையாகத் தெரிந்துகொள்ள வேண்டிய பிசகாத கையை ஊன்றி இருக்கையின் முனைக்கு வந்தான். அவளை உட்காரச் சொன்னான். அவளோ நின்றுகொண்டே உட்காருவதுபோல் உடம்பை வளைத்துக் கொண்டாள். இளங்கோ, அவளை அனுதாபமாய் பார்த்தபடியே கேட்டான் :

"உன்னைப் பற்றி விவரமா சொல்வேன் சரோ."

"போலீஸ் சொல்லி இருக்குமே."

"சொல்லுச்சு. ஆனால் அந்தப் போலீசுக்கு ஒருத்தரோட காரியங்கள் தான் முக்கியமே தவிர, காரணங்கள் அல்ல. ஏழைகளை வேரோடு பிடுங்கி எறியத்தான் தெரியுமே தவிர, அவுங்களோட வேரையோ, வேரடி மண்ணையோ தெரிஞ்சுக்க மாட்டாங்க. போகட்டும்; ஒன்னைத் தேடி ஸ்டேசனுக்கு ஒரு பெரியவர் வந்தாரே, அவரு யாரு?"

சரோசா, உடனடியாகப் பேசவில்லை. கண்களை உள்நோக்கிச் செலுத்தினாள். அதை நெஞ்சுக்குள் விட்டதுபோல் இமைகளை முழுமையாகக் காட்டினாள். மனதிற்குள் மூன்று வயதுக் குழந்தையாக அழுதாள். கத்தியுடன்கூடிய கொலைகாரியாகத் தாண்டவம் ஆடினாள். பிறகு முடங்கிப் போனவள்போல் - மூலையில்

கிடப்பதுபோல் பாவித்துக் கொண்டாள். சிறிது நேரத்தில் அவள் இமைகள் மெல்லத் திறந்தன. இளங்கோவை நிமிர்ந்து பார்த்தாள். கண்களைத் துடைத்துக் கொண்டு, உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டு, முதல் தடவையாக ஒரு தோழனைப் பார்க்கிற துயரமும் மகிழ்ச்சியும் கலந்த கலவைக் குரலில், தனது வாழ்க்கைச் சுருக்கத்தை சொன்னாள்:

"பெரிசா சொல்றதுக்கு எதுவுமே இல்லே சாரே. என் நயினா, அதான் நீ சொன்னியே - ஸ்டேசனுக்கு வந்தவர் - அவரு பர்மாவுல பெரிய கில்லாடியா இருந்திருக்கார். காரு வச்சிருக்கார், பங்களா வச்சிருக்கார்; கண்ணுக்கு அயகா பொண்டாட்டி வச்சிருக்கார். ஒரு பொண்ணையும், புள்ளாண்டானையும் பெத்திருக்கார். அப்போ ஏதோ ஓலகப்போரோ ஏதோ வந்துதாமே - அதுல சப்பான்காரன் ரங்கூன்லே குண்டு போட்டிருக்கான். உடனே எல்லாரையும் போலே நயினாவும் துண்டக் காணோம். துணியக் காணோம்னு அடிச்சுப் புரண்டு குடும்பத்தோட நம்ம நாட்டைப் பார்த்து நடந்திருக்கார். காடு மலை வழியா, சனங்களோட சனமா வந்திருக்கார். கார் வைச்ச மனுசன் காலு வீங்கி நடந்திருக்கார். காட்டு வழியிலே எத்தனையோ பேர், வயசான நயினாக்களையும், ஆத்தாக்களையும், கொயந்தைங் களையும் வழியிலேயே விட்டுட்டு, கண்ணீரும் கம்பலையுமா ஓடி வந்திருக்காங்க. ஆனா என்னோட நயினா வூட்டுக்காரியை இடுப்பிலேயும், கொயந்தைங்களை தோளிலயுமா தூக்கிட்டு வந்திருக்கார். ஆனாலும் வழிலே சப்பான்காரன் மேலே, குண்டு போடறதா நினைச்சு, வெள்ளைக்காரன் போட்ட குண்டுல பொண்டாட்டியும் பூட்டாள். புள்ளாண்டானும் பூட்டான். நயினா மூணு வயசு பொட்டக் குயந்தயோட தப்பிச்சுட்டார். இந்த மெட்ராசுக்கு வந்து சமையல்காரனா, ரிக்ஷாக்காரனா வேலை பார்த்து, தாம் பெத்த பொண்ணை ஒருத்தனுக்குக் கட்டி வச்சிருக்கார். நான் பிறந்த ஒரு வருஷத்திலேயே, அவரோட பொண்ணு என்னோட ஆத்தா - அந்த தத்தேறி முண்டை, - எவனோ ஒரு

கோல்மாலை இஸ்துக்குன்னு பூட்டாளாம். அவன் மட்டும் என் கையிலே கெடச்சா, பீஸ் பீஸா கிழிச்சிடுவேன்."

"ஏன் உடம்பை இப்படி ஆட்டறே சரோ? பொறுமையாச் சொல்லு. நடந்ததை இனிமேல் மாத்த முடியாது. உன்னோட அம்மா எந்த நிலைமையிலே அப்படிப் போனாளோ?"

"அது இன்னா சாரு நிலைமை? கொயுப்பு எடுத்த நிலைமை? பயங்கரமான காட்டுலே இருந்து தோளுல தூக்கிட்டு வந்த அப்பாவை வுட்டுட்டுப் போறதுக்கு எப்படி சாரே மனசு வரும்? பெத்த கொயந்தயை விட்டுட்டுப் போறவள் பொம்மனாட்டியா? போ சாரே... அவள் பேச்சை எடுக்காதே."

"அம்மா மேலே இந்த அளவுக்கு வருகிற கோபத்தை உன் அப்பா மேலே காட்டணுமுன்னு ஏன் தோணலே?"

"என்னை அவனுக்குப் பெத்தாளோ, இல்லை எவனுக்குப் பெத்தாளோ?"

"அந்தக் கஸ்மாலப் பயலும் ஒரு வருஷத்துக்குப் பிறகு இன்னொருத்தியை இஸ்துக்குன்னு ஓடிட்டானாம். ரெண்டு பேரும் எத்தனை கை மாறினாங்களோ? விட்டுத்தள்ளு சாரே எச்சிக்கலங்கள. ஏதோ நாயினாவுக்காக காலத்தைத் தள்ளிட்டு இருக்கேன். நான் விட்ற ஒவ்வோர் மூச்சும் அவருக்குத்தான். இரும்பைத் திருடி அவருக்கு வடையா மாத்திக் கொடுக்கேன்; சாராயம் கடத்தி அவரை சாகாம பாத்துக்கறேன். எப்படியோ பொயப்பு ஓடுது. ஆனாலும் ஒன்னை நானு அப்படி படுத்தியிருக்கப்படாதுதான்."

இளங்கோ, சரோசாவை கண்களை ஆட்டாமல் பார்த்தான். தோள் பக்கம் நைந்துபோன அவள் ஜாக்கெட்டையும் முட்டிக் கால்களைக் காட்டிய அவளது கிழிந்த பைஜாமாவையும் பார்க்கப் பார்க்க, அவனுக்கு மனம் நைந்தது. அவளையே உற்றுப்பார்த்தவன்,

பிறகு ஏதோ ஒரு வெளிச்சம் கிடைத்ததுபோல் அவளைப் பிரகாசமாகவும், பிரகாசப்படுத்தியும் கேட்டான் :

"ஒன்னோட எதிர்காலத்தைப்பற்றி எப்பவாவது நெனச்சுப் பாத்தியா?"

"எப்போ ஒருநாள் நினைச்சேன் சாரே... தலை சுத்திச்சு... விட்டுட்டேன். என்னை மாதிரி குப்பத்துப் பொண்ணுங்க குப்பத்துல திரியற நாயிங்க மாதிரி. எதிர்காலத்துல என்ன நடக்கும்னு தெரியாமக் கீறதுதான் எனிக்கு நல்லது. ஏதோ பண்ணி மாதிரி ஒரு பொய்ப்பு... விட்டுத் தள்ளு."

"அப்படி இல்ல சரோசா... பன்றி மிருகம்... ஆனால் நாம் மனுசன் மாதிரி. இப்போ ஒனக்கு இருபத்தோறு வயசுதான் இருக்குமுன்னு நினைக்கிறேன். எல்லோரும் இப்போ உன்னைக் கொஞ்சுவாங்க, தலையிலே வச்சுக் கூத்தாடுவாங்க. ஆனால், இன்னும் இருபது வருசத்துக்குப் பிறகு ஒன்னோட நிலைமை எப்படி இருக்குமுன்னு யோசித்தியா? அந்த மாதா கோயிலுக்கு முன்னாலே தரையோட தரையா உடம்புகளைக் கிடத்திக்கிட்டு கிடக்குதே ஒரு அனாதைப் பட்டாளம், அதுலதான் நீ போய் சேரணும். ஒன்னோட தோஸ்துங்க, உன்னை, காலால எத்துவாங்களே தவிர, ஏறிட்டுப் பார்க்க மாட்டாங்க. அவங்களோட அலட்சியத்துல நீ அல்லாடணும். பிச்சக்காரியா கையேந்தணும். கை செத்து காலு செத்து கண்கெட்ட அனாதைக் கிழவிங்களைப் பார்க்கேமே அது மாதிரி நீ ஆயிடுவே. நீ கடைசிக் காலத்துலே கை கால வெட்டிக்கிட்டு இருக்கப்போ உன்னை ஆஸ்பத்திரியிலே சேர்க்கிறதுக்குக் கூட ஒருத்தரும் வர மாட்டாங்க. நம்ம எதிரில் வருகிற ஒவ்வொரு அனாதைக் கிழவியோ, இல்ல குஷ்டரோகியோ நமக்கு ஒரு பாடம் சொல்லிக் கொடுக்கிறாங்க. என்ன தெரியுமா? 'என்னை மாதிரி ஆயிடாதேன்னு.' புரியுதா?"

சரோசா, முதலில் சிரித்தாள்; பிறகு பேசாது இருந்தாள். அப்புறம் அவனை ஆழமாகப் பார்த்தாள். ஒவ்வொரு பார்வைக்கும் ஒரு அங்குலம் வீதமாக முகத்தைத் திருப்பிக் கொண்டாள். இளங்கோ அனுமானித்தவைகளை நினைக்க நினைக்க, அவளுக்குத் தன்னைவிட பன்றிகளும், நாய்களும் உயர்ந்தவைகளாகத் தெரிந்தன. காரணம், அவைகளுக்கு உடல் வாதைதானே தவிர மனவாதை கிடையாதே!

சரோசா எதிர்காலத்தைப் பார்க்கப் பயந்தவள் போல் முகத்தை, விரல்களால் திரையிட்டபோது, இளங்கோ அவளை ஆற்றுப் படுத்தினான் :

"கவலைப்படாதே சரோ! உனக்குன்னு ஒரு திட்டம் வைத்திருக்கேன். ஆமாம்மா... நான் வேலை பார்க்கிற கவர்ன்மெண்ட் ஆபீசிலேயே உன்னை கேஷுவல் லேபரா - அதாவது அன்றாடக் கூலியாளா - சேர்க்கப் போறேன். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமா கவர்ன்மெண்ட் ஆளா ஆயிடலாம். கழுதையை மேய்ச்சாலும் சர்க்கார் கழுதையை மேய்க்கணும் என்கிறது ஒனக்குத் தெரியுமா?"

சரோசா, அவனைத் தலை நிமிர்ந்து பார்த்தாள். கோணலாக இருந்த மேனியை நேர்கோடாக ஆக்கிக் கொண்டாள். அவளுக்குள்ளே பிரகாசமான ஒன்று, எதிர்காலமோ, அதுபோட்ட கோலமோ, கொழுந்துவிட்டு எரிந்தது. ஆனால் சிறிது நேரத்தில் அது வெந்து தணிந்து சாம்பலானது. எதையோ ஒன்றை - அழுகையோ அல்லது ஆத்திரத்தையோ - அடக்கிக்கொண்டு, அவள் இளங்கோவிடம் விரக்தியோடு சொன்னாள் :

"இப்படி ஆசை காட்டாதே சாரே. சாராயத் தொழிலில் இருந்து யாரும் கழட்டிக்க முடியாது. எங்க அண்ணாத்தை

வெட்டிடுவார். எனிக்கி தெரிஞ்சே அவரு அஞ்சு கொலை செய்திருக்கார். நானு உன் பேச்சைக் கேட்டால் நானே அவருக்கு ஆறாவது கொலை, நீ ஏழாவது...”

சரோசாவும் இளங்கோவும் ஒருவரை ஒருவர் சங்கடத்தோடும், இயலாமையோடும் பார்த்துக் கொண்டார்கள்.

## 19

சரோசா, பல்லவன் பேருந்துக்குள் ஏறியவர்களை முண்டியடித்து, அவர்களை இறக்கியபடியே, கீழே இறங்கினாள். அடி கனத்த காகிதக் கவரை அணைத்துப் பிடித்தபடியே கோவில் வளாகத்திற்குள் விழுந்தடித்து ஓடினாள். அங்கே குத்துக்காலிட்டுக் கிடக்கும் நாயினாவைக் காணவில்லை. கோவில் வளாகத்திற்கு வெளியே மீண்டும் வந்து, கண்களை அங்குமிங்குமாக அலையவிட்டாள். அந்தக் கோவில் மதில் சுவருக்கு வெளியே சாத்தி வைக்கப்பட்ட பிணங்கள்போல் கிடந்த பிச்சைக் கூட்டத்தைப் பார்த்தாள். இளங்கோ, தனக்குத் தெரிவித்த எதிர்காலக் கணிப்பை மனதில் நிறுத்தியபடியே பார்த்தாள். அவிந்து போனது போல் கிடக்கும் பறட்டைத்தலை ஆயா, கால்கள் வேப்பங்குச்சியாய் வளைய, தரைதட்டிய வயிற்றுடன் கிடக்கும் சப்பாணிப் பையன், ரோகமே வடிவாய் புழுத்துக் கிடக்கும் தொழுநோயாளி இவர்களைப் போன்றவர்களில் ஒருத்தியாக, தான் அங்கே ஒரு காலத்தில் இருக்க வேண்டியிருக்கும் என்பதை நினைத்து, நினைத்து, அவள் நினைவற்று நின்றாள். அந்தப் பகுதியில் இப்போதே இடம் பிடிக்கப்போவது போல் பார்த்துவிட்டு அது தாளமாட்டாது கண்ணை மூடிக்கொண்டாள்.

இந்தச் சிந்தனை பயத்தில் அவள் கரம் அந்தக் காகிதத் தூக்கின் நுனிக்கு வர, அதற்குள் கிடந்த கோழி பிரியாணிப் பொட்டலமும், ஆம்லேட் பார்சலும், தனியாகக் கட்டப்பட்ட தயிர் நனைத்த வெங்காயப் பச்சடியும் கீழே விழுந்தன. கையில் கனமற்றுப் போனதை உணர்ந்து கண்திறந்த சரோசா, கீழே கிடப்பதை எடுத்து பைஜாமாக்குள்ளும், சட்டை முந்தானைக்குள்ளும் திணித்தபோது, பெரிய பொட்டலம் பிதுங்கி சிறிது சோறும், ஒரு கறித் துண்டும் கீழே விழுந்தன. அவ்வளவுதான்... அந்த மதிலோரக் கூட்டம் வாய்பிளந்து அந்த இறைச்சித் துண்டையே கோரஸாகப் பார்த்தது. இதற்குள் அங்கே ஓடிவந்த சொறி நாய் அதைக் கௌவியபோது, அந்தப் பிச்சைக் கூட்டம் அந்த நாயைப் பொறாமையாகப் பார்ப்பதுபோல் பார்த்தது. சரோசாவையும் அண்ணாந்து பார்த்தது. அவள் பார்வையைப் புரிந்துகொண்ட பறட்டைத்தலை ஆயா, அவள் நயினா போன இடத்தை கைநீட்டி சுட்டிக்காட்டினாள். பஸ் நிலையம் இருக்கும் திசை.

சரோசா உடனடியாக நகரவில்லை. அந்தக் கூட்டத்தையே வெறித்துப் பார்த்தாள். வருடக்கணக்கில் பார்த்துப் பழகிய அந்தக் கூட்டம், இப்போது வேறு விதமாய் தோன்றியது. அவர்கள் பார்வையில், இவள் பார்வை இருளாகியது. சிறிது நேரத்திற்குப் பிறகு, இடது கையை ஜாக்கெட்டுக்குள் விட்டு இருபது ரூபாய் நோட்டை வெளியே கொண்டு வந்தாள். அந்தக் கூட்டத்தில் வஸ்தாவாகத் தோன்றிய ஒரு குச்சிக் கிழவனிடம் அந்த நோட்டைத் திணித்து, “அல்லாருக்கும் சில்லறை மாத்தி சரிசமமாகக் கொடு” என்றாள். சிலர் இரண்டு ரூபாய் கிடைக்கும் ஆனந்தத்தில் முகம் தூக்கினார்கள். சிலர், அந்தப் பிரக்ஞையே இல்லாமல் அப்படியே கிடந்தார்கள்.

சரோசா, பஸ் நிலையம் பக்கம் வந்தாள். அப்படி வரும்போது இளங்கோவை நினைத்துக் கொண்டாள். அந்தப் பிச்சைக் கூட்டத்தின் ஆனந்தத்துக்கு அவனே காரணம். இன்றைக்கு,

டிஸ்சார்ஜ் ஆகப் போவதால், அவனைப் பழைய இளங்கோவாக முழுமையாக ஒரு தடவை பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தில், ஆள் இல்லாத சமயமாய் அவன் அறைக்குப் போயிருந்தாள். அவனோ, பழையபடியும் கவர்மென்ட் வேலைக்கு வரும்படி, அவளிடம் பத்துத் தடவை சொல்லியிருப்பான். இவள், 'கல்லுளி மங்கி மாதிரி' அவனுக்குப் பதில் சொல்லாமல், இறுதியில் "நாய்னா பசியில துடிப்பார். துரை அண்ணன்கிட்ட காசு வாங்கணும். அவுரு தலமறைவா ஆகுமன்னாலே போயிடணும்" என்று சொன்னாள். உடனே இளங்கோ, சட்டைப் பைக்குள் இருந்த ஐம்பது ரூபாய் நோட்டை எடுத்து அவள் மடியில் போட்டான். அவள், அதை எடுத்து இளங்கோவிடம் நீட்ட, அவன் மறுக்க, இறுதியில் அவன் சட்டைப்பைக்குள் அதைப் போடப் போனாள். அவனோ, "இதைக் கடனாத்தான் தாறேன். என் ஆபீசிலே சேர்ந்து, மாசக்கடசியிலே சம்பளம் வாங்கும்போது நீ தர வேண்டாம்; நானே பிடிச்சுடறேன்" என்றான். அவன் அன்பை கவுரவப்படுத்துவதற்காக, சரோசா, அதை வாங்கிக் கொண்டாள். அவன், அவளை வேலையில் சேர்த்தால், அவனும் கொலை செய்யப்படலாம் என்று தான் கூறிய பிறகும், இளங்கோ பிடிவாதமாக இருப்பதில், அவள் புல்லரித்துப் போனாள்.

அந்தப் பஸ் நிலையத்தில், அவள் நாய்னா அங்கே நிற்பவர்களின் முழங்கால்களில் முகம் படும்படி பார்த்தார். அவர் தனது கிழிந்த காக்கிச் சட்டையின் மேலே துண்டு மாதிரி ஒரு துக்கடா கோணியைப் போர்த்தியிருந்தார். கீழே குனிந்து தலையை நிமிர்த்திப் பார்த்தார். அவர் தோளில் ஒரு பை. தட்டு, தம்ளர், ஈயப்போணி ஆகியவற்றால் துருத்திய பை. இந்த அரிய பொக்கிஷத்தை இருந்த இடத்தில் வைத்திருந்தால், அதையும் தட்டிக்கொண்டு போய்விடுவார்கள் என்ற அனுபவ பயம். எவரோ ஒருத்தர் அவரது கையில் ஒரு நாலணாவைத் திணித்தபோது, சரோசா, நாய்னாவை பாய்ந்து பிடித்தாள். "இன்னா நாய்னா,

நான் உயிரோட இருக்கபோவே பிச்சை எடுக்கிறியா? காச, அவரண்ட நீட்டு" என்றாள். அப்போதுதான், அந்தக் காசு கையில் விழுந்த உணர்வைப் பெற்ற நாய்னா, ஆள்காட்டி விரலையும், பெருவிரலையும், கொக்கின் மூக்குபோல் ஆக்கிக்கொண்டு, காசைக் கொத்தினார். பிறகு, எவரிடம் கொடுப்பது என்று தெரியாமல் அவர் புலம்பியபோது, சரோசா, அந்தக் காசை எடுத்து பிச்சை இட்டவரிடமே பிச்சைபோல் கொடுத்தாள்.

தாத்தாவும், பேத்தியும், கோவில் வளாகத்திற்கு உள்ளே வந்தார்கள். அவரோ, தான் பிச்சை எடுக்கப்போகவில்லை என்பதைப் பிரகடனப்படுத்துவதற்காக "ஒன்னை பாக்கே" என்றார். அதைப் புரிந்து கொண்ட சரோசா, அவரது தலையை செல்லமாகக் குட்டிக்கொண்டே, அவரை இருந்த இடத்தில் உட்கார வைத்தாள். பெரிய பொட்டலத்தைப் பிரித்து, கோழி பிரியாணியைக்கிளறி, ஒரு கவளத்தை அவர் வாய்க்குள் போட்டாள். இதற்குள் பல சொறி நாய்கள் அங்கே கூடிவிட்டன. இந்தப் போட்டியை தவிர்ப்பதற்காக, அந்த வளாகத்தின் உட்பக்கம் உள்ள ஒரு தேவாலயக் கட்டிடத்திற்குள் நாய்னாவை அழைத்துப் போனாள். சின்னக் கட்டிடம்... உள்ளே, ஒரு கதவு. அதற்கு வெளியே சின்ன செவ்வக வழி. இதன் முடிவில் இரும்புக் கிராதிக்கதவு. சரோசா, கிராதிக் கம்பியின் வழியே உள்ளே கைபோட்டு, தாழ்ப்பாளை நீக்கி தாத்தாவை உள்ளே நகர்த்தியபோது ஒரு ஏவல் பையன், அவள் வரவுக்கு வாயால் தாளிட்டான் :

"எக்கோ, என்ன தப்பா நினைக்காதே. இனிமேகாட்டி இந்த இடத்திலே நீங்க குந்தினால் என்னோட வேல போயிடுமுன்னு பாதர் சொல்லிட்டார். நானு வேலையிலே இருக்கது, இல்லாதது உன்னோட பொறுப்பு."

பெரிய மனிதன்போல் பேசிய அந்தப் பையனைத் துணுக்குற்றுப் பார்த்த சரோசா, நாய்னாவை கீழே இறக்கினாள்.

இரவில், அந்த இடத்தில்தான், அவரை அவள் படுக்க வைப்பாள். அஞ்சாறு வருடமாய் நடக்கிற சமாச்சாரம். இப்போ, புதுசா ஒரு பாதர் வந்திருக்காராம்; பேருதான் 'பாதர்'.

சரோசா, நாய்னாவை நாய்கள் அண்ட முடியாத ஒரு ஒதுக்குப்புறமாகக் கொண்டுபோய் பிரியாணியை ஊட்டினாள். இதற்குள், அம்மைத் தழும்பன் அந்தப் பக்கமாக வந்தான்.

"ஒன்ன எங்கெல்லாம் தேடறதாம்? தொரண்ணன் ஒன்ன அர்ஜண்டா கூப்பிடுறார். எங்கம்மே பூட்டே?"

"போய்க்கினே இரு; இதோ வாரேன்."

சரோசா, நாய்னாவை நகர்த்தி, கார்ப்பரேசன் குழாய் பக்கம் கொண்டுபோய், அவரது வாயைக் கழுவிவிட்டு, மணல் சிம்மாசனத்திலேயே அவரை உட்கார வைத்தாள். எதிரே, இரண்டு பெண்கள் போய்க் கொண்டிருந்தார்கள். தெரிந்தவர்கள்... சர்க்கார் வேலைக்காரர்கள்; ஆகையால் பத்து மணி ஆபீசுக்கு பதினோரு மணிக்குப் புறப்பட்டார்கள்.

'எப்படி அசத்தலா போகுதுங்க. தலையாட்றதிலையும், ஒரு இது... கை ரெண்டும் அப்படிச் சுத்தும், கடசல் உருளை மாதிரி. என் கை இருக்கே, துடப்பக் கட்ட... எனிக்கு என்ன குறயாம்? நானும் வேலைக்குப் போனா, அதுங்க மாதிரி, கொண்ட போட்டலாம்; ரெட்ட சடை போடுவேன். நாய்னாவுக்கு தீனி போடறதுக்கு இரும்புக் கம்பியை தூக்கவும் வாணாம், போலீசிலே பிடிபடவும் வாணாம். சர்க்கார் வேலையிலே சேர்ந்திட்டா வீடு குடுப்பாங்களாம்மே! நாய்னாவை அந்த மாதிரி வீட்லே வச்சுப் பாக்கிறதுக்கு எவ்வளவு ஆசையா கீது. ஆனால் அண்ணாத்தே...'

சரோசா, இத்தகைய சிந்தனை அழுத்தத்துடன், துரை அண்ணன் வீட்டுக்குப் பின்புறமாய் வந்து, பந்தல் வளாகத்திற்குள் நுழைந்தாள். பந்தலின் மணல் பரப்பில் ஒருவன் சுருண்டு

கிடந்தான். இன்னொருத்தன் அவன்மேல் படுத்துக் கிடந்தான். ஒருத்தன், நண்டு இருந்த தட்டை நக்கினான்; இன்னொருத்தன் காலி கிளாசையே வாய்க்குக் கொண்டு போனான். சரோசாவுக்கு இளங்கோ சொன்னது மீண்டும் நினைவுக்கு வந்தது. நண்டுத் தட்டை நக்குகிறவன் முகத்தைப் பன்றி முகமாகக் கற்பனை செய்து பார்த்தாள். வெறும் கிளாசை வாய்க்குக் கொண்டு போகிறவனை மனித முகத்தோடு கூடிய நான்குகால் நாயாக உருவகித்துப் பார்த்தாள். சிரிப்பும் வந்தது; சினமும் வந்தது; கூடவே சிறுமையும் ஏற்பட்டது.

சரோசா, செருப்புச் சத்தம் கேட்டு, வாசலைப் பார்த்தாள். ஒரு கையில் தேங்காயையும், மறு கையில் தூக்குப்பையையும் பிடித்தபடி, ஒருத்தன் உள்ளே வந்தான். பைக்குள் இரண்டு கிலோ அரிசி. சரோசா, அவனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளியபடியே திட்டினாள் :

“இந்தாப்பா கோவிந்து! இனிமேக்காட்டி இந்தப் பக்கம் இப்படி வந்தே, நானே ஒன்னை ஒதைப்பேன். சரக்கு வேணும்னா, இதோ ஒன் பேண்ட மார்வாடிகிட்ட அடகு வை. வீட்ல அரிசி, தேங்காயை ஏய்யா திருடுற? போப்போ!”

இதற்குள், துரை அண்ணன் சத்தம் கேட்டு, அவள் வீட்டுக்குள் போனாள். ஊஞ்சல் பலகையில் துரை; அவனை உரசியபடி, அவன் தர்ம பத்தினி. அவள், இவளை அதட்டினாள்:

“ஆமா, அவனை எதுக்கு இப்படி அதட்றே? குடிக்க வர்றவன் எதோடு வந்தா ஒனிக்கு என்ன?”

“எக்கோ! ஒனக்கும் எனக்கும் பேச்சு இல்லை. என்ன விஷயம் துரை அண்ணே.”

“கும்மாளம்மனுக்கு விசேஷமாம். கூட்டம் அதிகமா வரும். சரக்கு எடுத்துட்டு வந்திடு.”

"இந்தத் தொழிலே இனிமே வேண்டான்னு நினைக்கேண்ணே. மாதச் சம்பளம் கிடைக்கிற ஏதாவது ஒரு வேலையிலே சேரலாம்னு..."

துரை, அவளிடம் பேசப் போனபோது, அவன் தர்மபத்தினி கொதித்தாள். சுட்ட நண்டு போல் அவள் முகம் சுருங்கியது. இவனை - இந்த கிழிஞ்ச பைஜாமா, கீறல் கையோட பார்க்கறதுக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்குது.

"இந்தா பாரும்மா, அவர எட்டன்னு நினைக்காதே. தண்ணிக்குள்ளேயே தடம் காணுறவரு அவரு."

"எவரும்மே?"

"ஒனிக்கி, இன்னுந் தெரியலையா? அவருன்னா, அவருதான்; ஒன்னோட அண்ணாத்தே. இந்த பதினஞ்சி நாளா, இந்த சரோசா, எங்கே எங்கே போறாள், யாரைப் பார்க்காள்னு அவருக்கு அத்துபடி."

"அவருக்குத் தெரியுமுன்னு ஒனக்கு எப்படிம்மே தெரியும்?"

தர்மபத்தினி, குறுஞ்சிரிப்போடு சிரித்தாள். துரைக்கு, சரோசா, யாரை எல்லாமோ பார்த்தாள் என்பதைவிட, அண்ணன், அந்த சமாச்சாரங்களை தன்னிடம் சொல்லாமல், தனது தர்மபத்தினியிடம் சொன்னதில், ஒரு இஸ்கு-தொஸ்கு இருப்பதை உணர்ந்தான். லேசாய் தெரிந்த சங்கதிதான். ஆனால், அப்படி இருக்காது என்று ஒரு அற்ப ஆசை, இதுவரை இருந்தது. இப்பப் பூட்டுது.

துரையின் உடம்பு படபடத்தது. ஏதோ ஒன்று தலைக்குள் துவாரம் போட்டு, கனமாகக் கீழிறங்கி, தொண்டைக்குள் சிக்கி நெஞ்சுக்குள் விழுவது போல் இருந்தது. ஏதோ இன்னொன்று பிடரிக்குள்ளே இருந்து பிராண்டுவது போல் இருந்தது. மனைவியையே வைத்த கண் வைத்தபடி பார்த்தான். அவள் உதடுகள் விரிய விரிய, இவன் உதடுகள் குவிந்தன. அவள் கண்கள்

மலர மலர, இவன் கண்கள் சுருங்கின. அந்த வீடே ஆதாரமற்று அவளோடு சேர்ந்து அதல பாதாளத்தில் விழுவது போன்ற அல்லாடல்...

இதைப் புரியாமல், சரோசா, வேண்டா வெறுப்பாய் நின்றாள். ஸ்பெஷல் சாராயம், பிடிச் சாம்பலாய் போனதால், அண்ணாத்தை கோபப்பட்டதாக தோஸ்துகள் சொன்னார்கள். ஆகையால் காச்சல், மீண்டும் பக்குவப்பட்ட அதாவது பழிபாவத்தைப் பற்றிக் கவலைப்படாத கரங்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அண்ணாத்தையும் தனக்கு எதிராக 'தாம் தூம்' என்று குதித்த அசிஸ்டெண்ட் போலீஸ் கமிஷனரை மாற்றி விட்டதாகவும் கேள்வி. இந்தச் சமயத்தில் சரக்கு எடுக்கப் போய், அண்ணாத்தைக்கு, தன் மீது இருக்கக்கூடிய சந்தேகத்தைப் போக்க வேண்டும். வேறு வழியில்லை.

"சரி, குயிக்கா போயிட்டு குயிக்கா வாறேண்ணே."

சரோசா, தர்மபத்தினியை நோட்டம் போட்டபடியே, வெளியே வந்தாள். பந்தலுக்குள் கோவிந்து, இடுப்பில் வெறும் டவுசரோடும், கையில் கிளாசோடும் கிடந்தான். அவன் காலில் சாய்ந்து கிடந்த தூக்குப் பையை எடுத்துக் கொண்டு சரோசா புறப்பட்டாள்.

## 20

குறுக்கு வழியாக நடந்து, சரோசா பூக்கார ருக்குமணியின் குடிசைக்குள் வந்தாள். ஓட்டைக் கதவுதான்; கரடு, முரடு தரைதான்; தில்லு முல்லு கூரைதான்; ஒழுகல் காவாதான். ஆனாலும், அந்தக் குடிசையில் ஒரு சுத்தம், ஒரு பூவாடை.

சரோசா நீட்டிய தூக்குப் பையை அதன் தாத்பரியத்துடன் வாங்கிக் கொண்ட ருக்குமணி கொதித்தாள் :

"நீயே அதுக்கு விஷச்சாராயம் குடிச்சுக் குடுமே; பாவி, கஸ்மாலம், அழிஞ்சு போவான்."

"சரி எனக்கு நேரமாயிட்டது, சரக்கு எடுக்கப் போறேன்."

"இளங்கோ சொல்லச் சொன்னாருமே... சர்க்கார் வேலையிலே சேர்ந்தா ஒனிக்கும் நல்லதாம், ஒன் நயினாவுக்கும் நல்லதாம்."

சரோசா, ருக்குமணியிடம் நடந்தவற்றை விவரமாக எடுத்துரைக்கப் போனபோது ஒருவன் ஓடிவந்தான். கோவிந்து என்று திட்டப்போன ருக்குமணி. முனுசாமியைப் பார்த்துவிட்டு கேள்விக்குறியுடன் நின்றாள். அவன் பாதி கிறக்கத்தோடு சொன்னான் :

"சரோசா! நீ வரப்போ நான் குடிக்கப்போனேனா... துரை சம்சாரம் டெலிபோன்லே, உன் பேரைச் சொல்றத கேட்டுட்டு ஒட்டுக் கேட்டேன். யார்கிட்டேயோ அவள் பேசிட்டு, அப்பாலே துரைகிட்டே ஒப்பிச்சாள். எவனோ அண்ணாத்தையோ, கிண்ணாத்தையோ, நீ வேலையில சேர்ந்தா ஆபத்துன்னு சொன்னாராம். அதனால நீ இன்னிக்கி சரக்கு எடுத்து வறப்போ ஒன்னை போலீஸ் மடக்குமாம். ஏற்பாடு செய்திட்டாராம். அவள், துரைகிட்டே சொன்னதும், அவன், அவள, போட்டுப் போட்டு உதைச்சான். வேடிக்கை பார்க்க நினைச்ச மனசை அடக்கிட்டு, உன்னே பாலோ பண்ணி வந்திட்டேன். ஏன்னா, நீ என்னோட தோஸ்து இளங்கோவுக்கு தோஸ்தாச்சே... சொம்மா இருக்க முடியுமா?"

முயல்போலப் பாயப்போன சரோசா, ஆமை போல் நின்றாள். எதிர்பாராத விபத்து ஒன்றில் சிக்கி ஏதோ ஒரு வாகனத்தின் சக்கரம் தலையில் ஏறியது போன்ற தடுமாற்றம்.

அது தலைக்குள்ளே சுழலுவது போன்ற அதிர்வு. அந்தத் தலையும், கழுத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு பம்பரமாய் சுற்றுவது போன்ற அவள் உணர்வுச் சுற்றல். அரைக்கண் பார்வையோடு, அப்படியே நின்றாள். முனுசாமி அவளைப் பரிதாபமாகப் பார்த்தபடியே, அதே சமயம் ஒரு சாதனையை நிகழ்த்திக் காட்டிய பெருமிதத்தில் 'தண்ணிப்பட்டபாடாய்' நடையைக் கட்டினான்.

அம்மாவின் ஆணைப்படி பலசரக்குக் கடையிலிருந்து, கால் கிலோ தக்காளியை மறைக்கும்படி கருவேப்பிலை 'கொசுறை' கவரில் போட்டுக் கொண்டு வந்த ஆறுமுகப்பயலை, ருக்குமணி, அவன் முதுகைப் பிடித்து வளைத்து, காரணமில்லாமலேயே இரண்டு போடு போட்டாள். சரோசாவின் முன்னால் வந்து அவள் முகத்தையே பார்த்தாள். அவள் தோளைப் பிடித்து உலுக்கினாள். அப்படியும் சரோசாவின் கண்கள் அங்குமிங்கும் சுழலாமல் நின்ற இடத்திலேயே நிலைத்திருப்பதைப் பார்த்து, அவள் தலையைப் பிடித்துக் குலுக்கிக்கொண்டே கேட்டாள்:

"ஒன்ன, கடாவ வளக்கது மாதிரிதான் வளர்த்துருக்காங்கமே. ஒனிக்கி நாய்க்கி தீனி போடறதுமாதிரிதான் போட்டுருக்காங்கமே. நாய்க்கி வெறி வந்தா அத வளர்க்கிறவன் மருந்துபோட்டு காப்பாத்தறான். ஆனாங்காட்டி, கையாளுக்குப் புத்தி வந்தா, அதோட எசமான் கொலை கூட செய்வான். இப்பவாவது ஒனக்கு புரியுதாமே? ஏம்மே பேச மாட்டேங்குற?"

பூக்கார ருக்குமணி சொல்லச் சொல்ல, சரோசா அகலமாய் கிடந்த கண்களை ஆழப்படுத்தி, அப்படியே நின்றாள். ருக்குமணி, தக்காளிகளை எடுத்து தன்மீது எறிந்து கொண்டிருந்த மகனைப் பற்றி பிரக்ஞை இல்லாமலே, சரோசாவின் பிரச்சினைக்கு விடை கண்டவள் போல் அவள் தோளில் கை போட்டபடி, உபதேசித்தாள்.

"விட்டுத்தள்ளு கஸ்மாலத்த. இதுவும் நல்லதுக்குத்தான். ஒன்கிட்டே விசாரிக்காமலே குழி பறித்தான் பாரு கஸ்மாலம்

அண்ணாத்தே... அவன் வாடையே வாணாம். பேசாம இளங்கோ சாரு சொல்ற வேலைல சேர்ந்திடு. இன்னாமே! நானு பேசிக்கினே போறேன், நீ சொம்மாவே நின்னா இன்னா அர்த்தம்?"

சரோசா, இன்னும் அசைந்து கொடுக்காமல் இருப்பதைப் பார்த்த ருக்குமணிக்கு லேசாகப் பயம் பிடித்தது. இதற்குள் ஆறுமுகப்பயல் அம்மாமேல் குறிவைத்த ஒரு அழுகிய தக்காளி, சரோசாவின் நடுமுக்கில் பட்டு இரண்டு கண்களிலும் சிதறியதால் அவள் சுயவுணர்வுக்கு வந்தாள். ஆனாலும், தலையில் கைவைத்தபடியே, அந்த வீட்டின் இற்றுப்போன கதவில் அற்றுப்போனவள் போல சாய்ந்தாள். ருக்குமணி, அவளை ஆதரவாய் பிடித்து நார்க்கட்டிலில் உட்கார வைத்தாள். பிறகு அவள் சோகம் தனக்கும் தொத்த, கேட்பாரற்ற குரலில் பேசினாள் :

"அல்லாம் நல்லதுக்குதாம்மே. நடந்தத கெட்டகனவா நினைச்சுடு. இளங்கோ சார் நாளிக்கே வேலையில சேருறதா மல்லி சொல்லிச்சு. நீயும் சேர்ந்திடு. இல்லாட்டி ஆறின சோறு பழஞ்சோறுதான். ஏண்டா, பொறம்போக்கு! எல்லா தக்காளியையும், அக்குவேறு ஆணிவேறா பண்ணிட்டியே. நானு கொயம்புக்கு இன்னடா பண்ணுவேன்? ஏம்மே சரோசா, ஏதாவது பேசி என் வயித்திலே பாலு வாருமே."

ருக்குமணி, மகன் குதறிப்போட்ட தக்காளி சதைகளை பொறுக்கிக் கொண்டே, சரோசாவைப் பார்த்தாள். அவள் பிரச்சினை மட்டும் குறுக்கே வரவில்லையானால், இந்நேரம், அருமை மகனை தக்காளி மாதிரியே பிதுக்கியிருப்பாள். அதைப் புரிந்து கொண்டது போல் அந்தப் பயலும் அம்மாவுக்குப் பயந்து சரோசாவின் மடியில்போய் உட்கார்ந்து கொண்டான். ஏதோ ஒரு பொருள் தன் மடியில் உட்கார்ந்திருக்கிறது என்ற உணர்வு மட்டுமே உந்த, சரோசா ருக்குமணியைப் பார்த்தாள். பிறகு விரக்தியோடு பதிலளித்தாள் :

"நீ நினைக்கது மாதிரி இளங்கோ சொல்ற வேலையில சேர்ந்திட்டா, அண்ணாத்தே என்ன விட்டுவைக்க மாட்டாரு ருக்கு."

"இப்ப மட்டும் விட்டுவைக்கானா? அதென்ன கூத்து? எவனோ பொறுக்கிக்கி நீ ஏன் பயப்படறே? கண்றாவியா இருக்கு."

சரோசா, நார்க்கட்டிலில் சாய்ந்து சுவரில் தலையை போட்டுக் கொண்டு, அந்தத் தலையை அங்குமிங்குமாய் புரட்டிக் கொண்டு, ருக்குமணிக்குக் கதை சொல்வது போல் சொன்னாள்:

"அண்ணாத்தைய பத்தி சரியா தெரிஞ்சா இப்படிப் பேசமாட்டே ருக்கு. அவரோட அஞ்சு வருஷமா இருக்கிற பழக்கத்த அறுத்துக்கினு போறது, என்னையே நான் அறுத்துக்கிறதுமாதிரி. போன மாசம் துரையண்ணே வீட்டுல எங்க கோஷ்டியில ஒருத்தன் தண்ணியில மிதந்தான். அப்போ பார்த்து அண்ணாத்த வந்தாரு. அவருகிட்டயே 'நாளைக்கி கோர்ட்டுல ஒன் பேரையும் சொல்லப்போறேன் அண்ணாத்தேன்னு' சொம்மா தமாஷுக்குச் சொன்னான். அண்ணாத்தையும் சிரிச்சாரு. அண்ணாத்தே ஆள் வச்சி ஒருத்தர வெட்டின கோஷ்டியில அவனும் ஒருத்தன். மறுநாளு பார்த்தா... அந்த தோஸ்து கடலுல மிதக்கான். பொணமா மிதந்தான். அண்ணாத்தே எதுவும் தெரியாதது போல அந்தப் பொணத்த ஜோரா அடக்கம் பண்ணினாரு. 'பாவம் நல்லவன்'னு வேற துக்கமாச் சொன்னாரு. அப்பேர்ப்பட்டவரு அண்ணாத்தே."

ருக்குமணியே பயந்துவிட்டாள். சரோசாவின் 'அண்ணாத்தே' எங்கும் வியாபித்திருப்பது போல் ஒரு பிரமை. அந்தக் குடிசைக் குள்ளும், அவர் வந்து நிற்பது போல் ஒரு அனுமானம். சரோசாவிற்கு சப்போர்ட் செய்ததற்காக தன்னையும் பட்டாக்கத்தியோடு குறிபார்ப்பது போன்ற ஒரு அச்சம். சிறிது நேரம் தடுமாறினாள். பிறகு குடிகாரக் கோவிந்துடன் குடித்தனம் செய்வதை விட, அப்படி வெட்டுப்பட்டாவது சாகலாம் என்று

தெளிந்தாள். எல்லாவற்றையும்விட, இயல்பான மனிதாபிமான வேகம். அண்ணாத்தையை எதிர்கொள்ள வேண்டும் என்ற ஒரு அசட்டுத் துணிச்சல். இப்போது, தானே சரோசா என்பது மாதிரி ருக்குமணி பேசினாள் :

"வல்லவனுக்கு வல்லவன், வையகத்துல உண்டுமே. ஒன் அண்ணாத்தே சாராயக் கொம்பன்னா, பாமாவோட அப்பா ரமணன் போலீஸ் கொம்பன். நீ வேலைக்குப் போகாமலேயே அண்ணாத்தே கூட இருந்தாலும், அவன் ஒன்ன ஏதாவது செய்யத்தான் போறான். இளங்கோவோட கவர்ன்மெண்ட் வேலையில சேர்ந்திட்டா, ஒனிக்கி அதுவே ஒரு பாதுகாப்பு. நம்ம கார்ப்பரேஷன் எச்சில் லாரி ஆளுங்க கூட ரோட்ல வண்டிய குறுக்கா வெச்சிட்டு பெரிய பெரிய கார்ல வர்றவங்களக் கூட எப்படி முறைக்காங்க! இதுக்கப் பேருதான் சர்க்கார் வேல. ஒண்ணாத்த பருப்பு ஒண்ணும் வேகாது."

"நீ நெனக்கிது மாதிரி எனக்குக் கொஞ்சம் பாதுகாப்புத்தான். ஆனால் அந்தப் படுபாவி இதுக்குக் காரணம் இளங்கோன்னு, பாவம் அந்த மனுஷன எதுவும் செய்திடப்பிடாதே. நானு பாவி, அவர ஆளுவெச்சி அடிச்ச காயமே இன்னும் முழுசா ஆறலே; அதுக்குள்ளே அண்ணாத்தே..."

"அண்ணாத்தே... எவன்மே ஒனக்கு அண்ணாத்தே? தென்னமரம் காத்துல ஆடுறப்போ, அதுல இருக்கிற ஓணான், மரத்த தான்தான் ஆட்டுறதா நினைச்சி தலைய ஆட்டுமாம். அப்படிப்பட்ட ஓணான் பய உங்கண்ணாத்த. அவன், எங்க இளங்கோவ ஒண்ணும் ஆட்ட முடியாது. அவருக்குப் பக்கபலமாக அந்த கஸ்மாலம் சார் ரமணன் இருக்காரு. அவருக்கு அல்லா போலீசுமே சல்யூட் அடிக்காங்கோ. பாமாவோட அங்கிளோ, கிங்கிளோ பெரிய போலீஸ்காரரு. ஒனிக்கு வேண்டாமுன்னா சொல்லு, நானு சேர்ந்திடறேன். பூக் கட்டிக் கட்டி கைதான் கட்டியாப் பூட்டு."

"ஒனக்கென்ன சொல்லிட்டே. கட்டிக்கிட்டுப் போக நல்ல புடவகூட இல்ல. எனிக்கி இருந்த ஒரு புடவையும் இப்போ நாயினாவுக்கு பெட்ஷீட்டா ஆயிட்டு! சீவிச் சிங்காரிக்க ஒரு சீப்பு கூட இல்ல."

"கவலைய வுடுமே. சீவுறதுக்கு ஒனக்கு முடியிருக்கு. சிங்காரிக்க முகமிருக்கு. நானு என்னோட புடவயத் தாரேன். இரண்டு மொயம் பூவும் தாரேன். நாளிக்கி வந்து இங்க டிரெஸ் பண்ணிக்கிட்டுப்போ. நானும் பால்ராஜ் பேன்சி கடையில ஒரு கில்ட்டு செயினு - பத்துரூவா தானாம் - வாங்கி வச்சிட்டேன். நல்ல காரியத்த தள்ளப்புடாதுமே."

சரோசா, என்ன நினைத்தாளோ, ருக்குமணியின் தோளில் சாய்ந்து குலுங்கினாள். காலரட, கால் விரல்கள் தனித்தனியாய் ஆட, முதுகு மேலும் கீழுமாய் நகர, குலுங்கிக் குலுங்கி அழுதாள். பிறகு அவள் கையிரண்டையும் தனது தோளில் போட்டுக் கொண்டு, ருக்குமணியின் முகத்தில் மாறிமாறி முத்தமிட்டபடியே "எங்கம்மாவ பார்த்துட்டேன் எங்கம்மாவப் பார்த்துட்டேன்" என்று தன்பாட்டுக்குப் புலம்பினாள். ருக்குமணி, அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். குழந்தையை தாலாட்டுவது போல் அவளை மார்போடு சேர்த்து ஆட்டினாள். அவள் முகத்தைத் துடைத்து தனது கைகளை ஈரமாக்கிக் கொண்டாள். இந்த இடைவேளையில் சரோசா சுதாரித்துக் கொண்டாள். ருக்குமணியின் தோளை ஆதரவாகப் பிடித்தபடியே கம்பீரமாக எழுந்தாள். கூடவே எழுந்த ருக்குமணி சிறிது பதட்டத்தோடு வினவினாள் :

"சரக்கு எடுக்கவா போறே?"

"இனிமே எடுக்கப் போனா, என்ன நானே ஜோட்டால் அடிக்க முகத்தக் கொடுத்ததா அர்த்தம்."

"எனிக்கி ஒரு யோசனை தோணுது. பேசாம இன்னிக்கி நைட்டுல என் வீட்டுலேயே படுத்துக்கோ. நீ படுத்தாலும்

படுக்காட்டியும் கோவிந்த வெளியில போட்டுத்தான் கதவ சாத்துவேன். இன்னா சொல்றே?"

"கவலைப்படாதே ருக்கு! எனிக்கி சமாளிக்கத் தெரியும். காத்தால வர்றேன்."

"கண்டிப்பா வர்றே. இல்லாட்டி நீ ஆரோ... நான் ஆரோ."

"அபசகுனமாப் பேசாதே. நானு ஒரு சொல்லுல நிக்கற பொம்மனாட்டி."

## 21

சரோசா, போக மனமின்றி, போவது போல் போனாள். இப்போது குறுக்கு வழியில் நடக்காமல் பஸ்கள் போகும் சாலை வழியாக நடந்தாள். தனிமையில் நடக்க நடக்க, அவளுக்கு கால்கள் துண்டித்து தரையில் விழுவது போல் இருந்தது. மலைபோல நம்புன அண்ணாத்தே இப்படிச் செய்திட்டாரே. நேர்ல கூப்பிட்டு கன்னத்துலகூட இரண்டு போட்டு புத்திமதி சொல்லியிருக்கலாம். போலீஸ்ல அநியாயமாய் மாட்ட வைக்கிறதுக்குத் திட்டம் போட்டுருக்காரே... இன்னா மனுஷன்? அண்ணாத்தே காலுல போய் விழலாமா, வேணாமா? இவரு இன்னா அண்ணாத்தே? நானு நினைக்கிற மாதிரி அவரு நினைச்சிருந்தா இப்படிச் செய்வாரா? அண்ணாத்தே என்கிறது - நாய், நரி, பண்ணி என்கிறது மாதிரி ஒரு பேரு.

சரோசா, வேகவேகமாய் நடந்தாள். அவன் வாழும் இடத்திற்கே சென்று அங்கு இரண்டில் ஒன்றைப் பார்த்துவிட வேண்டும் என்ற வேகம். அந்தச் சமயம் பார்த்து 'அண்ணன் காட்டிய வழியம்மா' என்ற பாட்டு; அவள் அழுது விட்டாள்.

துக்கம் தாங்காது சிற்சில இடங்களில் நின்று நின்று அழுகை சுமையை இறக்கி வைத்தாள். "நாயினா, நாயினா, நானு வெட்டுப்பட்டுப் போயிட்டா ஒனக்கி யாரு இருக்கா நாயினா?"

சரோசா, துரையின் வீட்டுக்குப் போகத்தான் நினைத்தாள். அவன் மனைவியின் தலைமுடியைப் பிடித்து, தன் பங்குங்கும் இரண்டு சாத்துச் சாத்த வேண்டும் என்று நினைத்தாள். துரையைப் பார்த்து "பொட்டப் பையா" என்று கேட்க வேண்டும் என்று நடந்தாள். ஆனாலும், துரை அண்ணன் வீட்டுக்குப் போக வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அவன், இடுப்பு லுங்கி அவிழ்ந்து கிடக்க, டவுசர் பட்டை வெளியே தெரிவது தெரியாமல் கடற்கரையோர மேடு ஒன்றில் இரண்டு கைகளையும், பின்னால் ஊன்றியபடி, முதுகை வளைத்துப் போட்டு உட்கார்ந்திருந்தான். அவன் முன்னாலும், பின்னாலும் சிகரெட் துண்டுகள் கருப்பு முகமும், வெள்ளை உடலுமாகிக் கிடந்தன. ஆள்காட்டி விரலில் உள்ள சிகரெட் சுடுவது தெரியமலே அவன் அல்லாடினான்.

தனக்குத்தானே, பேசிக்கொண்டான் :

"இனிமேல் யாருக்காக வாழ வேண்டும்? எதுக்காக வாழ வேண்டும்? எனக்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும். பெட்டிக்கடை வெச்சி பிழைப்பு நடந்தப்போ இவள் பெட்டிப் பாம்பாத்தான் கிடந்தாள். ஒரு தடவ, நெருங்கின தோஸ்து ஒருத்தன் வீட்டுக்கு வந்திருந்தான். வெளியில் புயல் மழை. நாலு வருஷத்துக்கு முன்னாடி நல்லா ஞாபகம் இருக்கு. அவனுக்கு என்னோட லுங்கிய கொடுத்தேன். மறுநாளு வீட்டுக்காரி 'எப்படிய்யா, அவன் கட்டின லுங்கியை நான் துவைக்கிறது? ஒன் லுங்கிய அந்த முடிச்சுமாறி கட்டுவதப் பார்க்கும் போது எனக்குக் கூச்சமா இருந்தது. பேசாம வாண்டரியில போடு.' இப்படிச் சொன்ன என்னோட பத்தினியை அண்ணாத்த மயக்கிட்டானே. இஸ்திரிக்குப் போடுன்னு சொன்னவள் என் நெஞ்ச இஸ்திரி

போட்டுட்டாளே. யாருக்கிட்ட சொல்லுவேன்? பெண்டாட்டி அடங்காப்பிடாரின்னு சொல்லலாம். வாயாடின்னு சொல்லலாம். அடுத்தவன்கிட்ட போகிறவள்னு எப்படிச் சொல்லுறது? நான் படுத்த கட்டிலிலேயே இன்னொருத்தன் படுக்கான்னு எப்படிச் சொல்லுறது? 'அவரு என்கிட்டத்தான் சொல்லுவாரு... ஒன்கிட்ட சொல்லணும்னு அவசியமில்லே. புரிஞ்சா புரிஞ்சுக்கோ, புரியாட்டி இருந்துக்கோ'ன்னு ரப்பேரி முண்ட எப்படிச் சொல்லிட்டா! அண்ணாத்த வீட்ல டெலிபோன் வச்சப்பவே தெரியும், அது அவன், அவளுக்குப் போட்ட தாலிண்ணு. நானு இருக்கப்போகூட, அந்த முண்ட முகத்த டெலிபோனுல மறைச்சிட்டு ரகசியமா பேசினது இப்போதுதான் புரியுது. கலக்கலில சிக்கி கலங்கிட்டேனே. அண்ணாத்தேகிட்ட சாராயத்துக்கு உதவிக்குப் போனா, அவன் என்னோட சம்சாரத்துக்கே உதவியா வந்துட்டானே. அய்யோ, அய்யய்யோ."

முன்பெல்லாம் இப்படிப்பட்ட சந்தேகம் வரும்போது, அதை சாராயத்தால் கழுவிய துரைக்கு, இப்போது மனைவி வெளிப்படையாகவே சொல்லி விட்டது உள்ளத்தை வேர்க்க வைத்தது. வீடுகூட அவள் பேரில்தான் இருக்கு. இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைக்கப் போன துரை, கருகிய சிகரெட் கையில் இருப்பதைப் பார்த்துவிட்டு, அதை விரல் நுனியிலேயே கசக்கினான்.

சரோசா, அவன் கையை எட்டிப் பிடித்தாள்.

"ஒன்ன எப்படியோ நினைச்சேன். கட்சில என் கையில விலங்கு போட்டுப் பார்க்கிறதுக்கு ஆசைப்பட்டுட்டியே பாவி, படுபாவி."

துரை, அவளை அரைக்கண் பார்வை போட்டுப் பார்த்தான். பிறகு அவள் கைகளில் முகத்தைப்போட்டு ஏங்கி ஏங்கி அழுதான். அழுத கண்களை அவள் புறங்கையாலேயே துடைத்துக் கொண்டு அவளைப் பார்க்காமலேயே பேசினான் :

"எய்தவன் எங்கேயோ, நானு அம்புவட இல்லமே. அந்த அடங்காப்பிடாரி காட்டேரி நாய்தான், ஒன் அண்ணாத்தேயோட அம்பு. நானுயாரு, எனக்கே புரியல. இந்தாமே சரோ, நீ கேக்காக்காட்டியும் நானே சொல்லியிருப்பேன். ஒன்னத்தாம்மே, இங்கிருந்து தப்பிச்சுப் போம்மே. இல்லாட்டி ஒன் உசிரு உனக்கில்லே. என் நிலைமை, கரையான் புத்தெடுக்க கருநாகம் குடியிருக்கிற கதையாப் போச்சும்மே. என் வீட்டிலேயே எனக்கு ஒரு எதிரிய உண்டுபண்ணி, அவளையும் அபேஸ் பண்ணிட்டாம்மே. இந்த அண்ணாத்தே உருப்படுவானா?"

துரை மீண்டும் அழுதான். அவளை ஆறுதல் படுத்துவதற்குப் பதிலாக ஆறுதல் தேடுவது போல் ஏக்கமாகப் பார்த்தான். சரோசாவிற்கு அவனைப் பார்க்கப் பார்க்க ஒரு பூதம் தனியாய், பூதாகாரமாய் அண்ணாத்தை ரூபத்தில் பயங்கரப் பற்களோடு, அந்தப் பற்களே ஆயுதங்களாகத் தோன்றும்படி வெடிச் சிரிப்பாய் சிரிப்பது போல் தோன்றியது. அவளுள்ளும் ஒரு உறுதி பிறந்தது.

## 22

அந்த மருத்துவமனைக்கு எத்தனை தடவை சென்றாளோ, அத்தனை தடவையும் அவள் கேளாமலேயே, இளங்கோ தெரிவித்த அந்த அலுவலகத்தின் சாமுத்ரிகா லட்சணங்கள் சரோசா மனத்தில் அழமாகப் பதிந்துவிட்டன. ஆகையால், அந்த அலுவலகத்தை கேட்பார் பேச்சைக் கேட்டு லெப்டில் திரும்பி ரைட்டிலோ, ரைட்டில் திரும்பி லெப்டிலோ போகாமல் சொந்த முயற்சியிலேயே கண்டு பிடித்துவிட்டாள்.

காலையிலேயே பூக்காரத் தோழியின் வீட்டுக்குப் போனவள், "அந்த கஸ்மாலம் மாருவாடிக்கிட்ட வைக்கிறதுக்கு முன்னாடி நீ கட்டிக்கோ" என்று சொல்லி ருக்குமணி கொடுத்த புடவையையும், அதற்கேற்ற ஜாக்கெட்டையும் வாங்கிக்கொண்டாள். இதர இரண்டு, மூன்று சேலைகள் கொடியில் தொங்கியபோது, இந்தப் புடவை மட்டும் கரப்பான் பூச்சி வில்லைகள் போடப்பட்ட டிரங்க் பெட்டியிலிருந்து வெளிப்பட்டது. எலுமிச்சை நிறம். பைஜாமாவை லேசாகச் சுருட்டி, அதையே பாவாடையாக அனுமானித்துக் கொண்டு, அதற்குமேல் புடவையைக் கட்டலாமா என்று சரோஜா சிறிது யோசித்தாள். பிறகு புடவையை சுற்றிக் கொண்டு பைஜாமாவைச் சுருட்டி ஒரு மூலையில் போட்டாள். ருக்குமணி அவள் நெற்றியில் பிளாஸ்டர் குங்குமத்தை ஒட்டினாள். சினிமாக்காரி மாதிரி ஜொலித்த கில்டு செயினை பூட்டிவிட்டாள். இந்த அன்பைப் பொறுக்க முடியாமல், சரோசா கண்ணீர் விட்டபோது "பவுடர் நனைஞ்சு திட்டுத்திட்டா ஆயிட்டுப்பாரு. பவுடர் கொஞ்சமாத்தான்கீது. அதனால இதுக்குமேல் அழாதே" என்றாள் ருக்கு. "ஏம்மே கலங்குறே? நானிருக்கேன், இளங்கோ இருக்கார். ஒன் அண்ணாத்தே இன்னாப் பண்ணுறான் பார்க்கலாம். கண்ணாடி முன்னால போமே. எப்படி ஜொராக்கீறே தெரியுமா?" என்று ஆற்றுப் படுத்தினாள்.

சரோசாவை, ருக்குமணி பஸ் நிலையம்வரை வந்து வழியனுப்பி வைத்தாள். அந்தப் பல்லவன், இளங்கோ குறிப்பிட்ட அலுவலகத்திற்கு முன்னால் பஸ் நிலையத்தில் இருந்து அனைவரையும் ஓட்டப்பந்தயத்தில் பார்க்க விரும்பியது போல், இருபதடி தள்ளி நின்றது. சரோசா இறங்கினாள்.

அந்த இலுவலக முகப்பில் இரண்டு பிரிவுகளான இரும்பு கேட்டுகளில் ஒன்று மூடியிருந்தது. இன்னொன்று அரைக்கண் பார்வை போட்டது. அந்த ஒருகண் வழியாக உள்ளே போனாள். அங்குமிங்குமாய் பார்த்தாள். வலதுபக்கம் ஒரு தூக்கலான

இடத்தில் சின்ன மணிக்கூண்டு மாதிரியான கட்டிடத்தில் காக்கிச்சட்டைக்காரர்கள் நின்றும், உட்கார்ந்தும், படுத்தும் கிடந்தார்கள். துப்பாக்கிகளும் அப்படியே. உள்ளே பிரம்மாண்டமான கட்டிடம். சரோசாவுக்கு மகிழ்ச்சி. ஏழை பாழைகளை கூண்டில் அடைக்கப் பார்க்கிற போலீஸை இப்போது கூண்டுக்குள்ளேயே பார்ப்பதில் ஒரு அசுரத் திருப்தி. அவர்கள் ஏதாவது தன்னிடத்தில் கேட்பார்கள் என்றபடி நின்றாள். தீவிரவாதிகளின் தாக்குதலை முறியடிப்பதற்காக ஏ.கே. 47 எதுவுமில்லாமல் உள்ளே கிடந்த அந்த போலீஸ்காரர்கள், அவளை கண்டுக்கவில்லை. அந்த அலுவலக செக்யூரிட்டி ஆபீசர் ஒரு சிவிலியன். இவர்களுக்கும், அவருக்கும் ஒரு உள்நாட்டு யுத்தம். யாராவது போகட்டும். அந்த குள்ளப்பையன் செக்யூரிட்டி மாட்டிக்கட்டும். இப்படிப்பட்ட ஒரு நல்லெண்ணம்.

சரோசா, அந்த பிரம்மாண்டமான கட்டிடத்தை நோக்கி நடைவேகத்தை அதிகப்படுத்தினாள். மணி பதினொன்றுக்கு மேலாகிவிட்டது. பத்துமணிக்கு முன்பே வரத்தான் நினைத்தாள். ஆனால், ருக்குமணிதான், ராவுகாலம், எமகண்டம் என்று இழுத்தடித்து விட்டாள். சரோசா, வேகவேகமாக அந்த அலுவலகப் உள்வாசலை நோக்கி கால்வீசி, கைநீட்டி நடந்தபோது, அவள் முன்னால் ஒரு உருவம் வந்து நின்றது. வாட்டசாட்டமான நாற்பது. உச்சி வழுக்கை; காக்கி யூனிபார்ம், தோளில் முளைத்த வட்டவட்டமான சங்கிலிச்சுருள் மாதிரியான துணிக்கயிறு அவரது பைக்குள் போய் முடிந்தது. அவளைப் பார்த்து பயபக்தியோடு கேட்டார் :

"மேடம், நீங்க யாரைப் பார்கணும்? நான் ஏதாவது உங்களுக்கு உதவி செய்யலாமா? சொல்லுங்க மேடம்."

சரோசாவுக்கு அந்த வார்த்தையின் அர்த்தம் புரியவில்லை. ஆனாலும், அந்த மேடத்திற்கு உரிய கம்பீரத்தோடு அவரைப்

பார்த்தாள். இப்படியொரு ஆம்பளை இதுநாள் வரைக்கும் இப்படியொரு மரியாதை கொடுத்ததில்லை. 'யோவ், அண்ணாத்தே... இரு இரு...' சரோசா காக்கியை நெருங்கி முழங்கையை நீட்டினாள். அவர் மோவாய் இடிபடும் இடைவெளியில் நின்றுகொண்டு, கம்பீரத் தன்னம்பிக்கையோடு. அதேசமயம் அப்பாவித்தனமாக விவரம் சொன்னாள் :

"எனிக்கி இந்த ஆபீசுல வேல போடுறாங்க சாரே, கேசுவலையோ, கொசுவலையோ, ஏதாவதொரு வேல. இளங்கோ சார் வரச் சொன்னார்."

அவள் பேச்சைக் கேட்டதும், மலர்ந்த முகத்தை உலறவைத்த காக்கிக்காரர் அருகே, இரண்டு மூன்று பெண்கள் உள்ளே வந்தார்கள். ஒருத்தி கால்முட்டிகளைக் காட்டிக்கொண்டிருக்கும் ஸ்கர்ட்காரி. இந்த லட்சணத்தில் அதுவும் இடையிடையே கத்தரிக்கப்பட்டு இருந்து. மற்றொருத்தி கையில்லாத ஜாக்கெட் காரி. பொம்பளை உடம்பு, ஆம்பளை முகம். இன்னொருத்தி ஆம்பளை உடம்பு, பொம்பளை முகம். ஆனாலும் அவர்கள் ஹாண்ட்பாக்குகளை ஆட்டியவிதத்தில், காக்கிக்காரர் அவர்களிடம் பணிவன்பாக நின்றார். இதற்குள் சரோசா தன்பாட்டுக்கு நடந்துகொண்டிருந்தாள். அப்போது ஒரு விசில் சத்தம். முதலில் விட்டுவிட்டும், அப்புறம் விடாமலும் ஒலித்தது. அவள் யாருக்கோ, எதுக்கோ என்பது மாதிரி நடந்தபோது, "ஏய்... ஏய்... கேசுவலு, ஒன்னத்தான், - உய்ங்... உய்ய்" என்ற குரலும், குரலுக்குரிய விசிலடிச் சத்தமும் கேட்டன.

சரோசா, நடந்தபடியே முகத்தைத் திருப்பினாள். அவளுடன் இரண்டு நிமிடத்திற்கு முன்பு எந்த வாய் பணிவாகப் பேசியதோ, அந்த வாயே இப்போது அவளை 'வா... வா...' என்று கையை ஆட்டி அட்டகாசமாய் கூப்பிட்டது. விசிலடித்தபடியே கூப்பிட்டது. குப்பத்தில் கூட இப்படி விசிலடிச்சி பொம்மனாட்டிய கூப்பிடமாட்டாங்களே... சரோசா ரிவர்சில் நடந்து, அந்த ஆசாமி

முன்னால், முகச்சுருக்கங்களோடு நின்றபோது அவர் விசிலை எடுத்துவிட்டு அவளை வீசிக் கடாசினார்.

"ஏய், என்ன நினைச்சிக்கிட்டே? தொறந்த வீட்டுல ஏதோ நுழையுறதுமாதிரி நுழையுறே... நான் ஒருத்தன் இங்க நிற்கிறேனே, என் பெர்மிஷன் இல்லாம எப்படி நீ உள்ளே போகலாம்? 'ஒங்கள இல்ல மேடம், நீங்க போங்கோ. இந்தப் பொண்ணத்தான், "உங்களச் சொல்வேனா?' இந்தாம்மா! மொதல்ல வெளியில போ"

சரோசா, மன்றாடினாள்.

"அண்ணாத்தே, தப்பா நினைக்கப்பிடாது அண்ணாத்தே. ஒரு வேல கொடுக்கிறதா இளங்கோ சார் சொன்னாரு, நானும் ஆபீஸ்கீபீஸ் போனதில்லே. தப்பா நடந்திருந்தா மன்னிச்சுக்கோ"

"ஆங்... அப்படி வா வழிக்கி. ஆபீசுன்னா ஒரு முறை இருக்குது ஆனாலும் இப்போ நீ வெளியில நிக்கணும். நான் இளங்கோவ பார்த்துட்டு ஒன்கிட்ட சொல்றேன்."

சரோசா என்ன செய்யலாம் என்று திக்கிமுக்கித் திணறிய போத அந்தக் கட்டிடத்தின் வெளிப்பகுதியில் - அல்லி அரசாணி மண்டபம் மாதிரியிருந்த உயரமான அறையிலிருந்த ஒருவன் கர்ஜித்தான். இடமும், உயரமும், அந்தஸ்தும் அந்த விசிலைவிட அதிகம்.

"யோவ்! நான் ஒருத்தன் செக்யூரிட்டி ஆபீஸர் நிக்கேன்ல... நீயே குறுக்கே புகுந்தால் அப்புறம் நான் எதுக்கு? அந்தப் பொண்ண இங்க அனுப்பு."

விசிலடிச்சான், வேறு வழியில்லாமல் சரோசாவுக்கு வழிவிட்டார். நாளைக்கி மாட்டிக்கொள்ளாமலா போவாள் என்று மனதிற்குள்ளேயே அவளைப் பகையாளியாக்கிப் பார்த்தார்.

இதற்குள் சரோசா மேல்நோக்கிப் பார்த்த கண்களை, அந்தக் கட்டிடத்தை நோக்கி கீழ்நோக்கிப் பார்த்தபடியே மேலே மேலே போனாள். செக்யூரிட்டி ஆபீஸர், அவளிடம் பேசுவது தனது தகுதிக்குக் குறைவு என நினைத்து, ரிசப்ஷன் ஆபீசரிடம் பேசு என்பது மாதிரி சைகை செய்துவிட்டுப் போய்விட்டார். உடனே அவள் அந்த ரிசப்ஷன் இருக்கைக்கு ஓடப்போனபோது, அங்கே மேஜையைவிட உயரமான நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒரு நடுத்தரப் பெண், தான் ஊமை என்பது போல் அவளை அங்கே உட்காரும்படி கையால் தடுத்தது.

அந்த விசாலமான மொசைக் தரையில் வரவேற்பு வளைவு மேஜையிலிருந்து சிறிது தொலைவில் நீளவாக்கிலான இரும்புக் கிராதிகளில் வரிசைவரிசையாக பிளாஸ்டிக் நாற்காலிகள் பொருத்தப் பட்டிருந்தன. கிட்டத்தட்ட வகுப்பறை மாதிரி அது தோற்றம் காட்டியது. அப்போது அந்த அறையை இரண்டு பெண்கள்... பெருக்கிக் கொண்டிருந்தார்கள். இப்போது பதினொரு மணிக்குப் பெருக்குவதால் அவர்கள் காலையில் பெருக்கியதை மீண்டும் பெருக்குகிறார்கள் என்று நினைக்கவேண்டாம். சர்க்கார் பெண்கள் பதினொரு மணிக்குப் பெருக்குவதே பெரிய விஷயம். அவர்கள் துடைப்பங்களை தரையில் ஏவிவிட்டபோது, அங்கே அமர்ந்திருந்த பத்துப் பதினைந்து பேர்கள் எழுந்து நின்றார்கள். கைக்குட்டைகளால் முகத்தை மறைத்துக் கொண்டார்கள். ஆனால், சரோசா மட்டும் இரண்டு முட்டிக் கால்களையும் நாற்காலி முனையில் வைத்துக் கொண்டு அங்கேயே உட்கார்ந்திருந்தாள். வரவேற்புக் குமரிக்கிழவி அதைக் கவனிக்கத் தவறவில்லை.

இந்தச் சமயத்தில் ஒரு மீசைக்காரன் அந்தப் பக்கமாக வந்தான். கன்னங்களோடு நீண்ட மீசை, முப்பது வயதிருக்கும். முகம் கிழடுதட்டியது. அங்கேயிருந்த பெண்களை ஓநாய், ஆட்டைப் பார்ப்பது போல பார்த்தான். பிறகு சரோசா இருந்த

நாற்காலிக்கு அடுத்த நாற்காலியை விட்டுவிட்டு அமர்ந்தான். அங்கே போய்க் கொண்டிருந்த பெரிய மனிதர்களை அவர்களை தனக்குத் தெரியும் என்கிற முறையில் ஏதேதோ கேட்டான். அவர்களில் சிலர், அவனுக்கு நின்று பதிலளித்தார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு சரோசாவை நோட்டமிட்டான். தற்செயலாய் கேட்பதுபோல் கேட்டான் :

"ஒங்க பேரு என்ன?"

"சரோசா."

"பேருக்கு ஏத்தாப்புலதான் இருக்கீங்க. என்ன விசயம்?"

"எனிக்கி தெரிஞ்சவரு, இளங்கோன்னு பேரு. ஒரு வேல போட்டுத் தரதா சொன்னார்!"

"அவரு என்ன அவரு, நானே கூட உனக்கு வேல போட்டுத் தர ஏற்பாடு செய்யறேன். டோண்ட ஒர்ரி. இந்தப் புடவ நல்லாயிருக்கே. அப்புறம் ஒன்னோட குடும்ப பேக்ரவுண்ட சொல்லு பார்க்கலாம்."

மீசைக்காரன், தான் உட்கார்ந்திருந்த நாற்காலி சரியில்லை என்பதுபோல் எழுந்து, அவளுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டான். அவனிடம் தன்னைப் பற்றிய சில விவரங்களை மட்டும் சொல்ல நினைத்த சரோசா, அவன் பார்த்த பார்வையும், பேசிய பேச்சும் பிடிக்காதவள் போல் முகம் சுழித்தாள். அவனது வலது கை, அவளது நாற்காலிக்குப் பின்னால் தாளம் போட்டது. அந்த பிளாஸ்டிக் நாற்காலியை தட்டியபடியே அவளைத் தட்டுவது போல் அனுமானித்துக்கொண்டான். சரோசா அதிர்ந்து போனாள். எத்தனைவாட்டி ஒண்ணாப் படுத்தாலும் பேஜாரு செய்யாத குப்பத்து தோஸ்துகளை நினைத்தபடியே சட்டென்று எழுந்தாள். அவனோ, இன்னும் "டோன்ட் ஒர்ரி, டோண்ட் ஒர்ரி" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

சரோசா, அந்த வரவேற்பு நாற்காலிக்கு முன்னால் வந்து நின்றாள். அந்த நாற்காலிக்காரி டெலிபோனைக் குடைந்து ஒவ்வொருவரிடமும் ஏதோ பேசினாள். பிறகு அங்கேயிருந்த ஒருசிலரை உள்ளே போகச் சொன்னாள். பிறகு கேண்டீனில் இட்லி இருக்கிறதா என்று விசாரித்தாள். தளபதிக்கு டிக்கெட் வேண்டும் என்றாள். அதேசமயம் அங்கேயிருந்த ரிஜிஸ்டரில் எழுதிக் கொண்டிருந்த ஆண்களையும், பெண்களையும் சைடில் பார்த்தாள். இந்தச் சமயத்தில் குதிரை மூக்கு மாதிரி முகத்தைத் திணித்த சரோசாவைப் பார்த்துக் கோபமாகக் கேட்டாள் :

"என்ன வேணும்?"

"இளங்கோ சார்."

"இளங்கோ சார்னு யாருக்கும் பேரு கிடையாது. எஸ். இளங்கோ, ஜி. இளங்கோ, எல். இளங்கோவன், இதுல யாரு வேணும்?"

"நானு அடிச்சுப் போட்டேனே?"

"என்ன ஒளறுறே?"

"இளங்கோ, அதுதான், அறியாத புள்ளாண்டான்; பதினைந்து நாளா ஆசுபத்திரியில பேஜாரு பட்டவரு. எனிக்கி வேல போட்டுத் தாரேன்னார்."

"நீயும் ஒன் தமிழும். கேஷுவலா? உட்காரு."

"அது வந்திருக்குதா?"

"எனக்கு ஜோசியமா தெரியும்? உட்காருன்னா உட்காரு. இல்லாட்டி நடையக்கட்டு."

வரவேற்புக்காரி வாட்டசாட்டமானவள். அங்கே வருகிறவர்களை குசலம் விசாரித்து, அவர்களது உறவையே

முதலீடாக்கி நான்கைந்து டாக்சிகளை விட்டிருப்பதாகக் கேள்வி. இவள் தேறாதவள் என்பதால் அலட்சியமாக அடிக்கடி டெலிபோனில் பேசிப்பேசி அங்கேயிருந்தவர்களை ஏலத்தில் கூப்பிடுவதுபோல் கூப்பிட்டாள். சரோசா என்ற வார்த்தை வாயில் வரவில்லை. இதற்குள், சரோசா படியமாட்டாள் என்பதைப் புரிந்துகொண்ட மீசைக்காரன், வரவேற்புக்காரியின் காதில் உதடுகள் படும்படி கிசுகிசுத்தான். ஒருமணி நேரத்திற்கும்மேல், சரோசாவுக்கு, காலம் காலன் போல் கடந்தது.

சரோசா மீண்டும் அங்கே போனாள். 'தத்தேறி முண்ட, அது வந்திருக்கா, வரலியான்னாவது சொல்லாமே... கீறாள்... இவள்லாம் அண்ணாத்தேகிட்ட சிக்கணும், அப்போ தெரியும் சேதி.'

இவளின் துடிப்போ, அல்லது பதைப்போ புரியாத அந்தக் குமரிக்கிழவி கத்தினாள் :

"இந்தா பாரு. என் மூட அவுட்டாக்காதே. எனக்கு ஒன்னய எப்போ கூப்பிடணுமுன்னு தெரியும். அப்புறம், யோவ் மீசை, இன்னிக்கி அந்த பார்ட்டி இருக்குதா?"

சரோசா, ஆமை போல் ஐம்பொறிகளையும் அடக்கி அந்த நாற்காலியில் மீண்டும் உட்கார்ந்தாள். ஒருமணி நேரம், ஒன்றரை, இரண்டு. மீண்டும் அவள் அங்கே போனபோது வரவேற்புக்காரி டம்பப் பையோடும், மீசைக்காரனோடும் வெளியேறினாள். இப்போது ஒரு ஆம்பளை கிழடு உட்கார்ந்தது. சரோசா அவர் முன்னால் ஓடிப்போய் நின்றாள். "இளங்கோ சாரு... இளங்கோ சாரு..." என்றாள். அவர் கத்தினார் : "வந்ததும், வராததுமாய் என்னம்மா இது? என்றார். சரோசா கலங்கிபோனாள். அரசனை நம்பி புருஷனை கைவிட்ட கதையாப் போச்சே...!

சரோசா வந்த வேளை என்ன வேளையோ? அலுவலக இடைவேளை வந்துவிட்டது.

அந்த வரவேற்புக் கிழடு, ஆற அமர உட்காரட்டும் என்பதுபோல் அவள் பல்லைக் கடித்துக் கொண்டே நின்றாள். அதுவோ கையோடு கொண்டுவந்த டிபன் பாக்ஸை மேஜையில் போட்டுத் திறந்தது. எலுமிச்சப்பழ சாதம், எண்ணெய்கத்திரிக்காய். அந்த வரவேற்பு வட்ட மேஜையிலேயே கரங்களை கால்கள் மாதிரி நீட்டிக்கொண்டது. கிடைக்காத தீனி கிடைத்துவிட்டால், ஒரு நாய், இரண்டு கால்களையும் முன்னால் நீட்டிக்கொண்டு அதற்கு மத்தியில் உள்ள இரையை தலையை சாய்த்துச் சாய்த்துத் தின்னுமே அப்படி.

இந்தச் சமயம் பார்த்து மீசைக்காரன் அங்கு வந்தான். கிழடுக்கு தண்ணீர் பிடித்துவைத்துவிட்டு, அவளை நோட்டமிட்டான், இப்பவாவது என் அருமை புரிஞ்சுதா என்பதுமாதிரி. இதற்குள் மீசைக்காரன் அந்தக் கிழட்டைப் பார்த்து "வி.ஐ.பி. ரூம்ல போய் சாப்பிட்டுட்டு வழக்கம்போலத் தூங்குங்க சார்; ரிசப்ஷனை நான் பார்த்துக்கிறேன்" என்றான். கிழடு அவனை விருப்போடும், சரோசாவை வெறுப்போடும் பார்த்துக் கொண்டது. பிறகு சாப்பிட்டு முடித்துவிட்டு வி.ஐ.பி. ரூமிற்குள் படுக்கப் போய்விட்டது. மீசைக்காரன் அவரது நாற்காலியில் ஏறிக்கொண்டான். சரோசாவைப் போலவே ஒருசில தலை காய்ந்த பெண்களும், ஆண்களும் மீசைக்காரனை மதுரை வீரனாகப் பார்த்துக் கொண்டு அவன் பக்கமாகப் போனார்கள். சரோசா மட்டும் வீறாப்பாக நின்றாள். மீசைக்காரன் மற்றவர்களை மிரட்டினான். "போங்க... போங்க... அந்தப் பக்கமாகப் போங்க... டைரக்டர் வர்ற நேரம், நான் கூப்பிடுவேன், எனக்கு எப்பக் கூப்பிடணுமுன்னு தெரியும்."

சரோசா, ஒன்றைப் புரிந்து கொண்டாள். இவனுக்கு விட்டுக்கொடுக்க வில்லையானால், உள்ளே விடமாட்டான். அடக்கண்றாவியே, சர்க்கார் ஆபீசுலயா இந்தக் கூத்து... சாராயக்

கடையில இல்லாத கூத்து. பேமாணிப் பயலுக. பேசாமப்புடலாம். நாளிக்கி இளங்கோவோடயே வரலாம். அய்யய்யோ! அதுக்குள்ளே வேல ஆருக்கும் புட்டா? போனாப் போகட்டும். வெளியிலயே இப்படின்னா உள்ள எப்படியோ? சாட்சிக்காரனைவிட சண்டைக்காரனே தேவல. பேசாம, அண்ணாத்தக்கிட்டயே சரண்டராயிடலாம். சின்னவீடுதான் கோள் மூட்டியிருப்பாள். காலுல விழுந்தா தூக்கிவிடுவாரு.

சரோசா, வாசலுக்கு வெளியே போவதும், உள்ளே வருவருமாக இருந்தாள். அந்தச் சமயத்தில் உள்ளேயிருந்து வெளியே வந்த ஒருத்தியிடம் "இளங்கோ சார் இருக்காரா?" என்று கேட்டாள். அவள் பக்கத்தில் இருப்பதாலேயே, தான் பெரிய ஆள் என்று நினைத்துக் கொண்ட அந்தப் பெண் ஊழியை, அவளிடம் அலட்சியமாக ஏதோ சொல்லப்போனாள். இதற்குள் எவனோ ஒருவன் அவளோடு சோடி சேர்ந்துவிட்டான். சரோசாவுக்குப் பதிலளிக்காமலேயே அவளும் அவனோடு போய்விட்டாள். அந்தச் சமயம் பார்த்து உள்ளே வந்த, ஒரு வெத்தலைப் பாக்கு ஆசாமியிடம் கேட்டாலோ, அவர் மீசைக்காரனிடம் கை காட்டினார். பேசாம மீசை சோமாரியை தாடையில ஒண்ணு போடலாமா...?

சரோசாவின் உள்வாங்கிய கண்கள் திடீரென்று இமைகளைத் தூக்கியபடி வெளிப்பட்டன. ஒடுங்கிய உதடுகள் பிரிந்தன. கன்னத்தில் குவிந்த கைகள் நீண்டன. இளங்கோ சார்... அதோ அந்த மீசைக்காரனுக்குப் பக்கத்திலேயே, நீலக்கலர் பேண்ட், அதுக்குள்ளே டக்கு வெச்ச சட்ட. சும்மா சொல்லக்கூடாது, பிள்ளாண்டான் நல்லாத்தான் கீறாரு. மீச மட்டும் வச்சாருன்னா குயந்த முகம் மாதிரி தோணாது.

சரோசா, துள்ளிக்குதித்து இளங்கோவின் முன்னால் போய் நின்றாள். மீசைக்காரனிடம் பேசிக்கொண்டிருந்த அவனது

கவனத்தைக் க்வர்வதற்காக இருமிக்காட்டினாள். அப்படியும் அவன் திரும்பாததால், அவன் முழங்கையில் லேசாய் ஒரு தட்டுத் தட்டியபடியே "சாரே... சாரே... வந்துட்டேன் சாரே"... என்றாள். இளங்கோவும் மீசைக்காரனிடம் சொன்ன ஒரு வார்த்தையை நடுவிலேயே விட்டுவிட்டு, அவளைப் பார்த்து 'ஹலோ' என்றான். அவன் தன்னிடம் பேசாமல் டெலிபோனில் பேசுகிறானோ என்பது மாதிரி பார்த்த சரோசாவை, நேருக்கு நேராய் பார்த்தபடி, ஏதோ ஒரு பெரிய எதிர்பார்ப்பு எதிர்ப்புகளுக்கு நடுவே நிறைவேறியது மாதிரியான கோபத்தனமான திருப்தியுடன் கேட்டான் :

"உன்ன பத்துமணிக்கே வ்ரச்சொன்னேனே. இரண்டரை மணிக்கு வந்து நிக்கறியே."

"வந்துட்டேன் சாரே! பதினொரு மணிக்கெல்லாம் டான்னு வந்துட்டேன. இங்கேதான கணக்குல நிக்கறேன். உள்ள யாரும் விடல."

"ஏம்பா இந்திரன்! உன்கிட்ட காலையிலேயே சொல்லி விட்டுத்தானே போனேன் : சரோசான்னு ஒரு பொண்ணு வரும், 'சேரி வாசனையை கண்டு விரட்டாமல் உள்ளே விடுன்னு, சொன்னேனே. கடைசியில நான் எதிர்பார்த்ததுமாதிரி ரிசப்ஷனையே ஜெயிலா ம்ாத்திட்டியே."

"அய்யோ சாரே, நீங்க சொன்ன பொண்ணு இதுதானா? ஏம்மா, ஒன் பேர சொல்லப்புடாதா? சாரு கிட்ட கெட்டபேரு வாங்கிக் கொடுத்திட்டியே."

இளங்கோ, மீசைக்காரனுக்குப் பதில் சொல்லாமல், எலுமிச்சைச் சாத எச்சங்களும், சட்னி துளிகளும் ஆக்கிரமித்த வரவேற்பு ரிஜிஸ்டரை எடுத்தான். நாள், நட்சத்திரம் போன்ற வகையறாக்களை எழுதிவிட்டு, சரோசாவை ஒரு கையெழுத்துப் போடச் சொன்னான். சரோசாவுக்குப் பெருமை பிடிபடவில்லை.

'அடேயப்பா! எம்மாம் பெரிய கவர்மெண்ட் ரிஜிஸ்டருல நானு கையெழுத்துப்போடறேன்; நைட்டு போய் நாயினாகிட்ட சொல்லணும்.'

இளங்கோ முன் நடக்க, சரோசா பின் நடந்தாள். வரவேற்பு வளையத்தைத் தாண்டி, பத்தடி இடைவெளி போன்ற பாதையில் நடந்து, எதிரேயுள்ள இரண்டு கண்ணாடிக் கதவுகளில் இளங்கோ ஒன்றைத் தள்ளினான். முரண்டுபிடித்த அந்தக் கதவு சரோசா மீது மோதாமல் இருப்பதற்காக அதைப் பிடித்துக் கொண்டான். சரோசா ஜம்மென்று நடந்தாள். வாசல் வளாகத்திலும், வரவேற்பு அறையிலும் அனுபவித்த சிறுமை, இப்போது சிறுத்துவிட்டது. மீசைக்காரனைப் பற்றி இளங்கோவிடம் சொல்லப் போனாள். பிறகு, வாயை மூடிக்கொண்டாள். எந்தக் காரணத்தைக் கொண்டும், துரை அண்ணன் சம்சாரம் அண்ணாத்தைக்கிட்ட சொன்னாப்பல, கோள் சொல்லக்கூடாது. அப்படிச் சொல்றது, 'நீ இருந்தும் நடக்குது பாரு' என்கிற அர்த்தமா ஆயிடும்.

இருவரும், கண்ணாடிக் கதவுகளைத் தாண்டி மெயின்ரோட அளவுக்கான அகலமான பாதையில் நடந்தார்கள். இருபுறமும் பெரிய பெரிய அறைகள், ஒவ்வொரு அறையிலும் மத்தியிலோ அல்லது ஒரு ஓரத்திலோ ஒரு கிருதாமீசை, வஸ்தாது நாற்காலி. மற்ற மேஜை நாற்காலி வகையறாக்கள் 'மற்றும் பலர்' மாதிரி. அத்தனை அறைகளிலும் ஆண்களும், பெண்களுமாய் மொய்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரே சந்தைச் சத்தம். டெலிபோன் முணுமுணுப்பு, வானொலியின் கிரிக்கெட் வர்ணனை. 'டப்பு டப்பு' டைப்ரைட்டரின் சத்தம், 'டொக்கு டொக்கு' மின்விசிறிச் சத்தம். சரோசாவுக்கு ஒரு சின்ன ஆசை. 'அதோ சொரசொரப்பான கம்பளத்துமேலே கீற நாற்காலி நல்லாத்தான் கீது. நாயினாவ ஒரு நாளக்கிக் கூட்டிவந்து அதோ அந்த மெத்த நாற்காலியில குந்தவைக்கணும். நாயினா... நாயினா... பாரு நாயினா, ஒன் பேத்தி மனுஷியாயிட்டா.'

இளங்கோ இடதுபக்கமாக இருந்த ஒரு அறைக்குள் நுழைந்தான். இரண்டு கூறுகளான கதவுகள் திறந்தபடியே இருந்தன. உள்ளே நுழைந்தவன், வெளியே லேசாய் தயங்கி நின்றவளை லேசாய் தலையாட்டிக் கூப்பிட்டான். அவள் மெல்ல நடந்து உள்ளே வந்தாள். அந்த அறையை ஒட்டுமொத்தமாகப் பார்த்தாள். நீளவாக்கிலான செவ்வக அறை. அறுபதுக்கு முப்பது. கிழக்குப் பக்கம் ஓரமாக பிளைவுட் தடுப்புகளைக் கொண்ட ஒரு சின்ன அறை. இருபதுக்கு இருபது. அந்த அறையை மூடிய கதவு. வெளியே வடக்குப் பக்கம் நடுவில் பெரிய மேஜை. அதில் கழுத்தை சாய்த்துக்கொள்ளும் அளவிற்கான நாற்காலி. அந்த இருக்கைக்கு முன்னால் இருபுறமும் ஐந்தாறு இரும்பு நாற்காலிகள். சன்மைக்கா மேஜைகள். தெற்கு முனையில் ஒரு பாடாவதி மேஜை. அதன் மேல் பைல்கள், மைக்கூடுகள், ரப்பர் ஸ்டாம்புகள்... ஒரு வீராப்பான பேர்வழி.

நடு நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் சரோசாவை ஓரங்கட்டிப் பார்த்தபடியே, இளங்கோவைப் பார்க்காமலேயே "உடம்பு சரியாயிட்டா" என்றார். அவனும் அவசர அவசரமாய் ஆமாம் போட்டுவிட்டுச் சொல்ல வேண்டியதைச் சொன்னான். "நீங்க என்னப் பார்க்க வந்தப்போ சொன்னேனே... கஷ்டப்படுற பொண்ணு... அது இதுதான்."

"ஓகே ஓகே நீ சொன்னால் நான் தட்டுவேனா? எதுக்கும் டெப்டி டைரக்டர்கிட்டயும் சொல்லிடு."

"காலையிலேயே சொல்லிட்டேன். ஓகே சொல்லிட்டார்."

"எலக்ஷன் நம்பி பணத்தப் போடாதே, எலக்ட்ரிசிட்டிய நம்பி இலையப் போடாதே ஆபீசர நம்பி ஆமாம் போடாதே... எதுக்கும் அவரே என்கிட்ட ஒரு வார்த்தை சொல்லட்டும்."

தலைமை கிளார்க் சொல்வது கொஞ்சம் அதிகப்படியாக, இளங்கோவிற்குத் தோன்றியது. ஆனாலும் அங்கிருந்த

ஊழியர்கள் அனைவரையும் அடையாளம் தெரிந்தவர்கள் போல் பார்த்துக் கொண்டு ஆபீசர் கதவைத் தள்ளினான். அந்தக் கதவு அவனை உள்வாங்கிக் கொண்டு, மீண்டும் தானாய் மூடப்போனபோது, இளங்கோ அதைப் பிடித்துக் கொண்டான். சரோசாவும், தயங்கித் தயங்கி உள்ளே போனாள். உடனே அந்த ஸ்பிரிங் கதவு அலிபாபா குகைக் கதவு மாதிரி மூடிக்கொண்டது. உள்ளே போன சரோசா, முதுகை நிமிர்த்தினாள். இன்னா ஜில்லுன்னுக்கீது. அண்ணாத்த வீட்டுக்குப் போனப்போ குளிர் அடிச்சாப்புல இருந்துதே, அதேபோல ஜிலுஜிலுப்பாக கீது. அட தரையப் பாரேன், நடந்தா காலு உள்வாங்குது. காலுக்கு செருப்பே வாணாம் போல.

தலைக்கு மேல் நீண்ட ரப்பர் மெத்தை நாற்காலியின் பின்பக்கம் பிடரியில் கை போடுவதுபோல் போட்டுக்கொண்டு ஏதோ ஒரு பைலை குடைந்து கொண்டிருந்த டெப்டி டைரக்டர் அருணாசலம், கடாமுடா சத்தம் கேட்டு நிமிர்ந்தார். வயது, உடம்பு, நிறம் ஆகிய மூன்றிலும் நடுத்தரம். அடித்தொண்டையில் பேசக்கூடியவர்.

“உடம்பு இப்போ எப்படி இருக்குதப்பா?”

“ஒங்க ஆசீர்வாதத்துல சரியாயிட்டு சார்.”

“அப்புறம் நான் சொன்னேன் பாருங்கோ கேஷுவல் பொண்ணு. அது இந்தப் பொண்ணுதான் சார். பாவம், தள்ளாத அப்பாவ காப்பாத்துறதுக்கு அல்லாடுது.”

“அப்படியா! ஒன் பேரு என்னம்மா?”

“சரோசாங்க, அய்யா!”

“காலையில ஒன்பது மணிக்கே, வந்து, டூட்டி ஆபீசருக்கிட்ட சாவி வாங்கி இந்த செக்ஷன் திறக்கணும். என்

ரும நல்லாத் தொடைக்கணும். இந்த ஜாடிய வெளியில கொண்டுபோயி கூலர்ல தண்ணி பிடிச்சு வைக்கணும். நான் வர்றதுவரைக்கும் வாசலிலேயே நிக்கணும். நான் வர்றதப் பார்த்தும் கதவத் தொறக்கணும். சூட்கேச சுமக்கணும். ஒரு நாளைக்கி பத்துப் பதினைந்து தடவ கேண்டீனுக்குப் போக வேண்டியிருக்கும். அலைச்சலுக்கு அலுக்கப்படாது. நாலு வருஷம் இப்படித் தள்ளிட்டியானால், அப்புறம் அதோ வெளியில உட்கார்ந்திருக்கானே அப்துல்லா, அவன மாதிரி காலுமேல காலு போட்டு வேல பார்க்காமயே சம்பளம் வாங்கலாம். நான் சொல்றது புரியுதா?"

"புரியுதுங்க அய்யா! அய்யா காலால இட்ட வேலையை கையால..."

"சினிமா அதிகமா பார்ப்ப போலுக்கு. இளங்கோ முகத்துக்காக இப்போ ஒன்ன சேர்க்கிறேன். அப்புறம் ஒன்ன இங்க வைக்கிறதும், வைக்காததும் உன் திறமையையும், விசுவாசத்தையும் பொறுத்திருக்கு."

"சார், ஹெட் கிளார்க் கிட்ட ஒரு வார்த்த..."

"இண்டர்காமில் சொல்லிடறேன். இந்தப் பொண்ணு முன்னால அவருக்கு உத்தரவு போடக்கூடாது பாரு."

"சாரி சார், வாறேன் சார்."

சரோசாவும், இளங்கோவும் வெளியே வந்தார்கள். அப்போது பார்த்து இண்டர்காம் குமிழை கீழேவைத்த தலைமை கிளார்க் ராமசாமி, இளங்கோவைப் பார்த்து தலை ஆட்டினார். இளங்கோவும் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு லேசாய் திடுக்கிட்டவன் போல், தோளைக் குலுக்கிவிட்டுப் புறப்படப் போனான். சரோசாவும் அவன் பின்னால் புறப்படப் போனபோது, அவன் அவளுக்குச் சொல்வது போல எல்லோருக்கும் சொன்னான்:

"நான் மாடியில இன்னொரு செக்ஷனில இருக்கேன். இந்த செக்ஷன்தான் உனக்கு எல்லாம். யார் சொல்லையும் தட்டப்படாது. என்ன வேல கொடுத்தாலும் செய்யணும்."

சரோசா தலையாட்டினாள்.

இளங்கோ அங்கே இருந்தவர்களிடம் வேசாய் அரட்டை அடித்து விட்டுப் போய்விட்டான். தனித்துவிடப்பட்ட சரோசா, அங்குமிங்குமாய், மலங்கமலங்கப் பார்த்தாள். டைப்பிஸ்ட் கனகா, அவளை ஏறிட்டுப் பார்த்தாள். 'உடம்பு இருக்கு பார் இரும்புமாதிரி. நானும் இருக்கேனே, தயிர்ச்சாதம்.' அக்கவுண்டண்ட் ராமசாமி அவளை அண்ணாந்து கோபமாகப் பார்த்தான். 'என்னோட வேலைக்காரிய கேஷ்வலா வைக்கலாம்னு இருந்தால். இளங்கோ முந்திக்கிட்டாரே. பார்க்கலாம், பார்க்கலாம். இந்த முண்டக்கண்ணிய விரட்டணும்.' எல்லோரையும் விட, தெற்குப்புற மேஜையில் குரங்கு மாதிரி கால்களைத் தூக்கிவைத்துக் கொண்டு மேஜையையே மரமாகப் பாவித்து உட்கார்ந்திருந்த பியூன் அப்துல்லா பொறிந்தான். ஒல்லி உடம்பன், முப்பதைத் தாண்டாதவன்.

"நான் ஒருத்தன் இருக்கப்போ, எதுக்கு கேஷ்வல்?"

"டீ வாங்கிக் கொடுக்கறது ஒன் வேலையில்லங்கற. மேஜையைத் தொடைக்கறது ஒன் வேலையில்லங்கறே. ஒரு டம்ளர் தண்ணி குடிக்கறதுக்கே மூச்சு வாங்க வைக்கிற. இந்த வேலையைச் செய்யறதுக்கு ஒரு ஆள் வேண்டாமா?"

"எனக்கு ஓட்டி கேட்டா இல்லைன்னு சொல்றீங்க. அதுக்குக் காரணம் கேட்டா, அரசாங்கம் சிக்கனமா இருக்கச்சொல்லி சர்க்குலர் போட்டதாச் சொல்றீங்க. ஆனா இந்த மாதிரி சாவுகிராக்கிங்கள, கேஷ்வலா போட்டு பணத்த விரயம் பண்றீங்க."

தலைமை கிளார்க்கோடு மோதிய அப்துல்லா இப்போது சரோசா மீது பாய்ந்தான்.

"இந்தாம்மா ஒன்னத்தான், பெரிய சினிமா ஸ்டார்மாதிரி ஏன் போஸ் கொடுக்கிறே? என்னோட இந்த எச்சில் கிளாச கழுவிக் கிட்டுவா."

சரோசா சப்த நாடிகளும் அற்றுப் போனவளாய் நின்றாள். எல்லோருமே, அவன் விரட்டுவதை, வேடிக்கை பார்ப்பதைப்போல் பார்த்தார்கள். 'அல்லாரும் என்னை ஏன் ஜென்மப் பகையா பார்க்கிறாங்கோ? ஒவ்வொருத்தனும் அண்ணாத்த மாதிரி தோணுதே."

## 23

சரோசா, அந்த வேலையில் சேர்ந்து ஒரு வாரத்திற்கு மேல் ஆகிவிட்டது. அந்த வேலையின் தலைகால் அவளுக்குப் புரிந்துவிட்டது. ஆனாலும், தலை கழுத்தில் இல்லாதது போலவும், கால் தரையில் படாதது போலவும் ஆடுகிற 'ஆபீஸ் கம்மனாட்டிங்க' போக்குத்தான் அவளுக்குப் புரியவில்லை. ஆனாலும், நாயின் மீது ஒரு கண்ணை வைத்தபடியே, அதன் அருகில் அமரும் காக்கா போல, எங்கிருந்தோ பறந்துவரும் அண்டங்காக்காவின் முட்கால்கள் உடம்பில் படாதபடி நகர்ந்து கொள்ளும் சிட்டுக்குருவி போல, சரோசா அவர்களின் இருபொருள் படும்படியான பேச்சுக்களையும், தன்னைத் தாழ்த்தும் இளக்காரமான பார்வைகளையும் தாங்கிக்கொண்டாள். வேலையில் 'காயம்' ஏற்பட வேண்டும் என்பதற்காக, உள்ளத்தின் காயங்களை ஊதிவிட்டுக் கொண்டாள். கோப்புக்களை தூக்கிக்கொண்டு, செக்ஷன் செக்ஷனாகப் போகும்போது பெருமையாக இருந்தது. எச்சில் டம்ளர்களை கழுவும்போது சிறுமையாக இருந்தது. அவளுக்கும் ஒரு முகம் இருப்பதை

அனுமானிக்காமலே, அவளுக்கு எதிராக கிண்டலடிக்கும் பேர்வழிகளைப் பார்க்கும்போது அடித்து நொறுக்கலாம் என்பதுபோன்ற ஆவேசம் வந்தது. ஆனாலும் பொறுத்துக் கொண்டாள். இப்போது நாயினா அவளை சந்தோஷமாகப் பார்க்கிறார். ஆகையால் அலுவலகத்தில் தானும் சந்தோஷமாக இருப்பதாக அவரிடம் ஒரு பாவனை செய்து கொள்கிறாள். இளங்கோ, பல தடவை அவளைப் பார்த்து குசலம் விசாரித்தான். அவளுக்குப் பணம் தேவையா... என்று கூடக் கேட்டான். அவள் தன்னை அறியாமலே வேண்டாம் என்று சொல்லிவிட்டாள். அழுத்திக் கேட்டிருந்தால், கையை நீட்டியிருப்பாள்.

கடந்த பத்து நாட்களாக, அவளுக்கு எந்த வருமானமும் இல்லை. சரக்கு எடுக்கப் போகாததால், பைசா தேறவில்லை. துரை அண்ணனிடம் கேட்கலாம் என்றால், அவன், ஆந்திராவிற்கு சரக்கு வாங்கப் போய் விட்டான். கடைசியில் பூக்கார ருக்குமணிதான் இவள் கேட்காமலேயே கொஞ்சம் இவளுக்கும், இவள் நாயினாவுக்கும் 'நாஷ்டாவுக்கு' ஏற்பாடு செய்தாள். இவளும், தினமும் மாலையில் அந்தப் புடவையை ருக்குமணி வீட்டில் மடித்துவைத்துவிட்டு பைஜாமா வகையறாவை போட்டுக்கொள்வாள்.

அன்றும், அவள் வழக்கம்போல் பைஜாமா கோலத்தோடு நாயினாவுடன் கோவில் வளாக மண்மேட்டில் படுத்துக்கிடந்தாள். ஆபீசில் மொசைக் தரையில் நடந்துவிட்டு, சோபா செட்டில் அக்கம் பக்கம் பார்த்து உட்கார்ந்துவிட்டு, அந்தத் தரையில் இப்போது படுப்பதற்கு அவளுக்கு என்னமோபோல் இருந்தது. பல்லைக் கடித்துக் கொண்டாள். இந்த மாதச் சம்பளம், நாஷ்டா ஆயாவுக்கும், ருக்குமணியின் கடனுக்கும் சரியாயிருக்கும். அடுத்த மாதச் சம்பளத்தில், ஒரு குடிசைக்கு அட்வான்ஸ் கொடுத்துவிட்டு குடித்தனம் போயிடலாம். எம்மாடி! ஒரு நாளைக்கி 30 ரூபா கொடுப்பாங்களாம். பள்ளிக்கூடத்துல ரொம்பவும் படிச்சிட்டு

டீச்சரா போற பொண்ணுங்க கூட 300, 400 ரூபாதான் வாங்குறாங்கோ. எனிக்கி முள்ளங்கிப் பத்தமாதிரி 900/- ரூபா.

அம்புபோலான அவள் முழங்கை மடிப்பையே தலையணையாக வைத்தபடி நாயினா தூங்கிக் கொண்டிருந்தார். அவர்-கை ஏன் இப்படிக் குலுங்குகிறது என்று அவள் பார்த்தபோது காரணம் கண்டு கொண்டாள். அவள் நாயினாவின் தலை அங்குமிங்குமாய் ஆடியது. அவர் உடலெங்கும் மலேரியா படையெடுத்தது போன்ற ஆட்டம். மார்கழிப் பனி அவர் தொண்டைக்குள் ஊடுருவி, ஈளை-இருமலாக அவரை உலுக்கிக் கொண்டிருந்தது. திடீரென்று, துரை அண்ணனின் தர்ம பத்தினியைப் போல் நம்பமுடியாத மழை. ஆலங்கட்டி விழுவதுபோல் அடாவடி மழை, அவள் முகத்தை பேயாய் அறைந்தது. நாயினாவின் காக்கிச்சட்டையை காகிதமாகக் குழைத்தது. அவரை 'ஊ.. ஊ..' என்று ஊளையிட வைத்தது.

சரோசா, நாயினாவை தூக்கிப்பிடித்து நிறுத்தினாள். அவரோ நிற்கமுடியாமல் நிலைதடுமாறி அவளைக் கட்டிப்பிடித்துக் கொண்டு தானும் ஆடி, அவளையும் ஆட்டுவித்தார். 'அய்யோ... நாயினா' இப்படியே இத வெச்சா செத்துடும். எங்கே கூட்டிப்போறது? துரை அண்ணன் கொட்டடிக்கப் போலாமா? அந்த தர்ம பத்தினி இன்னாப் பண்ணுவாளோ? அதானே... அப்பவே பெரிய கார்ல டம்பப் பைய வச்சுகினு, இரண்டு பிரா போட்டாப்புல, உடம்ப நெளிச்சுக்கிட்டுப் போயிட்டாளே. ஆபத்துக்குத் தோஷமில்ல. அதோட ஒருவாரமா தோஸ்துங்கள பார்க்காம தலை சுத்துது. எப்படியில்லாமோ பேசிக்கினு இருப்போம். இப்போ கஸ்மாலங்க கண்டுக்க மாட்டேங்கிறானுங்க. நல்லவேளை, அண்ணாத்தே கண்டுக்கல. நானு பயந்ததுமாதிரி ஏடாகூடமா ஏதும் செய்யல. பெரிய மனுஷன்தான். ஏதோ அந்த வேளையில கேட்பார் பேச்சுக் கேட்டு, போலீஸ்ல மாட்ட வைக்க, நெனச்சிருக்கார்.

சரோசா, தந்தையின் தலை நனையாமல் இருப்பதற்காக, தனது சட்டையின் பின்புறத்தில் கழுத்துப் பகுதியைத் தூக்கி, அவரது தலையில் முக்காடு மாதிரி போட்டுப் போர்த்தியபடியே நகர்த்தினாள். நடக்கும்போதே அவரது சட்டையையும் வேட்டியையும் பிழிந்து விட்டாள். அவர் உடம்பைத் தொட்டால் ஆபீசில் பிரிஜ்ஜை தொட்டது மாதிரி இருந்தது. முக்கி முனகிய நாயினாவை, அவள் துரை அண்ணன் வீட்டின் கொல்லைப்புறப் பந்தலுக்குள் கொண்டு போனாள். அங்கே படிக்கட்டில் உட்கார்ந்தபடி, முட்டிக்காலில் ஊன்றிய கைகளில் முகம் போட்டு, பக்கத்தில் இருந்த இருவர் மாறிமாறிச் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்த துரை அவளைப் பார்த்து லேசாகத் தலையாட்டினான். ஆனால், பக்கத்தில் பாதி கிளாசோடு இருந்த அம்மைத் தழும்பன், அதட்டினான் :

“நீ ஆரோ, நாங்க ஆரோ? எதுக்கும்மே வந்தே, ரோசங்கெட்ட கயிதே?”

இன்னொரு வஸ்தாவான இன்னாசி, அவளைப் பார்த்து, எழப்போன அம்மைத் தழும்பனை அழுத்தி உட்கார வைத்தான். சரோசாவைப் பார்த்து ஒரு இடத்தைக் காட்டி மோவாயை ஆட்டி உட்காரச் சொன்னான். அவளும் தந்தையை அந்தத் தரையில் படுக்கப் போட்டபடி அவரது உடைகளைத் தளர்த்தி விட்டாள். துரை சாக்களிடம் புலம்பினான் :

“அப்போ, நானு ஆந்திராவுக்கு சரக்கு எடுக்கப் போகிற போதெல்லாம், இங்கேயே சல்சா நடந்ததுன்னு சொல்றே!. ஒரு வருஷமா நடக்கிற விவகாரத்த... நீ துரோகி, என்கிட்ட - இந்த தோஸ்துகிட்ட - சொல்லல. இன்னாய்யா பிரெண்டு நீ?”

“விட்டுத் தள்ளுப்பா... விஷயம் அதவிட முத்திட்டு. அண்ணாத்தே கார் அனுப்புறார். அக்கா ஜம்முனு புறப்படறாள். மட்டுமரியாத இல்லாம பூட்டு. சே, பொம்மனாட்டியா அது?”

சரோசா, வாயைக் கொடுத்தாள் :

"யோவ் இன்னாசி, அந்தப் பொம்மனாட்டிய திட்டிறீயே, ஆனாங்காட்டி தொரண்ணன் கிட்டருந்து அவள அப்பிடி பிரிச்சு மயக்கின அண்ணாத்தைய பத்தி ஏம்பபா பேசமாட்டேங்கிற? ஒரு குடும்பத்தையே கலிஜி பண்ணிட்டாரே."

"இந்தாம்மே எயிந்திரு. எயிந்திரு. சரியான கபீரிச்சி நீ!"

துரை, இரண்டாவது தோஸ்தின் தோளையும் தட்டி அமைதிப் படுத்தினான். ஒரு கையால் அவன் தோளை அழுத்தியபடி முன்னால் இருந்த கிளாஸை இன்னொரு கையால் எடுத்து வாய்க்குள் தடதட வென்று விட்டான். பிறகு சற்றுத் தொலைவிலிருந்த இரண்டு கிளாஸ்களை எக்கிஎக்கி எடுத்தான். கண்ணாடி ஜாடியிலிருந்த மண் நிற திரவத்தை அவற்றில் முழுமையாக நிரப்பி, இன்னாசியிடம் கொடுத்து அவற்றை சரோசாவிடமும் அவள் நாயினாவிடமும் கொடுக்கச் சொன்னான். சரோசாவும் கொடுக்கப்பொறுக்காமல், அவற்றை வாங்கிக் கொண்டாள். ஒன்றை எடுத்து படுத்துக்கிடந்த நாயினாவின் தலையைத் தூக்கி, வாயை அகலப்படுத்தி ஒரு கிளாசை தலைகீழாகக் கவிழ்த்தாள். அது 'தடா' சட்டம் மாதிரி வேகமாகப் பாய்ந்தது. இன்னொரு கிளாசை எடுத்து, தனது வாயருகே கொண்டுபோனாள். ஒரு வாரமாய் கிடைக்காத அமிர்தம்... உள்ளே போனால் அது செய்யும் மாயாஜாலமே தனி. நிஜமே இல்லாத நிழல்களைக் காட்டும் மாய மருந்து; துக்கத்தைக் கரைத்து அதையே சந்தோஷமாகக் காட்டும் சர்வ வல்லப திரவம்.

சரோசா, பூனை கருவாட்டைப் பார்ப்பது போல், அரசியல்வாதி பதவியைப் பார்ப்பதுபோல், அதைப் பார்த்தாள். அந்தச் சமயத்தில் இளங்கோ அவள் முன்னால் வந்து நிற்பதுபோல் இருந்தது. அவளை முகம் சுழித்துப் பார்க்கிறான். நாயைக் குளிப்பாட்டி நடு வீட்டில் வைத்தது போல், அவளை வைத்த கண்

வாங்காமல் பார்க்கிறான். அவனது அலுவலக சகாக்கள் அவனை ஏளனமாகப் பார்த்தபடியே 'குடிகாரிய வச்சிட்டியே' என்று ஏசுவதைக் கேட்கிறாள். 'அடப்பாவி... படுபாவி... இளங்கோ! என்னோட சுகத்தைக் கெடுத்திட்டியே. இந்தக் குளிருல ஒரு நண்டுத் துண்டக் கடிச்சுக்கினு, ஒரு கிளாய பூட்டா எப்படி ஜோரா இருக்கும்! இன்னிக்கி மட்டும் கொஞ்சமா தவோண்டு போட்டுக்கிறேன்பா... நாளக்கி வாணாம்.'

சரோசா, மனதைத் திடப்படுத்திக் கொண்டாள். சாராய வாடை மூக்கில் கிக்-ஐ ஏற்படுத்தாமல் இருக்க அதைப் பொத்திக்கொண்டாள். அந்தக் கிளாசையே ஆசையோடு பார்த்த நாயினாவின் பக்கம் அதை நகர்த்திவிட்டாள். அவர் பதிலுக்கு அதை அவள் பக்கம் நகர்த்தியிருந்தால், வாய் வாய்க்காலாகி, அந்தத் திரவம் உள்ளுக்குள் உருண்டோடியிருக்கும். ஆனாலும், அவளோ ஒரு வைராக்கியத்தோடு, நாயினா குடித்த கிளாசைப் பார்த்து கண்ணை மூடிக் கொண்டாள்.

துரை, தனது சுமையில் அவள் சுவைக்காமல் போனதை உணரவில்லை. அந்த தோஸ்துகள் இருவரும் அவளை ஆச்சரியமாகப் பார்த்தார்கள். அவர்கள் பார்வையில் இப்போது சிறிது மரியாதை தெரிந்தது. இந்தச் சமயத்தில் பாதி திறந்திருந்த பின்வாசல் கதவு சத்தம்போட்டது. துரை அண்ணனின் தர்ம பத்தினி அங்கே தாம்தூமாய் நின்றாள். தலையிலுள்ள பூக்கள் கசங்கியிருந்தன. நெற்றிப் பொட்டில் பாதியைக் காணவில்லை. கையில்லாத ஜாக்கெட். இரண்டு தோள்களும், 'ரொட்டி' சுடும்போது உப்புமே, அப்படி உப்பிநின்றன. சரோசாவை அதட்டலோடு கேட்டாள் :

"இங்கே எதுக்குமே வந்தே? என் புருஷன் ஒனிக்கி கள்ள ஆம்படையான்ா?"

"எக்கோவ், ஒன்ன மாதிரி என்னை நினைக்காதே."

"நீ பெரிய ஒழுங்குதான்."

"நானு அப்பிடி ஒண்ணும் சொல்லல...! தொட்டு இருக்கேன், கெட்டிருக்கேன். ஆனா, எனக்குன்னு ஒரு ஆம்புடையான் வந்துட்டா, அதுவும் துரை அண்ணன் மாதிரி நல்லவனா வந்துட்டா, நானு ஏரியா விட்டு ஏரியா போயி மேயமாட்டேன்."

"ஏய், இதுக்குமேல் பேசினே, ஜோடு பிஞ்சிடும். 'அவரும்' ஒன்ன கவனிச்சுக்கிட்டுத்தான் இருக்காரு. அந்தப் பிள்ளாண்டானோட நீ ஆசுபத்திரியில கொஞ்சினது, அவருக்குத் தெரியும். எப்பேர்ப்பட்ட மனுஷன்... அவர அவ்வளவு சீப்பா நினைச்சிட்டியா? இருக்கட்டும்... இருக்கட்டும். மொதல்ல இடத்தக் காலி பண்ணு."

துரை, குடிவெறியோடு எழுந்தான். தர்ம பத்தினியின் தலை என்று நினைத்து ஒரு நாயின் தலையைப் பிடித்து இழுத்துக் கொண்டே கத்தினான் :

"ஏம்மே! வீடுவிட்டு வீடு போறதுதான் போறே, நானு போட்ட தாலிய அறுத்துட்டுப் போறதுதானம்மே! சரோ, நீ உட்கார். மொதல்ல நீ வீட்டவிட்டு காலி பண்ணும்மே."

தர்ம பத்தினி அதிகமாய் வெடித்தாள் :

"இந்தா பாருய்யா, இப்போ சொல்றதுதான். இந்த வீடு என் பேர்ல கீது. இருந்தா இரு... போனா போ. என்னால தனியா சரக்குப் போட முடியும். இனிமே என்ன ஒதச்சே, அப்புறம் அவருகிட்ட ஒத தின்னுவே. போகணும்னா போயேன். என்னால சரக்குப்போட முடியும். பெரிய வஸ்தாதுன்னு நெனப்பா? மானங்கெட்ட பையா! நான் அண்ணாத்தய வச்சிட்டுத்தான் இருக்கேன்; இன்னாடா செய்வே பொட்டப் பையா?"

தர்மபத்தினியை அடிப்பதற்காக எழப்போன துரை அப்படியே கீழே விழுந்தான். அந்த மணல் தரையில் 'அய்யோ,

அய்யய்யோ' என்று அங்குமிங்குமாய்ப் புரண்டான். தன் தலையிலேயே அடித்துக்கொண்டான். மீண்டும் எழுந்து உட்கார்ந்து, வாயிலும் வயிற்றிலும் மாங்குமாங்கென்று அடித்தான். அவன் கையை சரோசா பிடித்தபோது, 'ஏம்மே... இவனுக்கு இங்கயே முந்தானை விரிக்கியா... விரி... விரி...' என்று தர்மபத்தினி கத்திவிட்டு, பின் கதவை அவர்கள் முகத்திலடிப்பது போல் சாத்தினாள். சரோசாவால் தன்னைக் கட்டுப்படுத்த முடியவில்லை. கதவுக்குள் மறைந்துகொண்டவளை, ஜன்னல் வழியாகப் பார்த்தபடியே கத்தினாள் :

"துரை அண்ணன இந்த நிலைக்கிக் கொண்டுவந்த நீ, வாயில புழு வச்சி சாகப்போறே. இதுக்கு துரோகம் பண்ணின ஒன் கள்ளப் புருஷன் நொள்ளக்கண்ணு அண்ணாத்த எய்டுன்னு ஏதோ ஒண்ணு புச்சா வந்திருக்காமே, அதால சாகப்போறான். அழாத துரையண்ணே. அழாதே; பேய்க்கி தாலி கட்டினா புளியமரத்துலதான் ஏறணும்."

இந்தச் சமயத்தில் தோஸ்து கோபாலு, பாம்பும் சாகாமல் பாம்படித்த கம்பும் நோகாமல் பேசினான் :

"நீ வேற, ஏம்மே பிராணன வாங்குறே? துரையண்ணன் காலையில சரியாயிடுவார். புருஷன் பொண்டாட்டின்னா ஆயிரம் இருக்கும். ஒனிக்கி என்னம்மே வந்துது? ஒன்னால அண்ணாத்தே எங்களையும் சந்தேகப்படப்போறாரு. பழகின தோஷத்துல சொல்றேன், நாயினாவைக் கூட்டிக்கினு போயிடும்மே."

"ஆமாம்! கோபாலு சொல்றது மாதிரி ஜல்தியா போயிக்கினே இரு."

சரோசா, குப்புறக் கிடந்த துரை அண்ணனையும், தன்னை அந்நியமாகப் பாவித்த, ஒரு காலத்தில் அன்யோன்யமான தோஸ்துகளையும் பார்த்துப் பொருமினாள். கீழே கிடந்த தந்தையை தூக்கினாள். அவர் துள்ளலாய் எழுந்து நீராவி எஞ்சின்போல் நடந்தார். சரோசாவை, இப்போது கேரேஜ் போல இழுத்துக்கொண்டு போனார். துரையின் தர்ம பத்தினி வீட்டுக்குள் டெலிபோனைச் சுழற்றி, கோபம் கோபமாகப் பேசிக்கொண்டிருந்தாள். அப்புறம் அழுதாள், இன்னிக்கே வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டாகணுமாம்.

சரோசாவும், நாயினாவும் கோவில் வளாகத்திற்கு வந்தார்கள். நாயினா வந்ததும், வராததுமாக அந்த ஈரமண்ணில் அப்படியே குடைசாய்ந்தார். மழை விட்டிருந்தது. வானம் பன்னீர் தெளிப்பதுபோல் மட்டும்தான் தூறியது. சரோசாவுக்கு தூக்கம் வரவில்லை. பாவம் துரை அண்ணன்! பெண்டாட்டிய கள்ளுமாதிரி வெள்ளையா நினைச்சான். ஆனா, அது விஷச் சாராயமாயிட்டு...!

சரோசாவுக்கும் கண் அயர்வு ஏற்பட்டது. நாயினா குறட்டைபோடும் சத்தம் அவள் தூக்கத்திற்கு தாலாட்டு போல் கேட்டது. திடீரென்று ஒரு சத்தம். இன்னாது, ஆட்டோ? யாரும் சினிமாவுக்குப் போயிட்டு வாறாங்களா?

சரோசா படுத்தபடியே தலையைத் தூக்கியபோது, அந்த ஆட்டோவிலிருந்து நான்கைந்து பேர்கள் குதித்தார்கள். இரண்டுபேர் கையில் பட்டாக் கத்திகள், ஒருவன் கையில் சைக்கிள் செயின்... மீதி இருவருக்கு உடம்பே ஆயுதம். ஆறுபேரும் டார்ச் லைட்டை அடித்தபடியே அங்கமிங்குமாய் பார்த்தார்கள்.

# 24

சரோசா அந்தக் கும்பலை உணர்வற்றபடியே பார்த்தாள். இன்றைக்கு எப்படியும் ஒருவழியாகிவிடப் போகிறோம் என்ற உணர்வு, அவளைத் தப்பிக்கும் வழியை நினைக்க முடியாமல் தடைபோட்டது. உயிரற்றவள் போல் கீழே கிடந்தாள். இதற்குள், அந்த ஆசாமிகள் சேரிக்கு இட்டுச் செல்லும் இடுக்குவழிக்குப் போனார்கள்.

சரோசாவுக்கு என்றே புதிய பங்குத் தந்தையால் தாளிடப்பட்ட அறையை நோக்கிப் போனார்கள். ஒன்றாய்ப் போய்க்கொண்டிருந்த, அனைவரும் பிறகு ஆளுக்கொரு பக்கமாகப் பிரிந்து அங்குமிங்குமாய் தேடினார்கள். பிறகு எல்லோருமாய் ஒன்றாகக் குனிந்து அவள் இருந்த பக்கமாக ஆறு தலைகளையும் ஒரே தலைகளாக நிமிர்த்தினார்கள். சரோசா பம்மிக்கொண்டே பார்த்தாள். பழக்கப்பட்ட இருவர் குரல், பழகாத நால்வர் குரலுடன் கலந்திருந்தது. காவல்நிலைய வளாகத்திற்குள் இளநீர் குடித்துக்கொண்டிருந்த இளங்கோவை அடிப்பதற்காக எகிறினானே ஒரு தோஸ்து - மணி - அவன் இப்போது பட்டாக்கத்தி அந்த இருட்டில் மின்ன, கோர தாண்டவம் ஆடுவதுபோல் அவளை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தான்.

சரோசா நாய்னாவை உற்றுப் பார்த்தாள். அவர் தானில்லாமல் வாழப்போகும் நிலையை நினைக்க நினைக்க, அவளுக்கு ஒரு தற்காப்பு உணர்வை ஏற்பட்டது. உயிர் காக்கும்படி அக்கம்பக்கம் எழும்படி அலறலாமா...? வேறு வினையே வேண்டாம். எங்கப்பன் குதிருக்குள் இல்லை என்கிற கதை! அவர்கள் மெல்ல நகர்ந்தபோது, லேசாய் குறட்டைவிட்ட தந்தையின் வாயை அவள் அழுத்த, அவர் மூச்சுத் திணறலில்

கண்விழித்தார். ஏதோ பேசப்போன அவர் வாயை ஒரு கையால் அடைத்தபடியே "ஆபத்து! ஆபத்து! அதோ, அண்ணாத்தேயின் கொலைகார கோஷ்டி" என்று கிசுகிசுத்ததும், அவர் அவளைத் தப்பிப் போகும்படி சைகை செய்தார். அவளுக்குத் தெரியும் - இந்த மாதிரி சமயத்தில் குறிபார்க்கப்பட்ட ஒன்று கிடைக்கவில்லை என்றால், கொலைகாரக் கோஷ்டியினர் அந்தக் குறியின் துணையைப் பழி வாங்கி விடுவார்கள். அவள், தான் தப்பித்து, நாய்னாவுக்குக் கொலைத் தண்டனை வாங்கிக் கொடுக்க விரும்பவில்லை. நாயினாவை தன் பக்கமாக இழுத்து, அவள் தரையில் தவழ்ந்தாள். மூச்சைக்கூட மெல்ல விட்டபடியே ஊனமுற்றவனைப் போல், இரண்டு கைகளையும் கூட கால்களாக ஆக்கி, நாயினாவையும் இழுத்து இழுத்து தவழச் செய்து, அந்தக் கோயில் வளாக வாசலுக்கு வெளியே வந்துவிட்டாள். உடனடியாக நாயினாவை தூக்கி நிறுத்தி, தாங்கிப் பிடித்து, தேநீர் பக்கக் கடைகளின் சுவர்கள் வழியாக நகர்த்தி, நகர்த்தி, அவற்றில் சாய்த்து, சாய்த்து, சில இடங்களில் இருந்து, இருந்து, அவர் "அய்யோ வலிக்கி, வலிக்கி" என்று போட்ட அலறல் சத்தத்தையும் பொருட்படுத்தாது, இழுத்துக்கொண்டே ஓடினாள். கும்மிருட்டான அந்தக் கடலோரச் சாலையில், இருளின் நிழல்போல் பாய்ந்தாள்.

திடீரென்று ஒரு பிளிறல் - ஒரு கர்ஜனை - ஒரு அட்டகாசச் சிரிப்பு - பிறகு அத்தனையும் சேர்ந்த ஒரு சவால்.

"டபாய்க்கவா பார்க்கிறே? ஒம்மாள... ஒன்ன விடப்போறதா இல்ல. டாய் தாமஸ், மடக்குடா. மொதல்ல அந்த கெயவன பிடிங்கடா. அவள் தானாய் கிடப்பாள். ஏய்... ஆய்... ஊய்..."

சரோசா, திரும்பிப் பார்த்தபோது, அந்த ஆறுபேரும், இன்னும் எங்கேயோ நின்ற இரண்டு பேரும் எட்டாகி, அவர்களை

நோக்கி எட்டடி எட்டடியாய் பாய்வதுபோல் ஓடிவந்தார்கள். அவளையும் நாயினாவையும், அந்தச் சாலையில் எந்தப் பக்கம் திரும்பினாலும் அவர்களை விடப்போவதில்லை என்பதுபோல் மூன்று பேர் பக்கவாட்டிலும், எஞ்சியவர்கள் பின்னாலும் ஓடிவந்தார்கள்.

சரோசா, கத்திக் கத்திக் கதறினாள் : "எங்களைக் காப்பாத்துங்கோ... காப்பாத்துங்கோ... கொல்றதுக்கு முன்னாடி காப்பாத்துங்கோ! கும்மாளம்மா... மாரிம்மா... வேளாங்கண்ணி... காப்பாத்துங்கோ!"

அந்தச் சாலையோரமாய் இருந்த குடியிருப்புகளில் சில விளக்குகள் அந்த வீடுகளை எரியவைப்பது போல் எரிந்தன. ஆனால், கதவுகளோ, ஜன்னல்களோ திறக்கப்படவில்லை. பாவம் சில சொறி நாய்கள்தான் அவளுக்கு உதவிக்கு வருவது போல் ஓடிவந்து, பின்னால் துரத்தும் கும்பல்களையும், பக்கவாட்டில் கொலைத்தனமாய் நடந்த பேர்வழி களையும் பார்த்துக் குலைத்தன. பிறகு அவர்கள் கீழே எதையோ எடுப்பது போல் குனிந்து நிமிர்ந்தபோது, அந்த நாய்கள் வால்களை பின்னங்கால்களுக்கு இடையே செருகிக்கொண்டு ஓடிவந்த வழியிலேயே திரும்பி ஓடின.

சரோசா, தன்னை அறியாமலேயே உயிர் காக்கும் அனிச்சை உணர்வில், நாயினாவை சாலையிலேயே விட்டுவிட்டு ஓடினாள். அரைநிமிட ஓட்டத்திற்குப் பிறகு ஒன்று புரிந்தது. திரும்பிப் பார்த்தால், அவளை "போ... போ..." என்று நாயினா குரலிடுவது கேட்டது. பிறகு அவர் அந்த கொலைகாரக் கும்பலை நோக்கியே, அவளுக்காக அவர் வழிமறிக்கப் போவது போல் நடப்பது தெரிந்தது. சரோசா மனதில் ஒரு வாயுவேக எண்ணம். பர்மா காடுகளில் குழந்தை குட்டிகளை விட்டுவிட்டு ஓடிவந்த மனிதர்களுக்கு மத்தியில், மனைவியையும், பிள்ளைகளையும்

தலையிலும், தோளிலும் தூக்கிப் போட்டுக் கொண்டு விடாப்பிடியாய் வந்தவர் இந்த நாயினா... அவரை அப்படியே விட்டுவிட்டு ஓடுவது, அம்மாக்காரி அடுத்தவனை இஸ்துக்குன்னு போனதுக்கு சமானம். சரோசா நாயினாவை நோக்கி ஓடினாள். "நாயினா... நில்லு நாயினா, நில்லு. ரெண்டு பேரும் ஒண்ணாவே வெட்டுப்படலாம்" என்று கூக்குரல் இட்டபடியே அவரை நோக்கி ஓடினாள். அவள் போட்ட கூச்சலில் புதருக்குள் கிடந்த ஒரு பெருச்சாளி ரோட்டுக்கு வந்தது. துரத்தி வரும் கும்பல் சிறிது நின்று பார்த்தது. சொறி நாய்களே மீண்டும் குலைத்தன.

சரோசா, தப்பிக்கும் திசையிலிருந்து தாக்குதல் திசையை நோக்கி ஓடிஓடி, நாயினாவை நெருங்கி, அவரை அப்படியே கட்டிப்பிடிக்க, அந்த வேகத்தில் இருவரும் கீழே விழுந்தார்கள். "நாயினா... நாயினா..." என்ற அலறல். "மவளே... மவளே" என்ற முனங்கல். பிறகு அலறலும், முனங்கலும் அற்றுப்போன நிசப்தம். என்ன நடந்தாலும் நடக்கட்டும் என்பதுபோல் அந்தப் பட்டமரத்தில் துளிர்த்த கொடி அதிலேயே படர்ந்தது. கொடி முளைத்த மரமும் அந்த கொடிக்குள்ளேயே முடங்கிக் கொண்டது. 'என்ன செய்யணுமோ... செய்யுங்கடா!'

அந்த இருவரையும் சுற்றி, பட்டாக்கத்தியோடு மூன்றுபேர் நிதானமாக ஒரு வெளிவட்டம் போட்டார்கள். ஓணானை கடித்துக் கடித்து விளையாட நினைக்கும் நாய் போல, அவர்களை நிதானமாகக் கூர்ந்து பார்த்தார்கள். தென்கிழக்கில் ஒரு இரும்புத்தடியன், வடமேற்கில் ஒரு கம்புக்காரன். இரை கிடைத்த திருப்தியில், நிதானமாகவும், அழுத்தம் திருத்தமாகவும் நடந்தார்கள். ஆனாலும் -

திடீரென்று ஒரு விசில் சத்தம் ; மூன்று தடவை மூச்சு விடும் அளவுக்கான ஒரு நெடுஞ்சத்தம். அந்த விசில் சத்தம் நின்றதும் ஒரு வாய்ச் சத்தம் :

"டேய்... அப்படியே நில்லுங்க... இந்தப் பக்கம், அந்தப் பக்கம் அசைஞ்சிங்கோ நான் பேச மாட்டேன், துப்பாக்கிதான் பேசும்."

அந்தக் கொலைக் கும்பல் சத்தம் வந்த திசையை நோக்கித் திரும்பிப் பார்த்தது. தொலைவில் கடற்கரை மணல் மேட்டில் 'உங்கள் நண்பன்' காவல் கூண்டிலிருந்து ஒரு டார்ச் ஒளி தெரிந்தது. இன்னொரு கையில் ஏதோ கனமான ஒன்று. நின்றால் பிடிப்பான். ஓடினால் சுடுவான். லோக்கல் போலீசையும், குவாட் போலீசையும் சரிக்கட்டிட்டதாய் அண்ணாத்தே சொன்னாரே... இவன் தலையிலயும் தொப்பிகீது.

"டேய்... பேமானிப் பசங்களா! ஆம்பளையின்னா நில்லுங்கடா."

மிரண்டு நின்ற அந்தக் கும்பல் ஒன்றையொன்று பார்த்துக் கொண்டது. இப்போது 'சுடுவேன்' என்ற சத்தம் வரல. தப்பிப் போறதுக்கு வழி சொல்றது மாதிரி தோணுது.

உயிர் கொல்ல வந்த கும்பல் உயிர் காக்க ஓடியது. அந்த ஒற்றைப் போலீசின் துப்பாக்கிக் குண்டுகள் தலையில் பட்டுவிடக் கூடாது என்பதற்காக பிடறிகளில் கைகளைக் கோத்தபடியே ஓடியது. கீழே உட்கார்ந்து உட்கார்ந்தும், எழுந்து எழுந்தும் ஓடியது.

அந்த போலீஸ்காரரும் ஓடிவந்தார். அவர்கள் ஓடுவதையோ, அந்த போலீசின் பூட்ஸ் சத்தத்தையோ சட்டை செய்யாமல், கீழே அசைவற்றுக் கிடந்த உருவங்களை அவர் உற்றுப் பார்த்தபடி வந்துகொண்டிருந்தார். 'டக்... டக்...' என்ற அவரது காலடிச் சத்தம், அந்த உருவங்களுக்குள் அவர்களே கேட்ட இதயத் துடிப்புச் சத்தங்களில் முங்கிப்போனது.

மதுரைக்கு விடுமுறைக்குப் போய்விட்டு இரண்டு நாட்களுக்கு முன்பு டூட்டியில் சேர்ந்த கான்ஸ்டபிள் திருமலையப்பன்தான் அவர். லத்திக்கம்பால் அந்த உருவங்களைத்

தட்டினார். பிறகு, அவர்கள் கொலை செய்யப்பட்டு அப்படிக் கிடக்கிறார்களோ என்று பயந்துபோய் கீழே குனிந்தார். இதற்குள், சரோசா உடம்பை அசைக்காமலே கண்களை அசைத்தாள். ஒருசாய்த்துப் படுத்துக்கிடந்த தந்தையை தன் மடியிலே போட்டுக்கொண்டு போலீஸ்காரரை மலங்கமலங்கப் பார்த்தாள். அவர் அதட்டினார் :

"ஏய், ஒன் பேரு சரோசாதானே? இளங்கோன்னு ஒருத்தனோட விவகாரம் பண்ணிட்டு லாக்கப்ல இருந்தது நீதானே? என்ன நடந்தது?"

சரோசா, மெல்ல மெல்ல சுய உணர்வு பெற்றாள். நாயினாவை உற்றுப் பார்த்தாள். அவரும் சரி, தானும் சரி, இன்னும் வெட்டுப் படவில்லை என்ற மெய்யுணர்வு உந்த, மெல்ல எழுந்தாள். சுடப்பட்ட கொக்கோடு சுடாமலே செத்துப் போனதாய் அனுமானித்துக் கீழே விழும் கொக்கு போல், கைகளை விரித்து தரையில் கிடந்த நாயினாவை உசுப்பினாள். பிறகு அந்த போலீஸ்காரரின் இரண்டு கால்களையும் கட்டிப் பிடித்துக்கொண்டு, அவர் முட்டிக்காலில் முகத்தைப் புதைத்துக் கொண்டே விம்மி, விம்மிப் பேசினாள்.

"பேசாம என்னை இன்ஸ்பெக்டர் சொன்னாப்போல வேலூருக்கு அனுப்பிடுங்க சாரே; வாழ்ந்தும் பிரயோசனமில்ல. இருந்தும் பிரயோசனமில்ல சாரே. அண்ணாத்தே என் ரத்தத்தக் குடிக்கத் துடிக்கான் சாரே. நாயினா! நாயினா! நாம நாளைக்கி எப்படியோ, இன்னிக்கி பிழைச்சிட்டோம், நாய்னா!"

திருமலையப்பன், அவளின் நாயினாவை தூக்கி நிறுத்தினார். கீழே கிடந்த கோணிப்பையை எடுத்து அவர் முதுகில் போர்த்தினார். அந்தப் போர்வையின் மேல் தன் உடம்போடு கிடந்த கம்பளியை எடுத்துப் போட்டார்.

"நல்ல வேளை, பீட்டுக்கு டூட்டி போட்டதுனால பிழைச்சிங்க. சரி, என் பின்னால நடங்க. சாப்பிட்டீங்களா?"

சரோசா எதுவும் பேசாமல் நாயினாவை தோளில் சாய்த்துக் கொண்டு திருமலையப்பனைத் தொடர்ந்தாள். மூவரும் மணல் மேட்டுக்கு வந்தார்கள். அவர் 'உங்கள் நண்பன் கூண்டை'த் திறந்தார். நாயினாவை தோளைப் பிடித்து அழுத்தி, அவரே கீழே உட்கார வைத்து, மரச்சுவரில் சாய வைத்தார். பிறகு சரோசாவை 'நடந்ததைச் சொல்' என்பது மாதிரி பார்த்தார். கீழே உட்கார்ந்திருந்த சரோசா அவரை அண்ணாந்து பார்த்தாள். பார்க்கப் பார்க்க பயம் போய் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. மனச்சுமையை சொல்லிச் சொல்லி அதை குறைத்தாள். இளங்கோவிடம் சுருக்கமாகச் சொன்ன தனது வரலாற்றை, அவரிடம் விலாவாரியாகச் சொன்னாள். ஒவ்வொரு கட்டத்திலும் 'ஆருமே இல்லாமே பூட்டோமே சாரே' என்று மூச்சு முட்டச் சொன்னாள். அத்தனையும் சொல்லிவிட்டு அதற்குமேல் எதுவும் இல்லை என்பதுபோல் அவரை வெறுமையோடு பார்த்தாள். அவள் கதையை பேச்சற்றுக் கேட்ட திருமலையப்பன், ஐந்து நிமிட மவுனத்திற்குப் பிறகு அறிவுரை சொன்னார்:

"இனிமேல் இந்தப் பக்கம் இருந்தீங்கன்னா, ஒங்க உயிருக்கு ஆபத்துதான். எங்கே இருக்கப் போறதா உத்தேசம்?"

"அதான் சார் புரியலே"

"ஒரு வாரத்துக்கு நீ சொல்றியே ருக்குமணி அவள் வீட்டுல உன்னால தங்க முடியுமா? அப்படி முடிஞ்சா, நல்லது. அதுக்குள்ளே நானும், கமிஷனர் ஆபீஸ் க்ரைம் செக்ஷனுக்கு ஒன் பேர்ல ஒரு மனு தயாரிக்கிறேன். லோக்கல நம்பிப் பிரயோசனமில்ல... தின்னிப் பசங்க. ஒன் அண்ணாத்தைய பத்தி விவரமா எழுதறேன்."

"அப்போ, எங்க உயிருக்கு கேரண்டிதானே சாரே?"

"தலைவருங்க உயிருக்கே கேரண்டி இல்லாத காலத்துல, பாவம் ஒன்னமாதிரி தலை காஞ்சவங்களுக்கு எந்தப் போலீஸ்,

பாதுகாப்பு கொடுக்கும்? என் லெவல்ல ஏதோ செய்யறேன். நீங்க எச்சரிக்கையா இருக்கதுலதான் ஒங்க பாதுகாப்பு இருக்குது. உயிர கையில பிடிச்சிருக்கதா சொல்லுவோமே. அது ஒங்களுக்கு நிசமாயிட்டு."

ஒரு போலீஸ்காரரே, இப்படிப் பேசுவதைப் பார்த்து, மீண்டும் உயிர்ப்பயம் கொண்ட சரோசா, முட்டிக்கால்களில் முகம் போட்டபடியே கிடந்தாள். நாயினா, அவள் முதுகைத் தட்டிக் கொடுப்பதுபோல் தோன்றியது. அதுவே அவளுக்கு தாலாட்டுப் போலவும் ஒரு சோகச் சுவையைக் கொடுத்தது.

கதிரவன் நீரில் குளித்து, நிலத்தில் ஏறி, ஆகாயத்தில் தாவியது. சரோசாவும், நாயினாவும் முன்னால் நடக்க திருமலையப்பன் அவர்களுக்கு இடைவெளி கொடுத்து பின்னால் நடந்தார். பட்டப்பகலில் அவர்களுக்கு ஆபத்தில்லை என்றாலும், அங்குமிங்கும் பார்த்தபடியே நடந்தார். பூக்கார ருக்குமணியின் தெருவிற்கு வந்தபோது அவர் தெரு ஓரத்திலேயே நின்றுகொண்டார். சிறிது நேரத்திற்குப் பிறகு போய்விட்டார்.

## 25

ருக்குமணி, தெருவிலேயே நின்றுகொண்டிருந்தாள். அவள் அருகே ஒரு அகலமான பொம்மனாட்டி. அடடே அந்த தடிச்சியா? இளங்கோ சாரோட அம்மாவா?

சரோசா, அவளை அடையாளம் கண்டதுபோல், பாக்கியம்மாளும் அவளை அடையாளம் கண்டுகொண்டாள். ருக்குமணி சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல்

திக்குமுக்காடியபோது, அவள் புருஷன் கோவிந்து, வெளியே வந்து சரோசாவைப் பார்த்து சந்தோஷமாகப் பேசினான் :

"இன்னாம்மே, சரோ, புடிச்சாலும் புடிச்சே புளியங்கொம்பாப் புடிச்சே! பிடிய விட்டுடப்பிடாது... அந்த பிள்ளக்கா பையன் இளங்கோ, ஒன்ன லாக்கப்புல வச்சாலும் வச்சான், அப்பால அதுக்கு அபராதம் கட்டுறாப்புல ஒன்ன கவருமெண்டு வேலையிலயும் வச்சுட்டான். நினைக்க, நினைக்க ஒரே கிக்காக்கீது."

பாக்கியம்மா, சரோசாவையும், ருக்குமணியையும் மாறி மாறிப் பார்த்தாள். பிறகு ருக்குமணியை அடிக்கப்போவது போல் கைகளை ஆட்டியபடியே கத்தினாள்.

"ஏண்டி, சில்லாட்டே, நேத்துக்கூட இவள் வேலூர்ல இருக்காள்னு சொன்னே; வெளியில வாரதுக்கு ஆறு வருஷம் ஆகும்னு இளங்கோ சொல்லும்போது, நீயும் ஆமாம் போட்டே. இவள் என்னடான்னா தேங்கா கொழுக்கட்ட மாதிரி இப்படி நிக்கா. என்னடி மூடுமந்திரம்? என் அப்பாவி மவன எதுக்குடி இப்படி மடக்கிப் போட்டு இருக்கீங்க? சொல்லுடி! சொல்லுங்கடி!"

இயல்பிலேயே யானை மாதிரி தோற்றம் கொண்ட பாக்கியம்மா, அதற்கு ஏற்றாற்போல் இரண்டு கைகளையும் தும்பிக்கை மாதிரி ஒன்றாக்கிக்கொண்டு 'கராமுரா' சத்தத்தோடு நின்றாள். 'பூக்காரி பய மவள் பேசட்டும்' என்று கர்ஜனையோடு காத்திருந்தாள். ருக்குமணியோ, செய்வதறியாது திகைத்தாள். இரண்டு நாட்களுக்குமுன் பாக்கியம்மா வீட்டுக்கு சாயங்காலமாய் வாடிக்கை பூ கொண்டு போனபோது, தாய்க்காரி, இவளுக்குக் கேட்கும் குரலில் இளங்கோவிடம், "ஏண்டா, என்னையும், ஒன்னையும் அடிச்சுப் போட்டுட்டுப் போன சேரிக்காரிய, ஒன்னோட ஆஸ்பத்திரி ரூம்ல பார்த்ததாய் ஒங்கப்பா இவ்வளவு நாளைக்கிப்

பிறகு இன்னிக்கிச் சொல்றார்" என்று கேட்டாள். ருக்குமணி கூட திடுக்கிட்டு கூடையிலிருந்து எடுத்த பூவை பாம்பு மாதிரி சுருட்டி வைத்தாள். இளங்கோ சிறிது அசந்துவிட்டு பிறகு "அப்பாவைப் பத்தி ஒனக்குத் தெரியாதம்மா? அரை மணி நேரத்தில் சாப்பிட்டது என்னன்னு கேட்டாக்கூட அவருக்குத் தெரியாதே. அந்த சரோசா நம்மக்கிட்ட தப்பிச்சிட்டாலும் ஒரு கொல கேசுல மாட்டிக்கிட்டு வேலூர்ல இருக்காள். திரும்பி வர்றதுக்கு ஆறு வருஷம் ஆகும்" என்றான். அதோடாவது அவன் விட்டிருக்கலாம்; "வேணுமுன்னா நம்ம ருக்குமணியைக் கேளு" என்றான். உடனே ருக்குமணியும் 'ஆமாம்' போட்டாள்.

அப்போது பாக்கியம்மாளும், அவர்கள் பதிலில் சமாதானம் ஆனவள்போல், அங்கில்லாத கணவனை ஒரு பிடிபிடித்தாள். "பாவி மனுஷன் எனக்குன்னு வாய்ச்சாரு பாரு. ஆட்கள அடையாளம் காணுறது அவருக்குக் குதிரக்கொம்பு மாதிரி. ஒரு தடவ கோயிலுக்குப் போனோம். நானுன்னு நினைச்சி, அம்பாள் குங்குமத்த இன்னொருத்தி நெத்தியில வெச்சி, கைய ஒடிக்க கொடுத்தவரு. இவரையும் வேலூருக்கு அனுப்பணும். அப்பதான் என் மனசு ஆறும்."

இந்தப் பின்னணியை யோசித்துக் கொண்டிருந்த பாக்கியம்மாளுக்கு, இப்போது கோபம் கொந்தளித்தது. கணவனே கை நீட்டாத தன்னை அடித்துப் போட்டவள், வேலூரில் இருக்காமல் இதோ விலாப்பக்கம் நிற்கிறாள்! இந்தப் பூக்கார முண்டையும், அந்தப் பையித்தியக்காரப் பய இளங்கோவும் தன்னைப் பைத்தியமாக்கி விட்டதில் ஆவேசம். பேசாத பூக்காரியைப் பார்த்து, இவளே பேசினாள். ஆசை மகளுக்கு நிச்சயமாகி விட்டதால், நாளை நிச்சயதாம்பூலத்திற்காக, பூவுக்குச் சொல்ல வந்தவள், இப்போது சாவுக்குச் சொல்பவள்போல் சொன்னாள் :

"ஏண்டி பூக்காரி, ஒய்யாரக் கொண்ட! எனக்கு இப்பவே தெரிஞ்சாகணும். எதுக்குடி பொய் சொன்ன? அந்த அப்பாவிப் பயலுக்கு இவள நீ கூட்டிக்குடுத்தியா, இல்ல இவள் ஒன்னைக் கூட்டிக் குடுத்தாளா? சொல்லுடி. எதுக்குடி என் அப்பாவிப் பையனோட சேர்ந்து நாடகம் போட்டே?"

பூக்கார ருக்குமணி, சரோசாவைப் பார்த்தாள். அவளோ, இப்படிப் பேசியதற்கு பழையவளாக இருந்திருந்தால், கெய்வியை பின்னியிருப்பாள் பின்னி. இப்போது முடியவில்லை. ஆனாலும், இளங்கோ சாரோட அம்மாவாச்சே. பால பார்க்கிறதா, இந்த பாலுப் பானை வயித்தப் பார்க்கிறதா? சரோசா நாயினாவின் முதுக்குப் பின்னால் தலையை குனித்துக் கொண்டாள். கோவிந்துதான், பாக்கியம்மா கண்ணுக்கு முன்னால் விரல்களை ஆட்டியபடியே பேசினான். இப்போது அவன் வயிற்றுக்குள் சாராயம் இல்லை, பசிதான் இருந்தது. அதுவும் கோபத்தைக் காட்டியது.

"பெரிய மனுஷி பேசற பேச்சா இது? ஒன் வயசுக்காக விட்டு வைக்கேன். எனிக்குக் கோபம் வர்றதுக்கு முன்னாடி மரியாதையா பூடு."

ருக்குமணி, கணவனைப் பிடித்து ஒரு ஓரமாகத் தள்ளினாள். அப்போது பாக்கியம்மாள் போட்ட கத்தலில் அக்கம் பக்கம் சந்தோஷப்பட்டுத் திரண்டது. பாக்கியம்மா, கோவிந்தை இளக்காரமாய் பார்த்தபடியே பதிலடி கொடுத்தாள்.

"பெண்டாட்டி பவுசு தெரியல, நீயெல்லாம் ஒரு ஆம்பளையா? என் மகனப் பார்க்கும்பொதெல்லம், இவள் எதுக்கு கிசுகிசுன்னு பேசினாள்னு கேளு. இதோ, கோவில் மாடு மாதிரி தெருவில் திரியுறவள, எதுக்காக ஜெயிலுல இருக்கறதா பொய் சொன்னாள்னு கேட்டுப்பாரு. அப்போதான் நீ நெசமான ஆம்புள."

கோவிந்துக்கு, லேசாய் கலக்கம் ஏற்பட்டது. ஆமாம், இந்தப் பெரியம்மா சொல்றாப்புல இந்த ருக்கு எதுக்குப் பொய் சொல்லணும்? அறியாத பிள்ளாண்டானோட எதுக்கு இவள் கிசுகிசுக்கணும்? பழைய பாடாதி படமானாலும் நேத்துப் பார்த்த தூக்குத்தூக்கி சினிமாவுல கொலையும் செய்வாள் பத்தினின்னு நிரூபிச்சாங்களே; அப்படிப்பட்ட பத்தினியா இவள்? அதான் நான் நைட்டுல ஆசையா கூப்பிட்டா, கழுத்தப் பிடிச்சி வெளியில தள்ளுறாளா?

கோவிந்து கோபமாகப் புலம்பினான் : "ஏம்மே, பெரிம்மா பேச்சுக்கு பதில் சொல்லும்மே. இல்லாட்டி அந்தம்மா கேட்டதெல்லாம் நானு கேட்டதா அர்த்தம். ஏம்மே சொம்மா வாய்செத்து நிக்கே? ஒனிக்கி அந்தப் பிள்ளக்காப் பையன், ஒசத்தியா பூட்டான், ஒரு பவுனு தாலிபோட்ட நானு மட்டமா பூட்டேனா?"

ருக்குமணி, இடுப்பிலிருந்த கையை எடுத்து கன்னத்தில் வைத்தாள். சொன்னால் எல்லாவற்றையும் சொல்ல வேண்டும். அதுவே மீண்டும் போலீஸ் விவகாரமாகி, சரோசாவுக்கு விகாரமாகும். சொல்லாவிட்டால் இதுவரைக்கும் குடிகாரனாய் மட்டும் இருக்கும் ஆம்புடையான், கொலைகாரனாய் மாறுவான்.

"ஏய் ஒன்னத்தாம்மே, ஒனிக்கு யாருமே புருஷன்?"

"அவள் எப்படிப்பா பதில் சொல்லுவா? திருடனுக்குத் தேள் கொட்டினதுமாதிரி இருக்கும். ஏண்டி, போயும் போயும் என் அப்பாவி மகன்தானா ஒனக்குக் கிடைச்சான்? கெடக்க முடியாட்டி வேறு எவனையாவது பிடிக்க வேண்டியதுதானேடி. ஒன் மூடு மந்திரத்த கட்டுன புருஷன்கிட்டயாவது காட்டுடி."

கோவிந்து, பாக்கியம்மாளின் ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒவ்வொரு அடியாய் கீழே குனிந்து, அரிவாள்மனையை எடுத்தபடி நிமிர்ந்தான். அதைப் பார்த்த ருக்குமணியோ சிறிதும்

அலட்டிக்காமல் வீறாப்புடன் நின்றாள். இதைப் பார்த்த சரோசா, நாயினாவின் முதுகுப் பக்கத்திலிருந்து அவரது மார்புப் பக்கம் வந்தாள். பாக்கியம்மாளின் ஒரு கையை கெஞ்சுதலாய் பிடித்தபடியே, விவரம் சொன்னாள் :

“நானு சொல்றேன் பெரிம்மா. பாவம் இந்த ருக்கு... எனிக்காக பழி சொமக்காள். நடந்ததைச் சொல்றேன் கேள். ஒன் பிள்ளாண்டான் ஒத்தாசையிலதான் நானு விடுதலையானேன். எனக்குத் தெரியாது. அதனால, அது என்னோட ஏரியாவுல என்ன பாலோ பண்ணுறதா நெனச்சு, அதை ஆளுங்க வச்சு அடிக்க வச்சேன். அதுக்கு ஆக்ஸிடெண்ட் ஏற்பட்டதாச் சொன்னது பொய். பாவம், இந்த ருக்குமணி என்ன மொதல்ல போலீசுல பிடிச்சுக் குடுக்கப் போனாள். அவ கையில காலுல விழுந்து, ஒன் மவன ஆஸ்பத்திரியில சேர்த்தோம். அதுவும் என்ன மன்னிச்சி, இப்போ கவர்மெண்ட் வேல கொடுத்திருக்கு. இந்த ருக்குமணி மட்டும் இல்லாட்டி, ஒன் பிள்ளாண்டானிக்கி போட்டோவுல இன்னேரம் நீ பூப் போட்டு இருப்பே. ஒன் பிள்ளாண்டானுக்கும் எனக்கும் கூடப் பொறக்காத பொறப்பாப் பழகின இந்த ருக்கு, ஒழுக்கம் கெட்டவள்னா, பூலோகத்துல எந்தப் பொம்மனாட்டியும் ஒழுக்கமா இருக்காது. தடிமாடு மாதிரி திரிஞ்ச எனக்கி, வழிகாட்டுனது இளங்கோ சாரும், இந்த ருக்கும்தான். நான் சொல்றத சொல்லிட்டேன். அப்புறம் ஒன்னோட இஷ்டம். இந்த ருக்குவையும் ஏசுநாதர மாதிரி சிலுவையில அறைஞ்சிடாதே.”

பாக்கியம்மா, சரோசாவை கண் ஆடாமலே பார்த்தாள். ஆனாலும், அவளுக்கு ஏசுநாதர் சிலுவை என்பதெல்லாம், மனோ எல்லைக்குள் பிரவேசிக்க முடியாத விவகாரங்கள். இந்த சேரிப் பிசாசு, தன் மகனை ஆள் வச்சு அடித்திருக்கிறாள் என்ற எண்ணமே அவளுக்கு மேலோங்கியது. எதிரி இளக்காரமாய் நினைக்கும்படி

அவளுக்கே வேலையும் வாங்கிக்கொடுத்த மகனின்மீது எரிச்சல் வந்தது, அந்த எரிச்சல் அந்தப் பெண்களை எரிக்காமல் எரித்தது :

"ஆகக்கூடி, ரெண்டு தட்டுவாணிகளும் தர்மரு மாதிரி இருந்த என் மவன பாடாபடுத்தி இருக்கீங்க. ஏண்டி ருக்கு, எல்லாமே முடிச்சிட்டியா, இனிமேத்தானா?"

"இந்தா பாரு பெரிம்மா, என்னப் பேசு, வேணாங்கலே. காறித் துப்பு, கண்டுக்கல. இந்த ருக்கப் பத்திப் பேசின, மரியாதையில்ல. எனிக்கி ஒன் மகன் கொடுத்த வேலையைவிட இந்த ருக்குவோட மானம்தான் பெரிசு."

"என்னடி செய்வே எருமைமாடு?"

"எங்கே இன்னொருவாட்டி இந்த எருமைமாடு கேக்கும்படியா சொல்லு பார்க்கலாம்; வாயி வெத்துல பாக்கு போடுதா, இல்லியான்னு பாத்துடலாம்."

பாக்கியம்மாளுக்குப் பயம் வந்தது. பழைய அனுபவத்தை மனதில் வைத்தபடி, வேகவேகமாய் நடந்தாள். திரும்பிப் பார்க்காமலே போலீஸ் நாய் போவதுபோல் போனாள். தெருமுனையில் மட்டும் நின்று ஆங்காரமாகத் திரும்பினாள். ருக்கு சரோசாவின் மார்பில் தலை போட்டுப் புரண்டாள். கோவிந்து தனது தலையிலேயே அடித்துக் கொண்டான். அக்கம்பக்கங்கள், பாக்கியம்மாவை விட்டிருக்கக் கூடாது என்று உபதேசித்தன.

# 26

பாக்கியம்மா, கால்களை குலுக்கிக் குலுக்கி நடக்கவிட்டு வீட்டுக்குள் வந்தபோது, வெளியே சட்டைப் பட்டன்களைப் போட்டபடியே புறப்பட்ட கணவன் சுப்பையாவை, உள்ளுக்குள் தள்ளினாள்.

"பாவி மனுஷா! ஒம்ம புத்தியாலதான், நான் நாயிகிட்டயும், பேயிகிட்டயும் சீரழியறேன். ரமணன் அண்ணாச்சிய உடனே வரும்படி, டெலிபோன் செய்யும்."

"ஒரு காலு ஒரு ரூபாய். கவர்மெண்டு சிக்கனத்தக் கடைபிடிக்கச் சொல்லி இருக்காங்கோ. நானே போயி கூட்டிக்கிட்டு வாறேன். ஏன் இப்படி தங்குதங்குன்னு குதிக்கிறே?"

"அதையாவது தெரிஞ்சு வைச்சிருக்கீங்களே. முதல்ல சொன்னதச் செய்யுங்க. டெலிபோன்ல நான் சொன்னேன்னு ரமணன் அண்ணாச்சிய வரச்சொல்லுங்க."

"ஏன், நான் சொன்னேன்னா வரமட்டாரோ?"

"என் தலைவிதி, ஒம்ம மாதிரி லூசு மனுஷன கட்டி, பயித்தியக்கார மவனப் பெத்து சீரழியறேன். இன்னுமாய்யா, டெலிபோன் பண்ணல?"

சுப்பையா, மிரண்டுபோய் டெலிபோன் இருக்கும் அறைக்குள் போனார். நாளை நடைபெறவுள்ள நிச்சயதாம்பூலத்திற்கு கதாநாயகியாகும் செல்லமகள் மல்லிகா, அம்மா போட்ட கூச்சலில் மிரண்டு போய் தன்னைப் பிடிக்கவில்லை என்று பிள்ளை வீட்டார் சொல்லி இருப்பார்களோ என்ற சந்தேகம் எழ, பதில் கூச்சல் போட்டாள்:

"எனக்குத் தெரியும் இந்தக் கல்யாணம் நடக்காதுன்னு. நேத்து நீ போட்ட சத்தத்திலேயே அவரு பயந்து ஒருமாதிரி ஆயிட்டாரு."

"இந்த வீடே ஒரு பயித்தியக்கார ஆஸ்பத்திரி. ஒனக்கு இப்பவே புருஷனப் பத்தின அவ்வளவு அக்கறை. எனக்கு வாய்ச்ச இடிச்சபுளி மாதிரி ஒனக்கு வாய்ச்சிடப்பிடாதேன்னு எனக்கு அக்கறை. யோவ் பாவி மனுஷா, டெலிபோனை ஏய்யா, தோளுல வச்சிக்கிட்டு பித்துப்பிடிச்சி நிக்குறீங்க? டேய் இளங்கோ, நில்லுடா. அப்படியே நில்லு, ஒரு ஒடி நகரப்படாது."

இளங்கோ, குளியலறையில் இருந்து வெளிப்பட்டு, அப்படியே நின்றான்.

"ஏண்டா முளைச்சி மூணு இலை விடல, பெத்தெடுத்த தாய்கிட்டயே நாடகம் போட்டுட்டியே. எதுக்குடா அந்த சேரி ரவுடி என்ன ஆள்வெச்சு அடிச்சத என்கிட்ட சொல்லல? அதுக்குப்பிறகும் அவளுக்கு ஒன் ஆபீசுலயே வேலை வாங்கிக் கொடுத்திருக்கே. அப்பதான் அவள் பழையபடி ஒன்ன அடிக்கமாட்டான்னு நினைக்கிறியா? நீயெல்லாம் ஒரு மனுஷனாடா? ஒங்கப்பன் புத்திதானே ஒனக்கும் இருக்கும்."

பாக்கியம்மா, மேலும் அடுக்கிக்கொண்டே போயிருப்பாள். அதற்குள் மிஸ்டர். ரமணன் அவசரத்தில் லுங்கி பனியனோடு வந்தார். அவருடன் பாமா ஆபீஸ் மேக்கப்போடு வந்தாள். பாக்கியம்மா, அவரிடம் முறையிட்டாள் :

"தப்புப் பண்ணிட்டியளே அண்ணாச்சி, தப்புப் பண்ணிட்டியளே. இந்தப் பயல அந்த சேரி ராட்சசி ஆளு வச்சு அடிச்சிருக்காள். அத அந்த தட்டுவாணி ருக்குமணி ஆக்ஸிடெண்டுன்னு சொல்லிட்டாள். நீங்களும் நம்பிட்டியளே, மோசம் போயிட்டியளே."

மிஸ்டர் ரமணன் திடுக்கிட்டார். இந்தம்மா எதுக்காக, தான் ஏதோ தப்பு செய்தமாதிரி குதிக்கிறாள்? வாட் இஸ் திஸ்?

"என்னம்மா நடந்தது? படபடக்காம சொல்லுங்க. எந்தப் பிரச்சினைக்கும் ஒரு முடிவு உண்டு. எந்த முடிவுக்கும் ஒரு பிரச்சினை உண்டு."

"நான் பெத்த பிள்ளைய ஏன் பெத்தோம்னு ஆயிட்டுதே அண்ணாச்சி. இவன், தன்ன ஆளு வச்சி அடிச்ச அரக்கிக்கு, அவள் காலுல விழுறதுமாதிரி வேலையும் வாங்கிக் கொடுத்து, ஒங்களையும் என்னையும் காலால இடறிட்டானே."

"விவரமா சொல்லும்மா, நானிருக்கேன். சொல்லுங்கோ! படபடப்பு கூடாது. மிஸ்டர் சுப்பையா, என்ன இது? இந்தச் சமயத்தில வெளியில போகப் பார்க்கிறீங்களே, உட்காருங்கோ."

பாக்கியம்மாவால் நின்றுகொண்டு பேச முடியவில்லை. சோபா செட்டில் உட்கார்ந்தாள். அருகில் உட்கார்ந்த மல்லிகாவின் தோளில் கையைப் போட்டபடியே, பூக்காரி வீட்டில் நடந்தவற்றை விவரித்தாள். அதேசமயம், அங்கே தான் பேசியதை 'எடிட்' செய்து தன்னை நாகரீகமாகவும், அப்பாவியாகவும் காட்டிக்கொண்டு, சரோசா பேசியதை கொஞ்சம் பொய் கலந்து ஒப்பித்தாள். பிறகு, ரமணனிடம் முறையிட்டாள்.

"என் தர்மப்பிரபுவ - அதான் இந்த அப்பாவிப் பயல - கொலை செய்யப்போன அந்த சேரி முண்டைய இப்பவே போலீசுல பிடிச்சுக் குடுக்கணும் அண்ணாச்சி. உடனே உங்க ஆபீஸர் ஆளுக்கு போன் போடுங்க அண்ணாச்சி. ஏண்டா இளங்கோ, இப்பவே நீயும் டெலிபோன்ல பேசி அவா வேலையை நிறுத்தலைன்னா, நான் ஒனக்குத் தாயும் இல்ல, நீ எனக்கு மவனுமில்ல. ரமணன் அண்ணாச்சி, ஏன் பேசமாட்டேங்கிறீங்க?"

இப்போது ரமணனின் முகம் விறைப்பானது. மகள் பாமாவையே பார்த்தார். உடனே அவள், முந்தானையை அது அத்துப் போவதுபோல் எடுத்து கண்ணைத் துடைத்துக்கொண்டு தள்ளாடி எழுந்தாள். பிறகு கம்பீரமாக நின்றாள். வாசலுக்கு வெளியே போய் நின்றுகொண்டு, நீதிபதியின் தீர்ப்புக் குரலில் பேசினாள் :

"வாங்க டாடி. இனிமேல் இந்த வீட்டுக்கும் நமக்கும் சம்பந்தமில்லை. எப்போ நான் மலையா நம்பின ஒருத்தர், என்கிட்ட எதுவுமே சொல்லாமல், என்னை முட்டாளாக்கினதா தெரிஞ்சுதோ, அதுக்குப் பிறகும் உறவு வச்சுக்கறது நம்ம சுயமரியாதைக்கி சரியா வராது. நான் சுயமரியாதைக்காரி. நாளைக்கி அந்த சேரி கேர்ள் என்னையும் அடிப்பாள். இவரு அதுக்காகவே அவளுக்கு வேலையில ப்ரமோஷன் போட்டுக் கொடுப்பார். ஒருதலை நம்பிக்கை ரொம்ப மோசம். டாடி! இன்னுமா அந்த வீட்டுக்குள்ள இருக்கீங்க? உங்களுக்கு சுயமரியாதை இல்லியா?"

ரமணன், தனது சுயமரியாதையை நிரூபிக்க எழுந்தார். எவரையும் திரும்பிப் பார்க்காமலேயே வாசலுக்கு வெளியே வந்தார். பாமா அவரை இழுத்துக்கொண்டு போவது தெரிந்தது. இளங்கோ பல்லைக் கடித்தான். கடைசியில் இந்த சரோசா, நாயை குளிப்பாட்டி நடுவீட்டில் வச்ச கதையா ஆகிட்டுதே!

## 27

சரோசா தோளில் கறுப்புக் கயிறு போட்ட சிவப்பு பிளாஸ்கை தொங்கப் போட்டுக் கொண்டிருந்தாள். அந்த பிளாஸ்க் வயிற்றுக்கு மேலே அங்குமிங்குமாய் ஆடியது. அவளது இரண்டு கரங்களிலும் இரண்டு பொட்டலங்கள். கிட்டத்தட்ட சர்க்கஸ்காரி மாதிரி உடம்பை பாலன்ஸ் செய்துகொண்டு அலுவலகத்திற்குள் போனாள். அரசாங்க காண்டீன் சரியில்லை என்று வெளியே ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஓட்டலில் வாங்கிக்கொண்டு வரச் சொல்லியிருந்தார்கள். அவள் அலுவலகத்திற்குள் வந்ததும் வராததுமாக பலர் நச்சரித்தார்கள். அவள் ஏற்கனவே குடித்து முடித்துக் கிடந்த எச்சில் கிளாஸ்களை ஒவ்வொரு விரலுக்கும் ஒவ்வொன்றாக எடுக்கப் போனபோது

கிரேடு - டூ கிளார்க்கும், டைபிஸ்டுமான கனகா மேஜையைத் தட்டியபடியே கத்தினாள் :

"ஏய் சரோ, இந்த மொட்ட டைப்ரைட்டர் சரிப்படல. ஜெனரல் செக்ஷன்ல போய் வேற டைப்ரைட்டர எடுத்துட்டு வரச்சொன்னேனே, ஏன் கொண்டுவரல?"

"போனேம்மா, ஒரிஜினல் பியூன் போனால்தான் கொடுப்பாங்களாம்."

"ஒன்னப் பார்த்தாலே யாருக்கும் கொடுக்கணுமுன்னு தோணாது. அப்துல்லா, இவள கூட்டிக்கிட்டுப் போ."

"எனக்குக் கல்யாணம் ஆயிட்டும்மா, ஆனாலும் பாதகமில்ல."

"அது ஒங்க இரண்டு பேரோட இஷ்டம். நீதான் பெரிய ஆளுன்னு எல்லாருக்கும் தெரியுமே. சரி, இவள கூட்டிக்கிட்டுப் போய் தோளுல டைப்ரைட்டர ஏத்திவிடு."

"இப்பத்தானே மணி பதினொண்ணு ஆகுது. இதுக்குள்ளயா ஆளுங்க வந்துடுவாங்க? அப்படியே வந்திருந்தாலும் காண்டினுக்குப் போயிருப்பாங்க. அப்புறமா பார்க்கலாம்."

"ஏய் சரோசா, இதோ பாரு என்னோட நாற்காலி எப்படி இருக்குதுன்னு, ஏன் தொடைக்கல?"

வேலைக்காரப் பெண்ணின் சம்பளப் பாக்கியை, அந்த அலுவலகம் மூலமாக சரிக்கட்ட முயன்ற இன்னொரு கிளார்க் வனஜா, சும்மா சொல்லிவைப்பது போல் சொன்னாள்:

"இது தேறாத கேஸ்ப்பா, ஒழுங்கா இருந்த இளங்கோவுக்கு ஏன்தான் இப்படி புத்தி கெட்டுப் போச்சோ?"

எச்சில் கிளாஸ்களோடு நின்ற சரோசா, அவர்களை எரிச்சலோடு பார்த்தாள். அவற்றை அவர்கள் மேலே வீசக்கூடிய

அளவுக்கு அவள் கைகள் உயர்ந்தன. செம்மண் நிறத்தில் அடியும் தலையும் ஒரேமாதிரி ஆங்காரமாகப் பார்த்த அப்துல்லாவை நோக்கினாள். டைப்ரைட்டரைத் தட்டுவதற்குப் பதிலாக உதடுகளில் விரலை வைத்துத் தட்டிய வனஜாவைப் பார்த்தாள்.

அலுவலகத்திற்கு சம்பந்தம் இல்லாத ஏதோ ஒன்றை அவசர அவசரமாக டைப் அடித்துக் கொண்டு பிடரியை மட்டும் பூவோடு சேர்த்துக் கட்டிய கனகாவைப் பார்த்தாள். நமுட்டுச் சிரிப்புச் சிரித்த அக்கௌண்டன்ட் ராமசாமியை தனித்துப் பார்த்தாள். பிறகு அடைக்கலம் தேடுவது போல், எதையுமே காதில் போட்டுக் கொள்ளாமல், ஒரு டெலிபோனை குடைந்து கொண்டிருந்த தலைமை கிளார்க் எட்வர்ட்டைப் பார்த்தாள். எல்லாரும் எல்லாமும் எதிரித்தனமாகத் தோற்றம் காட்டின. ஆனாலும், அவள் தலையை தொங்கப்போட்டபடியே எச்சில் டம்ளர்களோடு குளியல் அறைக்குள் போனாள். பத்து நிமிடம் கழித்து கப்புகளிலிருந்து நீர் சொட்டச் சொட்ட உள்ளே வந்தாள். தலை தாழ்த்தியபடியே பிளாஸ்கைத் திறந்து காபி டம்ளர்களை நிரப்பினாள். இதுவரைக்கும் அந்த அலுவலகத்திற்கும், தனக்கும், குறிப்பாக அவளுக்கும் தனக்கும் ஒட்டோ உறவோ கிடையாது என்பதுபோல் வஸ்தாது நாற்காலியில் உட்கார்ந்திருந்த எட்வர்ட் இப்போது கத்தினார்:

"ஒரு காபி கொடுக்கிறதுக்கு எவ்வளவு நாழிம்மா? இப்படியிருந்தா கட்டுபடியாகாது."

"ஏய் சரோ, பேரு மட்டும் பெரிசா வச்சா போதுமா? டம்ளருக்கு வெளியில கைய வச்சுப் பிடி. உள்ள விரல விட்டுக் கொண்டுவர்றியே, ஒன் டீயே வாணாம்."

"இந்தாம்மா, காபி ஏன் ஐஸ் மாதிரி இருக்குது? ஒன் கை பட்டாலே எல்லாமே கோளாறாயிடும் போலிருக்கே. ஒன்ன மாதிரி காபிக்கும் சூடு சொரணை இல்லாமப் போச்சே."

சரோசா கடைசியாகப் பேசிய பியூன் அப்துல்லாவை கடைசியாகப் பார்ப்பதுபோல் கோபத்தோடு பார்த்தபோது, இன்னொரு கிரேடு டூ கிளார்க் மோகன் பொதுப்படையாக விளக்கமளித்தான் :

"இந்த பிளாஸ்க் சரியில்லாட்டா, அந்தப் பொண்ணு என்ன பண்ணும்? சர்க்கார் தலையின்னா எல்லா காண்ட்ராக்ட்காரன்களும் மொட்டையடிச்சிடுறான். எழுதாத பால்பாயிண்ட்; இங்க் உறிஞ்சுற பேப்பரு; முனை இல்லாத குண்டூசி. தட்டிக்கேக்க நாதியில்ல. எனக்கு எதுக்கு வம்பு. கமிஷன் வாங்கியிருக்காங்கன்னு சொன்னாலும் அதை நிரூபிக்க முடியாதே."

மோகன் தன்னை குறிவைப்பதைப் புரிந்துகொண்ட அக்கௌண்டன்ட் ராமசாமி அவனிடம் ஏற்பட்ட செல்லாக் கோபத்தை சரோசாவிடம் செலாவணியாக்கினார் :

"இந்தாம்மா, ஸ்டேஷனரி சாமான்களை வாங்கிக்கிட்டு வரச்சொன்னேனே... ஒன் காது செவிடா?"

"எங்க போயி வாங்கணும்னு தெரியல சார். ஒரு வாட்டி காட்டினா போதும்."

"ஒனக்கு எல்லாமே நான் கத்துக்குடுக்கணும்னு சொல்லுவ போலிருக்கே!"

அக்கௌண்டன்ட் ராமசாமியைப் பார்த்து, வனஜாவும், கனகாவும் செல்லமாகச் சிரித்தார்கள். தலைமை கிளார்க் மட்டும் அவர்களை வேசான கோபத்தோடு பார்த்து, பிறகு கனகாவின் முக அழகில் மயங்கியதுபோல் சிரித்தார்.

சரோசா ஆடையற்றுப் போனவள் போல் அவமானப்பட்டு நின்றாள். பல்லைக் கடித்துக் கோபத்தையும் கண்களில் தேங்கிய நீரையும் வெளிப்படுத்தாமல், அனைவருடைய மேஜைகளிலும் இருந்த எச்சில் கிளாஸ்களையும் எடுத்துக் கொண்டிருந்தாள்.

ஒவ்வொரு டம்ளர் மீதும் அவள் கரம் நீண்டு அதை எடுப்பதற்கு அதிகமாகக் காலம் தாழ்த்தியது. சேரியில் பழகிய ஒவ்வொருவரும், அவள் மனதில் நிழலாடினார்கள். இப்படித்தான் ஒருதடவை ராசு சரக்கப் போட்டுட்டு "பிரா எங்கேம்மே வாங்கினேன்னு" கேட்டப்போ, துரையண்ணன் அவன போட்டுப் போட்டு ஒதச்சான். அப்புறம் செட்டுல இருந்தே தள்ளி வச்சான். அங்கே ஒருத்தன்தான் இப்படின்னா, இங்கே ஒட்டுமொத்தமாக அல்லாப் பசங்களும் பொம்மனாட்டிங்களும்... அடக் கண்றாவியே... அடி ஆத்தே! இதுக்குப் பேருதான் கவர்ன்மெண்ட் ஆபீசா?

சரோசா, யந்திர கதியில் இயங்கினாள். அப்துல்லா நாற்காலியை துடைத்துவிட்டாள். அவனோடு போய் டைப்ரைட்டரை சுமந்து வந்தாள். மீண்டும் வெளியே உள்ள ஓட்டலுக்கப் போய் வந்தாள். எச்சில் கிளாஸ்களை மூணாவது தடவையாகக் கழுவி விட்டாள். இதற்குள் கிளிக்கூண்டு மாதிரி இருந்த பிளைவுட் அறைக்குள் இருந்து ஒரு காலிங்பெல் சத்தம். சரோசா உள்ளே ஓடிப்போனாள். அங்கே மெத்தை போட்ட நாற்காலியில் உடம்பு முழுவதையும் பரப்பி வைத்திருந்த அசிஸ்டெண்ட் டைரக்டர் அருணாசலம், அவளிடம் ஒரு பில்லையும், இருபது ரூபாய் நோட்டையும் கொடுத்தபடியே உத்தரவிட்டார் :

"ஒரு பேண்டையும், சர்ட்டையும் இந்த லாண்டரியில போட்டிருக்கேன்... அப்புறம் ஒனக்கு பாஸ் தந்தார்களா?"

"தருவாங்க சார்"

"கேட்டதுக்கு பதில் சொல்; தந்தாங்களா, தரலியா?"

"தர்ல; தருவாங்க!"

"இந்தாப்பா சுந்தரம்! இந்தப் பொண்ணுக்கு பாஸ் போட்டுக் குடுன்னு சொன்னேனே... ஏன் போடலே? ஒன்னத்தாம்பா சுந்தரம். மூணுதடவ கேக்கிறேன்ல, ஒரு தடவையாவது பதில் சொல்லேன்."

"நேற்று போட்டுக் கொடுக்கிறதா இருந்தேன். அதுக்குள்ள ஒங்க எல்.ஐ.சி பணத்த கட்டப் போயிட்டேனா, இன்னிக்கி காலையில போடலாமுன்னு நினைச்சேன். அதுக்குள்ள ஒங்க டெலிபோன் பில்ல கட்டப் போயிட்டேனா..."

சரோசா லாண்டரி பில்லோடு வெளியே வந்தபோது, 'பி.ஏ.' சுந்தரம் எரிந்து விழுந்தான் :

"ஒன் மனசுல என்னம்மா நினைப்பு? வேலையில சேர்ந்து இன்னும் ஒரு வாரம் கூட ஆகல. அதுக்குள்ள ஒன் புத்திய காட்டிட்டியே! ஆபீசருகிட்ட போய் ஏன் கம்ப்ளைண்ட் செய்யுறே?"

"நான் வேணும்னு சத்தியமா..."

"இனிமே ஒனக்குப் பாஸே தரமாட்டேன். வேணுமுன்னா நான் சொன்னேன்னு உள்ளே கிடக்கறதுகிட்ட சொல்லு. ஒன் மினுக்கத்த பார்த்தால் நீயே ஒரு பாஸ் மாதிரிதான்."

எல்லோரும் அவளைப் பார்த்துச் சிரித்தார்கள். சரோசா தனக்குத்தானே புரியாத புதிராய் தவித்தாள். அந்தச் சமயம் பார்த்து, உயரம், கனம், வயது ஆகிய முப்பரிமாணங்களிலும் நடுத்தரமான ஒருவர் உள்ளே வந்தார். அனைவரும் அவருக்கு சல்யூட் அடித்தார்கள். அவர், அவற்றை தலையாட்டி அங்கீகரித்தபடியே பிளைவுட் அறையின் புஷ் கதவைத் திறந்தார். அது, அவரது கையை இடுக்குப்பிடி போட்டுக்கொண்டு தலையில் ஒரு போடு போட்டது. அவர் தலையை தடவியபடியே புதுப்பெண் போல் நின்ற சரோசாவை சுட்டிக்காட்டி "இது யாரு" என்றார்.

"புது கேஷ்வல் சார்..."

"இந்தாம்மா, கேஷ்வலு. நான் உள்ளே இருக்கிறவர் மாதிரியே ஒரு ஆபீசரு. என்னப் பார்த்துட்டு அந்தக் கதவ திறந்து வச்சிக்கிட்டு நிக்கணும்னு ஒனக்கு ஏன் தோணல? நானே கதவ

திறந்துக்கிட்டு போகணும்னா அப்புறம் நீ எதுக்கு? ஒனக்கு எதுக்குத் தண்டச் சம்பளம்?"

சரோசா, குறுக்கே வந்த பூதம்போன்ற அவரைப் புரியாமல் பார்த்தபோது, அந்த மனிதர் அவள் கதவைத் திறப்பாள் என்று எதிர்பார்த்தார். அவள் சும்மா நின்றதைப் பார்த்துவிட்டு மீண்டும் கதவைத் திறந்துகொண்டு உள்ளே போனார். ஒரு நிமிடத்தில் அசிஸ்டெண்ட் டைரக்டர் அருணாசலம், "சரோ" என்று காலிங்பெல் தாள நயத்தோடு சொன்ன வார்த்தையை, அவர் முடிக்கும் முன்பே சரோசா அங்கே போனாள். அவர் எள்ளுங்கொள்ளுமாய் வெடித்தார் :

"இந்தாம்மா, நீ சரிப்படாதுன்னு தோணுது. இவர் சொன்னப் பிறகும் கதவத் தொறந்து விடலைன்னா ஒனக்கு எவ்வளவு திமிரு இருக்கணும்? இன்னொருவாட்டி இப்படிச் செய்தே. சீட்டக் கிழிச்சிடுவேன். அப்புறம் ஏ.வோ. சார்! இந்த மோகன் பயல் சரிப்பட மாட்டேங்கறான்; தண்ணியில்லா காடாய் பார்த்து..."

சரோசா, அதிகாரியின் அறையிலிருந்தும், அவர் செங்கோலோச்சும் செக்‌ஷனிலிருந்தும் வெளிப்பட்டு கண்களைத் துடைத்துக் கொண்டாள். அவமானப்பட்டு விட்டோமே என்பதைவிட, அவர்களை ஒன்றும் செய்யமுடியாமல் கையும், காலும் கட்டிப் போடப்பட்டிருக்கிறதே என்பதற்கு அதிகமாக வருந்தினாள். அந்தப் பக்கமாய் படியேறிக் கொண்டிருந்த இளங்கோவைப் பார்த்ததும், அவளுக்கு கவலைகள் கழன்று ஒரு உற்சாகம் ஏற்பட்டது. "சாரே.. சாரே...!" என்று சொன்னபடியே அவனைக் கூப்பிட்டாள். அவன் நடுப்படியில் நின்றபடி அவளை ஏறயிறங்கப் பார்த்தான். ஏதோ சொல்லப்போவது போல் உதடுகளைக் குவித்தான். பிறகு, அவள் அங்கே இல்லாததுபோல் அனுமானித்துக்கொண்டு மேலே சென்றான். சரோசா, புதைகுழிக்குள் மூழ்குகிறவள் போல்

புதைந்தாள். அவனிடம் ருக்கு வீட்டில் நடந்த அனைத்தையும் காரண காரியங்களோடு சொல்ல வேண்டும் என்றுதான் அவள் துடித்தாள். அவனோ, அவளுடைய தோஸ்தாக நடந்துகொள்ளாமல், பாக்கியம்மாளின் மகனாகவே நடந்து கொள்கிறான். இல்லையானால், படிகளில் அப்படி நடந்து போயிருக்க மாட்டான்.

சரோசா வெளியே போய், லாண்டரித் துணிகளை வாங்கிக் கொண்டு மீண்டும் தனது செக்ஷனுக்குள் வந்தாள். அப்போது தலைமை கிளார்க் எட்வர்ட் முன்னால் நாற்பது வயது பெண் ஒருத்தி கண்ணீரும், கம்பலையுமாய் அழுது கொண்டிருந்தாள். பரட்டைத் தலை, பழுப்பேறிய முகம், காய்ப்புக்கள் கொண்ட கைகள், திக்கற்ற பார்வை, திக்குமுக்காடும் குரல். எட்வர்ட் அவளை விரட்டினார் :

"இங்க வந்து ஏம்மா ஒப்பாரி போடுறே? ஒன்கிட்ட எத்தனை தடவ சொல்லுறது? ஒன் புருஷன் செத்தா நான் என்ன செய்ய முடியும்? தாசில்தாரோட வாரிசு சர்ட்டிபிகேட்ட திருத்தாமல், பென்ஷனையோ, பிராவிடன்ட் பணத்தையோ தரமுடியாது. என்கிட்ட அழுகிறத, தாசில்தார் கிட்ட போய் அழு."

"தாசில்தார் கிட்ட போனேன் சார். பல தடவை காத்திருந்து ஒருதடவை பார்த்தேன். என்னோட மாமியார் அவரோட புருஷன் பென்ஷன வாங்கிக்கிட்டிருக்கார். அதோட அவருக்கு என் புருஷன் மாதிரி ஆறு பேர் இருக்காங்க. அதனால அவரு வாரிசுகள்ல ஒருத்தரா ஆகுமுடியாதுன்னு படிச்சுப்படிச்சு சொன்னேன். ஆனால், அந்த ஆளு 'கொடுத்தது கொடுத்ததுதான், செய்யுறத செய்துக்கோ'ன்னு கத்துறாரு."

"அதுக்கு ஏம்மா, என் பிராணன வாங்குறே? வாரிசு சர்ட்டிபிகேட்டுல தாசில்தார் வில்லங்கம் செய்தால், நான் என்ன செய்ய முடியும்? அந்த சர்ட்டிபிகேட்ட திருத்தாத வரைக்கும் நாங்க ஒனக்கு ஒரு பைசா தர முடியாது!"

"அப்போ, பியூனா வேல பார்த்த என் புருஷன் செத்து இந்த ஒன்பது மாசமா வயது வந்த மகளோட, படிக்கிற பையனோட பட்டினி கிடக்குறேனே, அது மாதிரி கிடக்கணும்னு சொல்றீங்களா?"

தலைமை கிளார்க் எட்வர்ட், அவளுக்குப் பதில் சொல்லாமல் தன் வேலையைப் பார்த்தார். அந்தப் பாவிப் பெண்ணும், ஆறுதலுக்காக அங்குள்ள அத்தனை முகங்களையும் பார்த்தாள். ஒன்றுகூட ஒரு அனுதாபப் பார்வையை வீசவில்லை. இவ்வளவுக்கும் அவள் கணவன் அந்த செக்ஷனிலேயே கொத்தடிமை போல் வேலை பார்த்தவன். அனுதாபமாகப் பார்த்த சரோசாவிடம் ஒரு தோழியைக் கண்டுவிட்ட தோழமையில், அந்தப்பெண் "நீங்களே சொல்லுங்கம்மா, புருஷன் இருக்கப்பவே, அரப்பட்டினி. அவரும் செத்து, அதோட அவரு சம்பளமும் செத்துப் போனால் எப்படிம்மா பொழப்ப ஓட்டுறது?" என்றாள். இதற்குள் அக்கௌண்டன்ட் ராமசாமி சரோசா மீது எரிந்துவிழுந்தார்.

"ஏய் சரோசா, பெரிய ஆபீசருமாதிரி கேட்டுகிட்டா நிக்கே? ஒன் வேலையை பாரேன். சரியான கழுத்தறுப்பு. இந்தாம்மா! ஒன் புருஷனோட வாரிசு சர்ட்டிபிகேட்டை தாசில்தார் திருத்தணும். இல்லாட்டி நீ தலைகீழா நின்னாலும் பணிக்கொடை பணமோ, சேமநிதியோ, பென்ஷனோ வராது. பேசாமப் போ. தலைக்கு மேல வேலையிருக்கு."

அந்தப் பெண் தலையில் கை வைத்தபடியே வெளியேறினாள். வாசலைத் தாண்டியபோது, ஒரு விம்மல், வெடிச்சத்தம் போலக் கேட்டது. அவளை விக்கித்துப் பார்த்து நின்ற சரோசாவும், நிலைகுலைந்து போனாள்.

அன்று மாலைப் பொழுது முழுவதும் சரோசா மனதில் அந்த அப்பாவி விதவைப் பெண்ணே குடியிருந்தாள். இதற்குள்,

அனைவரும் போகத் துவங்கினார்கள். மாடிப்படிகளில் சந்தோஷமான பேச்சும், சரளமான காலடிச் சத்தங்களும் கேட்டன. அந்த செக்ஷனில் இருந்த பெண் கிளார்க்குகளும், மோகனும் போய்விட்டார்கள். ஆனால், தலைமை கிளார்க் எட்வர்ட், கணக்காளர் ராமசாமி உட்கார்ந்திருந்தார்கள். வேறு செக்ஷனிலிருந்து இரண்டு மூன்றுபேர் உள்ளே வந்தார்கள். வெளியே போகப்போன சரோசாவை, எட்வர்ட் அங்கே நிற்கும்படி சைகை செய்தார். இதற்குள் அப்துல்லா, கதவை மூடினான். ஜன்னல்களை சாத்தினான். போதாக்குறைக்கு ஸ்கிரீன் துணிகளை இழுத்துவிட்டான். எட்வர்ட், ஒரு தாளில் வரிசை வரிசையாக எழுதி, சரோசாவிடம் ரூபாய் நோட்டுகளையும் நீட்டியபடியே உத்தரவிட்டார்.

"இந்தாம்மா, ஒரு புல் பாட்டில் பிராந்தி, நாலு பீர், கொஞ்சம் நொறுக்குத் தீனி... எட்டு பாய்ல்டு முட்டை.... குயிக்கா வாங்கிக்கிட்டு வா."

சரோசா திகைத்துப் போனாள். ஒருவேளை, தான் ஒருமாதத்திற்கு முன்புவரை சரக்கு வாங்கியது அவர்களுக்குத் தெரியுமோ என்று கூட நினைத்தாள். இங்கேயுமா சரக்கு? அடக்கண்றாவியே! ஒரு நிமிடம் மலைத்து நின்றவள், பிறகு மலைபோன்ற உறுதியுடன் அழுத்தம் திருத்தமாய் சொன்னாள்:

"இந்த வேலைக்கி வேற ஆளப் பாருங்கோ சாரே..."

# 28

இன்ஸ்பெக்டர் கோபதாபமாக எழுந்தார். அருகே உட்கார்ந்திருந்த 'எல் அண்டு ஓ' இன்ஸ்பெக்டரைப் பார்த்து அவர்தான் தனது நிலைமைக்குக் காரணம் என்பது போல் தன்னை அறியாமலே கத்தினார் :

"என்னப்பா இது, பொல்லாத செக்யூரிட்டி டியூட்டி. இந்த வாரத்திலேயே இது மூன்றாவது தடவை. குடிக்கக் கூட தண்ணீர் கிடைக்காமல் மணிக்கணக்கில் திண்டாடணும். போன சமயம் இப்படித்தான் : எவனோ தலகாஞ்சவன்னு ஒருத்தனத் திட்டிட்டீங்க. அவ்வளவுதான், அவன் குதியோ குதின்னு குதிச்சான். பிரஸ்மேனாம். அப்பப் பாத்து டெபுட்டி கமிஷனர் வந்தார். அடாபடியாப் பேசுற அவனைத் திட்டப் போறார்னு நெனைச்சேன். அவர் என்னடான்னா 'தொப்பியை கழத்தணுமாயா'ன்னு என்னைத் திட்டிக்கிட்டு அந்த ஜிப்பாப் போட்ட பிரஸ்காரன் தோளிலே கையைப் போட்டுக்கிட்டுப் போறார். வசவு வாங்குறதுக்குப் பெயரே செக்யூரிட்டி டியூட்டின்னு ஆகிப்போச்சு."

இந்தச் சமயத்தில், ஐம்பத்தைந்து வயது மதிக்கத்தக்க சபாரி உடைக்காரர் ஒருவர், ஐம்பது வயதுப் பெண்ணோடு உள்ளே வந்தார். அவர் கெஞ்சிய கெஞ்சல், அந்த உடைக்குச் சம்பந்தம் இல்லாமல் இருந்தது. முகமெல்லாம் வியர்த்து தரையில் சொட்டுச் சொட்டாக விழுந்து கொண்டிருந்தது. அந்த அம்மா கணவனைப் பிடித்துக் கொண்டே ஏங்கி ஏங்கி அழுதாள்; அந்த மனிதர் அழுகைக் குரலில் புலம்பினார் ;

"இன்ஸ்பெக்டர் சார்! நீங்கதான் சார் எங்களைக் காப்பாற்றணும். நீங்கதான் எங்களுக்கு அடைக்கலம்

கொடுக்கணும். நாற்பது வருஷமா டெல்லியிலே இருந்திட்டேன். செக்கரட்டேரியேட்டில் செக்ஷன் ஆபீஸரா போனமாசம்தான் சார் ரிட்டையர்டு ஆனேன். மூணு வருஷத்திற்கு முன்னால வாங்கிப் போட்ட நிலத்தில் வீடு கட்டலாமுன்ன வந்தால் அய்யோ...''

அவரால் மேற்கொண்டு பேசமுடியவில்லை; அதற்குள் இன்ஸ்பெக்டரும் அதட்டினார் :

"இது என்ன துஷ்டிவீடா ஒப்பாரி போடுறதுக்கு? சட்டுப்புட்டுன்னு விஷயத்தைச் சொல்லுங்க."

எதையோ பெரிதாய் எதிர்பார்த்து ஒப்பிக்கப் போன அந்த அம்மா, தனது மெல்லிய தேகத்தை லேசாய் ஒடுக்கிக் கொண்டு, இன்ஸ்பெக்டரை திடுக்கிட்டுப் பார்த்தாள். பிறகு எந்திரக் குரலில் விஷயத்தைச் சொன்னாள் :

"நாங்க வாங்கிப் போட்ட இரண்டு கிரவுண்டு இடத்தில் எவனோ ஒருத்தன் மல்டிப் பிளாட் கட்டியிருக்கான் சார். உண்ணாம தின்னாமல் சேமிச்சப் பணத்தில வாங்கின நிலத்தை, எந்தப் பாவியோ வாயில போட்டுட்டான் சார்."

அந்த இன்ஸ்பெக்டரும் உண்மையிலே கொதித்துப் போனார்.

"அடக்கடவுளே! எந்த இடத்தில கட்டினாங்க? கட்டின பயல் கையில விலங்கு போட்டு இழுத்திட்டு வாறேன். எந்த இடத்தில?"

"சிக்னல் பக்கத்துல சார்... பிள்ளையார் கோவில் இருக்கே அதுக்குக் கிழக்குப் பக்கம்..."

இன்ஸ்பெக்டர் முன்வைத்த மூளையை பின்வைத்தார். முன் யோசனையை பின் யோசனையாக்கினார். இதற்குள், எல் அண்டு ஓவும், அவரைப் பார்த்துக் கண்ணடித்தார். அது தேவையே இல்லை. இந்த கிரைம் இன்ஸ்பெக்டருக்கும் அதில் பிளாட் கட்டியது யார்

என்று தெரியும். சரோசாவுக்கு அண்ணாத்தையான சாராய சக்ரவர்த்தி; அந்த பிளாட்டுக்கு கிரஹப்பிரவேசத்திற்கு இவரே போயிருக்கிறார். இப்போது பட்டும் படாமலும் பேசினார் :

"எதுக்கும் நாளைக்கு வாங்க. நான் கவர்மென்ட் லாயரை கன்செல்ட் பண்ணணும். இது சிவில் விவகாரம். கிரிமினல் விவகாரம் இல்ல. போலீசுக்கு சம்பந்தமில்லாத பிரச்சினை. தாசில்தார் தீர்க்க வேண்டிய விவகாரம்."

"தாசில்தாருக்கிட்டே போனேன் சார். அவரு போலீஸ் விவகாரம் என்கிறார். சார், எங்கள மாதிரி வெளி நகரத்தில் இருந்து தமிழ் மண்ணையே நேசிச்ச ஆட்களுக்கு நீங்கதான் சார் ஆதரவு கொடுக்கணும்; நீங்கதான் சார் காப்பாற்றணும்."

"நீங்க சொல்றது சரிதான். அதேசமயம் 'மல்டிப் பிளாட்' கட்டுறவர், எம் எம் டி யே அப்ரூவல் வாங்கித்தான் கட்டுவார். அந்த அப்ரூவல், பட்டா இல்லாமல் கிடைக்காது. அதனால்தான் தாசில்தாருக்கிட்டே போகச் சொல்லுறேன்."

"இதோ இருக்கு சார் என் பட்டா."

"இது பட்டாவா, பட்டமான்னு தாசில்தார் தான் தீர்மானிக்கணும். அவர் சரிப்படாட்டால், கோர்ட்டுக்குப் போங்க."

"அப்போ போலீஸ் எதுக்கு சார்?"

"என்னையா நீ பெரிய மனிதன்னு மரியாதை கொடுத்தால் சின்னத்தனமா நடந்துக்கிடுறீயே. நிலத்தை வாங்கும் போது போலீஸ்ல கேட்டா வாங்குன? முதலில் இடத்தைக் காலி பண்ணுய்யா."

இந்த மாதிரி வார்த்தைகளைக் கேட்டறியாத அந்த ஓய்வு பெற்ற மத்திய அதிகாரி, அப்படியே அசைவற்று நின்றார். இன்ஸ்பெக்டர் அடித்தாலும் அடித்து விடுவாரோ என்று அந்த அம்மா பயந்து போனாள். கணவனை இழுத்துக் கொண்டு

படிப்படியாய் இறங்கிய போது, இன்ஸ்பெக்டர் விரலைச் சுண்டி அவர்களை நிற்க வைத்தார். சிவகாசி வெடிபோல் வெடித்தார் :

"அந்த பிளாட் பக்கம் கலாட்டா கிலாட்டா செய்யாதிங்க. அப்புறம் நாங்க எங்க கடமையைச் செய்ய வேண்டியது இருக்கும். போலீசுக்கு ஒரு உடைமை யாருக்குச் சொந்தம் என்பது முக்கியம் இல்ல; யாருக்கிட்ட அந்தப் பொருள் இருக்கோ அவங்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கிறதுதான் முக்கியம். நான் சொல்லுறது உங்களுக்குப் புரியும் என்று நினைக்கேன்; நீங்க போகலாம்."

இன்ஸ்பெக்டர், அவர்களைப் போகவிடுவதே, தான் செய்யும் மிகப்பெரிய சேவை என்பது போல் பெருமிதமாய் நின்றார். அந்த பழுதடைந்த ஆபீஸர் பித்துப் பிடித்து, செத்துப் பிழைத்தவர் போல் மனைவியோடு வெறுமையாக நடந்தார். மேலே கைகளை நீட்டி "கடவுளே கடவுளே" என்றார். இதற்குள் எல் அண்டு ஓ குற்றம் சாட்டும் குரலில் பேசினார் :

"ஆனாலும் நம்ம சாராய சக்ரவர்த்தி ரொம்பத்தான் ஆட்டம் போடுறான். கோவில் நிலத்தை மடக்கினான்; பேசாமல் இருந்ததோம். புறம்போக்கு நிலத்தை முடக்கினான்; சும்மா இருந்தோம் மாதச் சம்பளக்காரங்க குருவி சேர்க்கிறது மாதிரி சேர்த்த பணத்தில் வாங்குற நிலத்தை மடக்குறது என்ன நியாயம்? நீ அந்தப் பெரியவங்கள அப்படி விரட்டி இருக்கக் கூடாது!"

"என்னப்பா நீ, பிரச்சினை உன் சம்பந்தப்பட்டது இல்லை என்கிறதால, சிந்தித்துப் பார்க்கவே மறுக்கிறீயே. நம்ம போலீஸ் கமிஷனரால கூட அவனை ஒன்றும் பண்ண முடியாது. அரசாங்கமே அவன் பையில இருக்குது. செல்லாக் கோபத்தை பொறுமையா காட்டிக்க வேண்டியதுதான். அப்படி அடக்கி வைக்கிற கோபம் ஏலாத ஆசாமிங்கக்கிட்ட பாயுது. சப்ரெஜிஸ்டிராரும் சாராயக்காரன் பெயரில் ஒரு போலிப் பத்திரத்தை பதிஞ்சிருக்கான். தாசில்தாரும்

பட்டாக் கொடுத்திருக்கான். நாம என்ன செய்ய முடியும்? நாளைக்கு துப்பாக்கிச் சூடு நடத்தினால், அதை விசாரிக்கப் போறதே இந்த தாசில்தார்தான். யார் நிலத்தையும் யாரும் அபகரிக்கலாம் என்பது மாதிரி ஆகிப்போச்சு."

"போகிற போக்கைப் பார்த்தால் நம்ம யூனிபாரத்தைத் திருடி எவனாவது அதை உடுத்திக்கிட்டு நம்ம நாற்காலியில் வந்தே உட்கார்ந்து, தான்தான் இன்ஸ்பெக்டர் என்று சொல்லிவிடலாம்; அப்பமும் நம்மால ஒன்றும் செய்ய முடியாது."

இரண்டு இன்ஸ்பெக்டர்களும் ஒருவரையொருவர் இயலாமையில் பார்த்தார்கள். அதே சமயம் கிரைம் இன்ஸ்பெக்டர் சிந்தித்தார். திடீர் என்று மார்க் டுவைன் என்ற அமெரிக்க எழுத்தாளர் பெண்களுக்கு 'உபதேசித்தது' நினைவுக்கு வந்தது. 'கற்பழிப்பை எதிர்க்க முடியாவிட்டால், அதை ரசித்து அனுபவி..."

இன்ஸ்பெக்டர், சாராய சக்ரவர்த்திக்கு டெலிபோன் செய்து, அவரது மல்டிப் பிளாட் கட்டிடத்திற்கு வந்த ஆபத்தையும் அதைத் தாம் முறியடித்ததையும் சொல்லப் போனார். டெலிபோன் அருகே போனவர் திடுக்கிட்டார். எதைச் சொல்லப் போனாரோ அதை அந்த எல் அண்டு ஓ இன்ஸ்பெக்டரே சாராய சக்ரவர்த்தி 'பி.ஏ.'விடம் 'அய்யா அய்யா' என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தார்.

வாழ்க்கையே வெறுத்துப் போன கிரைம் இன்ஸ்பெக்டர், படிகளில் இறங்காமல் அந்த அறையிலிருந்து கீழ்த்தரைக்குக் குதிக்கப் போனபோது, மேஜையில் இருந்த ரேடியோ மைக் அலறியது. எடுத்தார்.

"எஸ் சார், கிரைம்தான் சார் பேசுகிறேன்... எஸ் சார்... நோ சார்... எஸ் எஸ் சார்... விசாரிக்கேன் சார்... அவனும் பெரிய ரவுடிதான் சார்... எஸ் சார்... சாரி சார்..."

மைக்கில் பேசி முடித்த இன்ஸ்பெக்டர், சட்டம் ஒழுங்கு இன்ஸ்பெக்டர் மீது இருந்த கோபத்தை மறந்து, தாபத்தோடு பேசினார் :

"அந்த சாராயக்காரி சரோசாவுக்கு திமிரப் பாரு. யாரோ ரவுடிங்க, அவளை ஏதோ ஒரு நைட்டுல கொலை செய்யப் போனாங்களாம். லோக்கல் போலீஸ்ல நம்பிக்கை இல்லன்னு, கமிஷனரே விசாரிக்கணும்னு மனுக் கொடுத்திருக்கிறாளாம். டெப்டி கமிஷனர் கத்துறார். 'எப்படிய்யா அவளை கமிஷனர் லெவலுக்கு விட்டு வைக்கலாமு'ன்னு சொல்ல வேண்டியதைச் சொல்லாமல் சொல்லுறார். இவளை அப்பவே விட்டது தப்பாப் போச்சு."

"லோக்கல் போலீஸ், கமிஷனர் ஆபீஸ், கிரைம் பிராஞ்ச், இந்த மாதிரி வார்த்தைகள் சாதாரணமானவங்களுக்குத் தெரியாது. இவளுக்குப் பின்னாலே எவனோ ஒரு போலீஸ்காரன் இருக்கிறான்."

"எவனோ என்ன எவன்; இந்த திருமலையப்பனாத்தான் இருக்கும்."

"பாத்திடலாம். இந்த சரோசா எங்க போயிடப் போறாள்?"

கிரைம் இன்ஸ்பெக்டர், சரோசா எதிரே நிற்பதுபோல் அனுமானித்துக்கொண்டு 'இரு இரு' என்பது மாதிரி தலையை மேலும் கீழுமாய் ஆட்டினார்.

## 29

சரோசா, சர்க்கார் வேலையில் கேஷ்வலாகச் சேர்ந்து அப்படியும், இப்படியுமாய் ஒருமாதமாகி விட்டது. அன்று சம்பள நாள்.

அந்தச் சம்பள நாளே பலருக்குத் துக்க நாளாகத் தோன்றியது. ஈட்டிக்காரர்களக்கும், அந்த ஈட்டியைவிட பயங்கரமான பார்வையில் மிரட்டும் மனைவிகளுக்கும் சம்பளம் வரட்டும் என்று அதையே சர்வ கடன் நிவாரணியாகச் சொல்லி வந்த ஊழியர்களில் பெரும்பாலோர் இப்போது பேயறைந்து காணப்பட்டார்கள். அதுமட்டுமல்ல; போதாக் குறைக்கு, வருமான வரி பிடித்தம் செய்யும் வருடக் கடைசி. மாதச் சம்பளத்தை குறைவாகக் காட்டி, வீட்டுப்படி, பயணப்படி, மருத்துவப்படி ஆகிய அனைத்தையும் படிப்படியாக வாங்கிக் கட்டும் கம்பெனிக்காரர்களும், பெரிய பெரிய முதலாளிகளும், வருமான வரி வலையை கிழித்துக் கொண்டு தப்பித்துக் கொள்ளும்போது, இந்த அரசு ஊழியர்களின் வருமான வரி அவர்களது சம்பளப் பில்களிலேயே பிடிக்கப்பட்டு விடுகிறது. லட்சக்கணக்கான வருமான வரி ரூபாயை பாக்கி வைத்திருக்கும் சினிமா நடிகர், நடிகைகளை விட்டு வைத்திருக்கும் அரசு, அரசு ஊழியர்களுக்கு இடது கையால் சம்பளம் கொடுத்து, வலது கையால் பிடுங்கிக் கொள்கிறது. ஆகையால், கிட்டத்தட்ட எல்லோருமே 'வாழ்வே மாயம்' என்ற பிரமையில் இருந்தார்கள். அன்று சம்பளம் வாங்கப்போகும் ஒவ்வொருவரும் கிறிஸ்துவ மதத்தில் கூறப்படும் 'பாவத்தின் சம்பளத்தை' நினைத்தபடியே படியேறினார்கள்.

ஆனால், சரோசாவோ சந்தோஷமாக இருந்தாள். காலையிலேயே ருக்குவின் குடிசையில் அவளைப் பார்த்து "ஒனிக்கி இன்னா வாங்கிட்டு வரணும்" என்று கேட்டாள்.

உடனே ஆறுமுகப்பயல் "ஒரு கமர்கட்" என்றான். கோவிந்து 'ஒரு குவார்ட்டர்' என்று சொல்லப்போன வார்த்தையை தொண்டைக்குள்ளேயே குவாட்டராக்கிக் கொண்டான். ருக்குதான் "அது இதுன்னு வாங்கிடாதே மவளே, புது குடிசைக்கு 200 ரூபா கொடுக்கணும். இளங்கோ சாருக்கு கடன் திருப்பிக் கொடுக்கணும். நாஷ்டா ஆயாவுக்குத் தரணும்" என்று அறிவுறுத்தினாள்.

சரோசா மனதிற்குள் பேசிக் கொண்டாள்.

'அவள் கிடக்காள். ருக்குவுக்கு பாவாடை தாவணி மாதிரி ஒரு சேல வாங்கிக் கொடுக்கணும். எதுக்குக் கொடுத்தாலும் கொடுக்காட்டியும் நாளைக்கே புது குடிசைக்கி போயிடணும். ருக்குவோட ஊட்டுக்காரி தத்தேரி முண்ட, ஆளு அதிகமா ஆயிட்டுதுன்னு கரண்ட கட் பண்ணுறாள். குட்சய காலி பண்ணச் சொல்லி ருக்குவ நச்சரிக்கிறாள். ஆமாம், எம்மாம் சம்பளம் தேறும்? ஒரு நாளைக்கி 34 ரூபா நாற்பது பைசா. லீவு நாளு இல்லாம 24 நாளு வேல பார்த்திருக்கேன். நாற்பது பைசா... கஸ்மாலம் விட்டுத்தள்ளு. இருபத்தி நாலு நாளுல முப்பத்திநாலு ரூபா எம்மாம் தொகை? கோவிந்துகிட்ட கணக்குக் கேட்டா ஒரு புல் பாட்டிலே கேப்பான். அடடே, இந்தக் கணக்கு கூட எனக்குத் தெரியலியே.

சரோசா, முகத்தை துடைத்துக் கொண்டே, மோகன் அருகே போனாள். அவன் கேள்வி பாவனையோடு முகம் காட்டியபோது கேட்டாள் :

"சாரே, சாரே! இருபத்தி நாலு... முப்பத்தி நாலு எம்மாம் சாரே? அதாம சாரே, ஒரு நாளிக்கி முப்பத்தி நாலு ரூபா. அப்போ, இருபத்திநாலு நாளிக்கி? பிளீஸ் சாரே."

மோகன் மனதுக்குள் முனங்கினான். விரலை மடக்கினான். முடியாமல் போகவே கால்குலேட்டரை எடுத்துக் கணக்குப் போட்டான். "816 ரூபாய்... என்ன விஷயம்?"

"என்னோட சம்பளம் சாரே! இன்னிக்கி, நம்ம செக்ஷன்ல அல்லாருக்கும் ஸ்வீட் கொடுக்கப் போறேன். ஏதோ ஒங்க புண்ணியத்துல இப்பதான் வைப்புலயே முதல் தடவையா எட்டு நூறு ரூபா நோட்டுங்கள சொந்தமா பாக்கப் போறேன்."

தலைமை கிளார்க் எட்வர்ட் பேனாவை உதறி உதறி வெள்ளை சுவரை கறுப்பாக்கியபோது, சரோசா ஓடிப்போய் அவரது பேனாவைப் பறித்தாள். அந்த ஒல்லிப் போனவில் தடித்த பாட்டிலை எடுத்து இங்க் ஊற்றினாள். டைப்ரைட்டரில் இருந்த தூசியை வனஜா ஊதிவிடுவதைப் பார்த்து விட்டு, அவள் அருகே ஓடிப்போய், டஸ்டர் துணியை எடுத்து அதைத் துடைத்து விட்டாள். வாய்க்கு வெளியே தெரிந்த பற்கள் உள்ளே போகவில்லை. 'சம்பளம் வாங்கினவுடனேயே இளங்கோ சாரப் பார்த்து அது பேசுதோ இல்லியோ, அது காலுல பணத்த வச்சி எடுக்கணும்.'

'ஆனானப்பட்ட அநியாயக்கார இன்ஸ்பெக்டரு கூட ஒப்புக்காவது ஒரு விசாரணை நடத்துறார். ஆனால் இந்த இளங்கோ சாரு, ஒரு சின்ன விசாரணை கூட நடத்திலேயே... பாவம் அவரு. பாமா காயப்போட்டதுல ஒலர்ந்து போயிட்டார். அடடே, காதலுக்கு இம்மாம் சக்தியா? பாவம் அவருக்கு கன்னங்கூட குழிவிழுந்துட்டு. பாமா, அவர திரும்பிக்கூடப் பார்க்கறது இல்லன்னு ருக்கு வேற சொல்லுறாள். எல்லாம் என்னால. அப்படி நான் சொல்வாட்டி ருக்கு கோவிந்துக்கு, பொண்டாட்டியா தெரிந்திருக்காது. எதுக்கும் பாமாவப் பார்த்து விசயத்த எடுத்துச் சொல்லணும். தேவைப்பட்டா அவள் கன்னத்துல இரண்டு போடுபோட்டு, வலுக்கட்டாயமா கையப்பிடிச்சி இழுத்து, இளங்கோ சாரு முன்னால நிறுத்தணும். பாமா... கண்ணால பார்த்ததும் பொய், காதால கேட்டதும் பொய்யும்மா... கண்ணு...!'

சரோசா, தலைமை கிளார்க் எட்வர்ட்டையும், அக்கவுண்டண்ட் ராமசாமியையும் பயபக்தியோடும், சிறிது அனுசரணையோடும் பார்த்தாள். இருபது நாளைக்கி முன்னால் அவர்கள் பிராந்தி வாங்கிக் கொண்டு வரச்சொன்னபோது முகத்தில் அடித்தாற்போல் முடியாது என்று சொல்லிவிட்டாள். அன்றிரவு நாயினாவிடமும், ருக்குவிடமும் நடந்ததைச் சொல்லப் போனாள். பிறகு, தனது சந்தோஷத்தையே தங்களது சந்தோஷமாகக் காணும் அவர்களது மகிழ்ச்சியை குலைக்க அவள் விரும்பவில்லை. மறுநாள் ஓலை கிழியப்போகிறது என்ற பீதியோடு அலுவலகம் போனாள். ஆனால், அவள் எதிர்பார்த்ததற்கு மாறாக தலைமை கிளார்க், அவளை முதல்தடவையாக ஒரு மனுஷி போல் பார்த்தார். அக்கவுண்டண்ட் ராமசாமி "ஏன் இப்படி அடிச்சுப்பிடிச்சு வாரே? ஈவினிங்கில வேட்டாய் போகிறவள், காலையில டைமுக்கு வரணும்னு அவசியமில்லே..." என்றார். அசிஸ்டெண்ட் டைரக்டர் 'பி.ஏ.' சுந்தரம் கூட தனது நாற்காலியை தானே துடைத்துக் கொண்டு "சரோ பிளீஸ் காபி வாங்கி வறியா" என்று கெஞ்சுவது போல் கேட்டான். பீளிஸாமே? எப்பாடி. நல்லாத்தான் கீது!

அவளுக்கு அந்த பிளீஸ் என்ற வார்த்தைக்கு அர்த்தமே தெரியவில்லை என்றாலும், அது ஒரு மரியாதைக்குரிய வார்த்தை என்று மகிழ்ந்து போனாள். அடாவடி பியூன் அப்துல்லா கூட "பாவம் அது இப்போதானே வந்திருக்கு, நான் போயி வாங்கீட்டு வாறேன்" என்று சொன்னான். சரோசா, பழைய நினைவுகளில் இருந்து விடுபட்டு, சம்பளச் சிந்தனைக்குத் திரும்பினாள்.

மத்தியான வேளை வந்தது. பலர் படிகளில் ஏறிக் கொண்டும், இறங்கிக் கொண்டும் இருந்தார்கள். வயது பிரம்மச்சாரிகளின் சிரிப்புச் சத்தம், வால் அறுந்த நடுத்தரங்களின் நிசப்தம், டம்பப் பை பெண்கள். கைகளில் கவர்களைப் பிடித்தவர்கள், சைடுபாக்கெட் பெருத்தவர்கள், மாடிப் படிகளிலேயே பலருக்கு ஒவ்வொரு நோட்டாக உருவிக் கொடுப்பவர்கள், அனைவரையும் ரசித்துப் பார்த்த சரோசா,

சம்பளம் வாங்குவதற்காகப் போகப் போனாள். அந்தச் சமயத்தில், சுந்தரேசனும், ராமசாமியும் தத்தம் லெதர் பைகளைத் தூக்கிக் கொண்டு ஒன்று போல் எழுந்ததால், அவள் ஒரு முக்காலியில் உட்கார்ந்தாள். 'அவங்க இல்லாதப்போ பொறுப்பான, நானும் போயிட்டா எப்படி? ஏடி ஏன் போகல? அவர்கிட்டே ஏன்னு கேப்போமா? வேற ரோதனையே வேணாம். கழுதைக்குப் பின்னாடியும், ஆபீசருக்கு முன்னாடியும் காரணம் இல்லாமப் போகப்படாதுன்னு காஷ்வல் முனியம்மா சொல்லி இருக்காளே!

அரைமணி நேரத்தில், சுந்தரேசனும் ராமசாமியும் அவர் இவரிடம் கடன் கேட்க, இவர் அவரிடம் கடன் கேட்க, கடனே என்று உள்ளே வந்தார்கள். இதற்குள் சரோசா சம்பளம் வாங்க எழுந்திருக்கப் போனாள். அதற்குள் கனகாவும், வனஜாவும் எழுந்தார்கள். "எனக்கு ஒருத்தர் போன் பண்ணுவார். அவரோட நம்பரை வாங்கி வச்சுக்கோ" என்று அந்த 'ஒருத்தருக்கு' ஒரு அழுத்தம் கொடுத்தபடியே கனகா முன்னால் நடக்க, வனஜா கண்ணடித்து பின்னால் சென்றாள்.

சரோசா விரல்களுக்கு சொடக்குப் போட்டபடியே உட்கார்ந்திருந்தாள். நாயினாவுக்கு ஒரு கம்பளி வாங்கோணும். நாளைக்கி புது குடிசையில் பால் காய்ச்சணும். இளங்கோ சார் அங்க வந்தால் எப்படி இருக்கும்? 'சாரே- சாரே- நீ இல்லாட்டி நான் இப்படி மனுஷியா ஆயிருக்க முடியாது சாரே. நீ அடிச்சாக்கூட பேசாம நின்னுக்குனே இருப்பேன் சாரே. ஒங்கம்மா தடிச்சி கூட தப்புத்தப்பு, ஒன்னோட மதரு திட்டுனாக்கூட பொறுத்துக்குவேன் சாரே.'

வனஜாவும் கனகாவும் செக்ஷனுக்குள் வந்தபோது, மணி நாலரை; சரோசா அவசர அவசரமாக எழுந்தாள். கனகா டெலிபோன் பற்றிக் கேட்டதை காதில் வாங்காததுபோல் ஓடினாள். பிறகு மனசாட்சி உறுத்த மீண்டும் அங்கே வந்து

"ஆரும் போன் போடலம்மா" என்று சொல்லிவிட்டு, திரும்பி நடந்தாள். ஆமாம், எங்க சம்பளம் கொடுக்குறாங்கோ? அதோ வாறாளே முனியம்மா, நல்லவ... கூப்டலாம்.

சரோசா மீண்டும் உள்ளே வந்தாள். ஒரு வார்த்தை சொல்லாமப் போறது எவ்வளவு பெரிய தப்பு. ஆனாலும் எனக்கு இப்பிடி தெனாவுட்டு ஆகாதுப்பா. அவள் தலைமை கிளார்க்கின் முன்னால் நின்று தலையை சொறிந்தபடியே சொன்னாள் : "சம்பளம் வாங்கிட்டு வாறேன் சாரே. கொஞ்சம் லேட்டானாலும் போகாதீங்கோ... அல்லாருக்கும் ஸ்வீட் கொடுக்கப்போறேன். கேண்டீன்ல இனிப்புக்கும் மிச்சருக்கும் ஆர்டர் பண்ணிட்டேன்."

தலைமை கிளார்க் எட்வர்ட், அவளை ஏறிட்டுப் பார்த்து, பிறகு ஏற்றிய தலையை இறக்கினார். எதுவும் பேசவில்லை. அதையே மவுன அனுமதியாக எடுத்துக் கொண்ட சரோசா, உடம்பு குலுங்க ஓடினாள். இடையிலே படியிறங்கி வந்த முனியம்மாவை வழிமறித்தாள். அவள் இவளைப் பார்த்து பயந்தது போல் கையில் இருந்த கவரை ஜாக்கெட்டுக்குள் வைத்துக் கொண்டாள். இவளை விட ஐந்து வயது பெரியவள். இன்னும் கேஷுவல்தான். ஆனால் அடுத்தமாதம் பெர்மனன்ட் ஆகிவிடுவாளாம். அடேங்கப்பா... நானும் இரண்டு வருஷம் பெர்மனன்ட் ஆகாம பேஜாருல இருக்கணும் போலிருக்கே.

"ஏய், முனிம்மாக்கா! எங்கே சம்பளம் கொடுக்காங்கோ? எனிக்கி 800 ரூபாய்க்கி மேல வரப் போகுது. நீயும் என்னோட வா. நான் பணம் கொடுக்குற இடத்த தேடிக் கண்டுபிடிக்கிறதுக்கு முன்னால போயிடப் போறாங்க. அப்பாடி, எட்டு நூறு ரூபா நோட்ட கையில பிடிக்கப்போறத நினைச்சி எம்மாம் சந்தோஷமா இருக்கு தெரியுமா முனிக்கா."

"முதல்ல ஒன்னோட 800 கிடக்கட்டும், மொதல்ல இருபது பைசா வச்சிருக்கியா?"

"எதுக்காம்?"

"இஸ்டாம்புக்கு. இருபது பைசா கொடுக்காட்டி அந்தக் கொள்ளிக்கட்ட முந்திரி கண்ணன் சம்பளம் தரமாட்டான்! அப்புறம் எனிக்கிக் கொஞ்சம் தாயேன். அடுத்த வாரம் கொடுத்துடறேன்."

சரோசா, அவளைக் கண்டிப்புடன் பார்த்தாள். அப்படிப் பார்க்கப் பார்க்க அவளது தொய்வு விழுந்த முகமும், நெஞ்செலும்புக் கூடம் அவளை வருத்தின. பாவம் பிள்ளைகுட்டிக்காரி. 'ஆனாலும் தனக்குப் போகத்தான் தானம்.' "எக்கா, ஒரு நூறு ரூபா வேணும்னா தாரேன். ஆனால் அடுத்த வாரம் கொடுத்துடணும்."

முனியம்மா, சரோசாவின் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். இப்போது அவளே இவளை இழுத்துக் கொண்டு படியேறினாள். முதல் மாடியில் மூச்சிரைக்க நின்றார்கள். பிறகு மேல்மாடிக்கு ஏறி இரண்டாவது மாடிக்கு வந்தார்கள். ஒரு மூலை அறை, பாதிச்சுவருக்கு மேல் பாங்கில் இருப்பது மாதிரி வலை பின்னிய கதவு... அரைவட்ட வழி. உள்ளே மேஜை டிராவுக்குள் கத்தை கத்தையாய் நோட்டுக்கள். மேஜைமேல் ஸ்டாம்புகள் ஒட்டப்பட்ட ஒரு பெரிய ரிஜிஸ்டர். காஷியர், முனியம்மா சொன்னது மாதிரியே ஒரு முந்திரிக் கண்ணன். கண்ணில் கருவிழியையும் வெண்மைப் பகுதியையும் கண்டுபிடிக்க முடியாத கண்ணன். ஆனால், படுசுட்டி. ஒருத்தருக்கு ஒரு கத்தை நோட்டை எடுத்து முதலாவது நோட்டின் நம்பரையும், இறுதி நோட்டின் நம்பரையும் பார்த்துவிட்டுக் கொடுத்தான். அவரையே, கண் வாங்காமல் பார்த்தான். அந்த ஆசாமி அதை பைக்குள் வைக்கப்போன போது "எண்ணிப் பாருங்கள்" என்றான். அவர் "சரியாய்த்தான் இருக்கும்" என்று சொன்னபோது, அந்தக் கத்தை நோட்டை அவரிடமிருந்து கைப்பற்றி அவனே எண்ணிக் காட்டினான். இந்தச் சமயத்தில் வளையல் போட்ட கரம் ஒன்று, அந்தத் திரைவழிக்கு அடிக்கோலாய் ஆனபோது, அவன் எரிந்து

விழுந்தான். "இந்தாம்மா, கொஞ்சம் எட்டி நில்லு. இன்னும்... இன்னும்... ஒனக்கு எதுக்கு பழிபாவம்."

சரோசா சற்று விலகி நின்றாள். முனியம்மா அவளை முன்னால் பிடித்துப் பிடித்துத் தள்ளினாள். ஆனாலும் எங்கிருந்தோ வந்த நான்கைந்து பேர் போவதற்காக அவள் காத்திருந்தாள். எல்லோருடைய கணக்கும் முடிக்கப்பட்டு, காஷியர் அந்தப் பிறைவடிவை மேலே இருக்கும் ஒரு பலகையை இழுத்து மூடிவிட்டு அந்தக் கம்பிவலைக் கண்கள் வழியாக சரோசாவைப் பார்த்துக் கேட்டார் :

"என்னம்மா... விஷயம்?"

"எனிக்கும் இன்னிக்கு சம்பள நாள் தானே சாரே? 810 ரூபா தேறும். ஏன் கொடுக்க மாட்டேங்கே?"

"ஒனக்கா, ஒனக்கு ஏது சம்பளம்? ஒன் செக்ஷனிலிருந்து பில்லே வரலியே. நானே எட்வர்கிட்ட வலியக் கேட்டேன். எனக்குத் தெரியுமுன்னு முகத்துல அடிச்சாப்புல சொன்னாரே. அதுக்கு மேல நான் கேட்டிருந்தா என்னை 'சம்திங்கா' பார்த்திருப்பார். சரி... சரி... இடத்த காலி பண்ணு!"

"நல்லா பார்த்துச் சொல்லு சாரே... அவரு நல்லவரு சாரே..."

"அப்ப நான் என்ன கெட்டவனா? ஒனக்கு வந்த சம்பளத்த கொடுக்காம இருக்கிறதுல எனக்கு என்னம்மா லாபம்? போயி அவருக்கிட்டயே கேளு... பில்லே வரல."

சரோசாவுக்கு தலை கீழே விழுவது போல் இருந்தது. தான் நின்ற கட்டிடமே அற்றுப் போய், வெட்ட வெளியில் நிற்பது போலிருந்தது. இருதயம் இப்படி அடித்துக் கொண்டதை அவள் எப்போதுமே உணர்ந்ததில்லை. காலில் வெட்டுப் பட்டால் முதலில் ரத்தக்கசிவு இல்லாமலும், வலி ஏற்படாமலும், பிறகு

அவை படிப்படியாக ஏறுவது போல், அவள், படிப்படியாய் அதிர்ந்து போய் நின்றாள்.

அந்த செக்ஷன்காரர்கள் அவளிடம் பிராந்தி பெற முடியாத காரணத்தால் அவளையே ஒரு போதைப் பொருளாக்கிவிட்ட உண்மை, இப்போது புலப்பட்டது. ரணகாயத்துக்கு 'முதலுதவி' செய்தது போல் திடீரென்று ஒரு வைராக்கியம். அந்த மாடி சமதளத்தில் ஓடினாள். அப்போது தான் முனியம்மா ஞாபகம் வந்தது. அவள் அங்கே இல்லை. ஏதோ ஒரு அறைக்குள் இருந்து கொண்டு அவளைப் பார்த்து விட்டு முனியம்மா ஒளிவது தெரிந்தது. சரோசா கம்பீரமாகச் சொன்னாள் : "முனிக்கா... முனியம்மா... வெளியே வா முனியம்மா... ஒன்னண்ட கடன்கேட்க மாட்டேன் முனிக்கா..."

சரோசா, நான்கு நான்கு படிகளாய் தாவித்தாவி, இறங்கினாள். இன்றைக்கு என்ன ஆனாலும் சரி, இந்த எட்வர்ட் - ராமசாமியை இன்னான்னு பார்த்துடணும்.

சரோசா அந்த அலுவலகப் பிரிவிற்குள் பொறி கலங்கி நுழைந்தபோது, அங்கே இருந்தவர்கள் நிமிர்ந்தார்கள்; சிரிப்பும், கும்மாளமுமாய், சட்டைப் பைகளையும், ஜாக்கெட்டின் உட்புறத்தையும் பிடித்துக் கொண்டே, புறப்படப் போனார்கள்.

தலைமைக் கிளார்க் மட்டும், தலையைத் தடவியபடியே டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தார். 'ஐயையோ, ஆசாமி விடமாட்டேங்கானே' என்பது மாதிரி தலையில் லேசாக அடித்துக் கொண்டே, பேசினார்.

அக்கவுண்டண்ட் ராமசாமி எதையோ அதிகமாய் தின்று தீர்த்து விட்டு ஏப்பம் விட்டபடியே எழுந்தார். கள்ள உப்பலோடு, வனஜா, டைப்ரைட்டர் மேல் ஒரு பிளாஸ்டிக் துகிலை முக்காடு போட்டாள். அப்போது, வசூலுக்கு வந்த ஒரு புடவை வியாபாரி,

'நரசிம்மாவதாரம்' மாதிரி வெளியேயும் நிற்காமல், உள்ளேயும் போகாமல் வாசலுக்கு வாய் உள்ள கதவு போல் நின்று கொண்டிருந்தார். அவருக்குப் பயந்து பியூன் அப்துல்லா தனது பெரிய மேஜைக்குள் 'நெருப்புக் கோழி' மாதிரி தலையை மட்டும் மறைத்துக் கொண்டான்.

சரோசா, டெலிபோனில் பேசிக் கொண்டிருந்த எட்வர்ட் முன்னால் போய் நின்று அவர் முகத்தை நோக வைத்தபடி கத்தினாள்:

"எனக்கு ஏம்பா சம்பளம் போடலை? ஒன்னத்தாம்பா, செக்ஷன் வஸ்தாது! எனக்கு ஏன் பில் போடல?"

தொலைபேசிக் கருவிக்குள் கிட்டத்தட்ட வாயைச் செருகிக் கொண்டு பேசிய எட்வர்ட்டுக்கு, சரோசா கத்துவது கேட்டதே தவிர அதன் கருத்து கேட்கவில்லை. அவளைச் சட்டை செய்யாமல் தொடர்ந்து பேசினார். உடனே சரோசா அவர் பேசிய டெலிபோன் குமிழை பிடித்திழுத்து, "ஏம்பா ஒன்னத்தான்! என்னோட சம்பளம் என்னாச்சு?" என்று கேட்டபோது எதிர்முனையில் இருந்தவர் "ஹலோ அங்கே என்னப்பா நடக்குது?" என்று கேட்பது ஒலித்தது. சரோசா, அந்தக் குமிழை பலவந்தமாகப் பறித்து கீழே வைத்தாள். எல்லோரும் அந்தப் பூனைப் புலியை ஆச்சரியமாகவும் அதிர்ந்தும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, பின்னர் அவள் பக்கமாக வந்தார்கள். அப்துல்லாவுக்கு மட்டும் சந்தோஷம். இந்த ரகளையில் பெரிதாக்கும் வகையில் கத்தினான் : "இந்தாம்மா சாரோ! இது ஆபீஸ், நீ இருக்கிற சேரி இல்ல. எது பேசினாலும் முறையாப் பேசு. இல்லாட்டி..."

"இல்லாட்டி என்னடா செய்வே பிராண்டிப் பையா?"

அப்துல்லா, கடந்த கால ஏவலை மனதில் நினைத்துக் கொண்டு அதிர்ந்து போய் நின்றபோது, துணி வியாபாரி, அதுதான் சாக்கு என்று அவன் பக்கமாய் நகர்ந்தார்.

வனஜா, அப்துல்லா சொன்னதைச் செயல்படுத்தும் வகையில் பதறிப் பதறிப் பேசினாள் :

“செக்யூரிட்டி கார்டு கிட்ட இவளை ஒப்படையுங்க. செக்யூரிட்டி ஆபீஸரையும் வரச் சொல்லுங்க. இன்னும் கொஞ்ச நேரத்தில என்ன செய்யப் போறாளோ?”

தலைமைக் கிளார்க்கை முறைத்துக் கொண்டு நின்ற சரோசா, வனஜா பக்கம் முகம் திரும்பினாள். அவளைக் கடித்துக் குதறப் போகிறவள்போல் பற்களைக் குவித்தபடியே சவாலிட்டாள்:

“நீயே செக்யூரிட்டி கார்டை வரச் சொல்லுமே. ஆளுக்கு ஆள் பேப்பர் வெயிட்டுங்களையும், எழுதாத ரிஜிஸ்டரையும், பால் பாயிண்ட் பேனாக்களையும், பிளாஸ்க்குங்களையும் கொண்டு போறதை செக் பண்ணாத கார்டு என்னை என்ன செய்துடுவான்னு பார்த்துடறேன்.”

வனஜா அதிர்ந்து போய் வாய்க்கு உதடுகளால் தாழிட்டு, அக்கௌண்டன்ட் ராமசாமியின் பின்னால் தன்னை மறைத்துக் கொண்டாள். அப்போது சிறிது சுதாரித்துக்கொண்ட தலைமை கிளார்க் அசட்டையாகப் பேசுவது போல் சட்டையெல்லாம் வேர்வையால் நனைய தட்டுத் தடுமாறிப் பேசினார் :

“இந்தா பாரும்மா, எது பேசணுமுன்னாலும் உள்ளே இருக்கிற ஆபீஸர்கிட்ட பேசு; உனக்கும் எங்களுக்கும் பேச்சு இல்லை.”

“ஆபீஸரு மட்டுமாய்யா வேலை கொடுத்தார்? நீ கொடுக்கலை? தப்புத்தண்டா செய்யாத போதே என்னைத் திட்டலை? நான் வாங்கிக் கொடுத்த டீயையெல்லாம் குடிச்சியே, அது டீயா, இல்லாட்டி வேற எதுவுமா?”

தலைமை கிளார்க் வாயை அசூசையாக சப்புக் கொட்டியபோது, சரோசா மேலும் தொடர்ந்தாள் :

"ஏய்யா பெரிய மனுஷங்காளா... மனுஷிகளா! நான் சம்பளம் வாங்கப் போறேன்னு, ஒங்க கிட்ட சொன்னேன்னே, அப்போகாட்டி பில்லு போடலைன்னு சொன்னா ஒங்க வாயி அயிகிப் போயிடுமா? எந்த நாறிப்பபடையாவது வாய் தொறந்தீங்களாய்யா? உங்களுக்கு பிராண்டி வாங்கிக் கொடுக்காட்டி என்னைப் பிராண்டுவீங்க. அப்படித்தானே? யாரும் வெளியே போகக் கூடாது. எனக்குப் பதில் சொல்லாம யாரும் அப்பால இப்பால போகக் கூடாது; இல்லாட்டி கொலை நடக்கும்."

சரோசா, அந்த செக்ஷனின் அறைக் கதவைக் காலால் உதைத்துச் சாத்தினாள். அவளை எதிர்க்கும் திராணி கொண்ட அப்துல்லாவோ, துணிக்காரரிடம் ஒரு ஓரமாக டூயட் பேசிக் கொண்டிருந்தான். அனைவரும், அந்த புதிய சரோசாவைப் பார்த்து அதிர்ந்து போனார்கள். எதற்கும் கவலைப்படாதவன் போல், நடப்பதை ரசித்துக் கொண்டிருந்த கிளார்க் மோகன் மீது ஆபத்துக்குத் தோஷமில்லை என்பதுபோல், கனகா ஒட்டிக் கொண்டாள். வனஜாவோ, 'பி.ஏ' சுந்தரத்தின் பின்னால் போய் நின்று கொண்டாள். தலைமை கிளார்க்கின் பாண்ட், இடுப்புக்குக் கீழே நனைந்திருந்தது. வெளியே நடக்கும் விவகாரங்கள் நன்றாகப் புரிந்தாலும், அவை தானாகச் சரியாகிவிடும் என்ற நப்பாசையுடன் இருந்த அஸிஸ்டெண்ட் டைரக்டர் அருணாசலம் இப்போது மெல்ல ஆமை மாதிரி கதவைத் திறந்து தலையை மட்டும் நீட்டினார். பிறகு, உடம்பு முழுவதையும் வெளிப்படுத்திக் கொண்டு அரண்டு போனதைக் காட்டிக்காமலே அதட்டினார் :

"என்ன சத்தம் இங்கே? என்ன ரகளை? சரோசா, முதல்ல கதவைத் திற."

"உன்னோட சூட்கேஸை வாங்கிட்டு உனக்கி நல்லாத்தான் கதவைத் தெறந்து விட்டேன். ஆனா, இன்னிக்கு இப்படி நானு திறந்த கதவுக்கு பைசல் தெரியாமல் போனதால அதை மூடிட்டேன். எனக்கு

ஏன் சார் சம்பளம் கொடுக்கலை? அல்லா கேசுவலுங்களும் வாங்கறப்போ எனிக்கு ஏன் தரலை?"

டெப்டி டைரக்டர் எதுவும் தெரியாதவர்போல வாயும் வயிறும் மாறி மாறி ஆட தலைமைக் கிளார்க்கைக் கேட்டார் :

"இந்தப் பொண்ணுக்கு ஏன் சம்பளம் கொடுக்கலை? எட்வர்ட்... உங்களைத்தான், பதில் சொல்லுங்க."

எட்வர்ட், அஸிஸ்டெண்ட்-டைரக்டரை, தனது அஸிஸ்டெண்ட் போல் முறைத்துக்கொண்டு, அக்கம்பக்கத்தின் அங்கீகாரத்திற்காக அவர்களையும் பார்த்துக் கொண்டு பதிலளித்தார் : "காஷுவல்னு யாரையும் நியமிக்கப்படாதுன்னு போன வாரம் சர்க்குலர் வந்ததைக் காட்டினேனே... நீங்க அதைப் படித்ததுக்கு அடையாளமாய் கையெழுத்து வேற போட்டிருக்கீங்களே..."

அரசாங்கத்தின் சிக்கன நெறிகளை வகைப்படுத்தி பெரிய புராணம் போல் வந்த ஒரு கற்றைத்தாள்களை படிக்கச் சோம்பல்பட்டு, படித்தது போல் கையெழுத்துப் போட்ட அருணாசலம், இப்போது அரண்டு போனார். இந்தச் சமயத்தில் மோகன், சரோசாவுக்கு ஆதரவாக, இருந்த இடத்தில் இருந்தபடியே விவரம் சொன்னான் :

"அதே சமயம், அந்த சர்க்குலர்ல மேலிடத்தின் பெர்மிஷன் வாங்கி காஷுவல் லேபர் வச்சுக்கலாமுன்னும், வச்சிருக்கவங்களை எடுக்காண்டாமுன்னும் ரெண்டு வரி இருந்துதே... எட்வர்ட் சாருக்கு அதைப் படிக்கும்போது கண்ணு குருடாயிட்டா? இந்தப் பொண்ணு சம்பளம் வாங்கப் போறேன்னு சொன்னாளே, அப்ப மட்டும் காது செவிடாயிட்டா?"

எட்வர்ட் கண்களை வெட்டுக்கிளி போல் துள்ளவிட்ட போது, டெப்டி டைரக்டர் தனக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை என்பதுபோல் கேட்டார் :

"பெர்மிஷன் கேட்டு நீ ஒரு டிராப்ட் வச்சிருக்கலாமே எட்வர்ட்? நான் கையெழுத்துப் போட மாட்டேன்னா சொல்லுவேன்?"

"ஏற்கனவே ரெண்டு மூணு பேரு பெர்மிஷன் கேட்டு எழுதுனதுக்கு முடியாதுன்னு வந்துடுத்து."

"பத்து நாளைக்கு முன்னால வேலைல சேர்ந்த ஹரிஹரனுக்கு கரெக்டா பணம் வந்துதே... அவரு சுந்தரேசன் சாருக்கு சொந்தக்காரன் என்கிறதுனாலயா?"

மோகன், இப்போதும் இருந்த இடத்தில் இருந்தபடியே தன்பாட்டுக்குப் பேசுவது போல் பேசினான். சரோசா ஏடி அருணாசலம் முன்னால் போய் நின்று பொறிந்து தள்ளினாள்:

"சார்! நீயும் நன்னாத்தான் நடிக்கே... எல்லா பில்லுக்கும் கையெழுத்துப் போட்டியே, என் பில்லு ஏன் வரலைன்னு கேட்டியா? ஒண்ணுந்தெரியாத பாப்பா மாதிரி பேசுறியே, ஒரு ஆபீஸ்ல எப்பேர்ப்பட்டவனுவ இருக்கானுவ... என்னென்ன சமாச்சாரம் நடக்குதுன்னு உன்னால பார்க்க முடியாட்டி நீயெல்லாம் என்ன ஸார் ஆபீசரு?"

எல்லோரும் கசாமுசாவாய் பேசிக் கொண்டிருந்தார்கள். இதுவரை குனிந்த தலையோடு - சொல்லப் பொறுக்காத ஏவல் செய்யும் தோரணையில் நடுங்கியபடியே பதிலளித்த சரோசா, இப்போது, அனைவரையும் நடுங்க வைத்ததில், அந்த அலுவலகப் பிரிவு அதிர்ந்தது. இந்த அனுபவம் அவர்களுக்குப் புதிது. இப்படிப்பட்ட கேஷுவல்களிடமும் அவர்கள் 'வாங்கி'ப் பழகியவர்கள்தான். ஆனால் இப்படியல்ல. இந்தச் சமயத்தில் சரோசா சாத்தப்பட்ட கதவுக்கு நீண்ட நெடிய தாழ்ப்பாள் போல் அதன் மேல் தன்னைச் சாய்த்துக் கொண்டாள். அப்போது வெளியே ஒரு 'டொக்கு டொக்கு' சத்தம், "சரோசா... கதவைத் திற... எனக்காகத் திற."

சரோசா, அந்தக் குரலைக் கேட்டவுடன் மகுடியால் மயங்கும் பாம்பு போல் மயங்கினாள். உடம்பை எதிர்ப்புறமாய் நிமிர்ந்து, ஒரே இழுப்பில் கதவுகளை இரண்டு கூறுகளாக்கியபோது, இளங்கோ முன்னாலும், முனியம்மா பின்னாலுமாய் நின்றார்கள். அவ்வளவுதான்... சரோசாவின் கோபம் அழுமையாகியது. அழுத்தம் அவலமானது. அக்னித் துண்டுகள் பனிக்கட்டிகளாயின. இளங்கோவின், இரண்டு கைகளையும் எடுத்து தன் தலையில் போட்டுக் கொண்டு, அரற்றினாள் :

"அல்லாப் பழக்கத்தையும் விட்டுட்டு மனுஷியானதா சந்தோஷப்பட்ட சமயத்துல என்னை இப்படிப் பண்ணிட்டாங்களே சாரே... நாயினாவை சாகற காலத்திலியாவது வாய வைக்கலாம்னு சந்தோசப்பட்டேன். அல்லாத்தையும் கெடுத்துட்டாங்களே சாரே... பழைய தோஸ்துங்க சிரிக்கும்படியா ஆயிட்டே சாரே... எனிக்கி சம்பளம் வாங்காததுகூட பெரிசில்ல... அது கெடைக்கப் போறது மாதிரி ஒரு பாவலா பண்ணி, அம்போன்னு விட்டுட்டாங்களே... அதைத்தான் என்னால தாங்கிக்க முடியல சாரே."

இதற்குள், அங்கேயும் இங்கேயுமாய் போய்க் கொண்டிருந்த ஊழியர்கள் அங்கே கூடிவிட்டார்கள். மேலே இருந்து டைரக்டர் வரும் நேரம். அவருக்கும் விஷயம் போய்விட்டால், தனக்கு வரவேண்டிய பிரமோஷன் வராமலே போய்விடும் என்று, ஏடிக்கு ஒரு உதறல். இந்தச் சமயத்தில் இளங்கோவே சரோசாபோல் பேசப் போனபோது, தலைமை கிளார்க் மெல்லிய குரலில் பேசினார் :

"இந்த நியூசென்சுக்குக் காரணமே இந்த இளங்கோதான். தராதரம் தெரியாதவங்களையெல்லாம் ஆபீசுல சேர்த்ததாலே ஆபீஸ் தரம்தான் போச்சு."

இளங்கோ வெடித்தான் : "இந்தப் பொண்ணு நியூசென்ஸ் காரின்னா, நாமெல்லாம் அரசாங்கக் கேடிங்க. ஒரு மாசமா நாய் படாத பாடா உழைச்சிட்டு அதுக்குப் பலன் கிடைக்கலன்னு அவள்

குலைக்கத்தான் செய்வாள். நாமா இருந்தால் கடிச்சிருப்போம். நம்ப வச்சு கழுத்தறுத்துட்டீங்களே! இந்தாம்மா சரோசா. ஏன் அழுவுறே? இந்தா, என் சம்பளம் முழுசும் ஒனக்கு வேலைக்குக் கூலியாயும், இவங்களோட அகம்பாவத்துக்கு அபராதமுமாவும் தாறேன்."

இளங்கோ, ஆவேசப்பட்டு தனது சட்டைப் பையைக் கிழித்தான். அந்த வேகத்தில் இடது கையிலிருந்த பை அவனது வலது கைக்குள் ஒரு சதுரத்துணியாக நூறு ரூபாய் நோட்டுக்களோடு வெளிப்பட்டது. அந்தத் துணியோடு அந்த நோட்டுக்களை சரோசாவின் கைக்குள் திணித்தான். அவளோ, அவற்றை அவனது வலப்புறச் சட்டைப் பைக்குள் திணித்தாள். பிறகு அவன் காலடியில் அப்படியே விழுந்தபடி கதறினாள் :

"நீ சொன்னதே போதும் சாரே. இந்த கவர்ன்மெண்டு பொறுக்கிங்க இடத்திலே, நீ கண்டிஷனா இருக்கதே போதும் சாரே. சத்தியமா சொல்றேன் சாரே, நான் மட்டும் உங்கம்மாவை அப்படி திட்டாட்டால், கோவிந்துருக்குவக் கொன்னுருப்பான். நீயும், பாமாவும் பழையபடியும் சந்தோஷமா இருந்தா, அதுவே எனக்கு சம்பளம் கிடைச்சது மாதிரி சாரே! ஆனாலும், என்னால தாங்க முடியலையே சாரே. அநாவசியமா உன் பேரு இழுபடுமேன்னு பார்த்தேன்; இல்லாக்காட்டி இவனுவள சுறாப்புட்டு செய்திருப்பேன்."

முனியம்மாவும் கிட்டத்தட்ட அழுதுவிட்டாள். அவளுக்காக தான் ஒளிந்து கொண்டதை நினைத்தபோது அவள் அழுகை அதிகமாய் வலுத்தது. இந்த விபரீத நிலையிலிருந்து எப்படிக் கழட்டிக்கொள்ளலாம் என்று புரியாமல் அஸிஸ்டெண்ட்-டைரக்டர் அருணாசலம் அங்கும் இங்குமாய் 'வாக்கிங்' போனார். சரோசா, இளங்கோவின் பாதங்களை ஆதாரமாய் பிடித்தபடியே எழுந்தாள். ஆடைகளைச் சரிப்படுத்திக் கொண்டாள். அவனுக்காக அவர்களை விட்டுவிட்டதுபோல் வெளியேறினாள்.

# 30

எப்படியோ, சரோசா தாக்குப்பிடித்துவிட்டாள். அந்த அலுவலகத்தில் வேறொரு பிரிவிற்கு மாற்றப்பட்டாள். இதற்கு முன்னதாக பத்து நாட்களுக்குள், அவளுக்காக தனியாகப் பில் போடப்பட்டு, பதினைந்து நாட்களுக்குள் அவளுக்கு சம்பளம் கொடுக்கப்படும் என்றும், அதற்கு மாற்றாக, அவள் செக்ஷனை 'பிராண்டி' தொல்லை கொடுக்கக்கூடாது என்றும் உடன் பாடாயிற்று.

அந்த சம்பள நாளும் வந்தது... சரோசா, கற்பனைகளை பாதியாக குறைத்துக் கொண்டுதான் அலுவலகம் போனாள். ஆனால் பழைய செக்ஷன் மோகன் வந்து, அவளிடம் 'ஸ்வீட்' கேட்டான். கேஷியரிடம் அவள் கூலி சம்பளம் சொளையாய் தயாராய் இருப்பதாகவும், அவள், அங்கே போய் வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டு, அவனே அவளுக்கு ஒரு வட்டைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டான்..

சரோசா, ஆனந்த பைரவியாகி, 'பணக்கார' மாடிக்கு, புறப்பட தயாரானபோது -

ஒரு போலீஸ்காரர் உள்ளே வந்தார். அரசு அலுவலகங்களுக்கு காவல் துறை கடமையாற்றும் போது எப்படி வர வேண்டுமோ அப்படி வரவில்லை. அதாவது 'மப்டியில்' வரவில்லை. கஞ்சி போட்டு இஸ்திரி போட்ட காக்கி யூனிபாரத்திலேயே உள்ளே வந்தார். வத்திக் கம்பு வேறு அங்குமிங்கும் ஆடியது. ஒரு வருட காலமாக கைகளில் கிடைத்தவற்றை அவர் 'கைமாறாமலேயே' வைத்திருந்தார் என்ற ஆத்திரத்தில் ஏதோ ஒரு தலைவருக்கு மழையால் நனைந்து வெயிலால் உலரும் செக்யூரிட்டி கார்டாக நியமிக்கப்பட்டிருந்தார். எவருடைய கையையோ காலையோ பிடித்து இப்போதுதான்

'ஸ்டேஷனுக்கு' வந்திருக்கிறார். ஆகையால் ஒரு வருட வனவாசத்தை அந்த ஒரே நாளில் ஈடுகட்ட விரும்பினார்.

இங்கே சரோசா என்கிறது யாரு என்று அதட்டலாக கேட்டார்.

சரோசாவை, யாரோ ஒருவர் கையால் சுட்டிக்காட்ட போலீஸ்காரர், அவள் முன்னால் போய் நின்று அதட்டினார்.

"நீதானே சரோஜா என்கிற கேடி? உன்ன முன்னிப் பின்ன பார்க்காமல் எப்படிக் கண்டுபிடிச்சுட்டேன்னு நினைக்கிறியா? அதுதான் உன் மூஞ்சியிலயே எழுதி இருக்கே?"

சரோசாவுக்கு சம்பளம் கிடைத்துவிட்டதா என்று அவளிடமே கேட்பதற்காக, உள்ளே வந்த இளங்கோ, வாசலில் சிறிது நின்றுவிட்டு, பின்னர் போலீஸ்காரரை நெருங்கிக் கேட்டான்.

"அப்படி என்ன சார் இந்தப் பொண்ணு தப்புப் பண்ணிட்டு?"

"தப்புக்கும் தவறுக்கும் உங்களுக்கு வித்தியாசம் தெரியுமா? இவள் செய்தது தப்பும் இல்ல, தவறும் இல்ல... ஒரு கொலை; துரை என்கிற கள்ளச்சாராய வியாபாரியைக் கொன்னு, கோணி மூட்டையில் கட்டி மகாபலிபுரம் கடலுல போட்டிருக்காள். ஏய்! நடடி ஸ்டேஷனக்கு. நீ கெட்ட கேட்டுக்கு ஒனக்கு கவர்மெண்டு வேலையா?"

அதுவரை அந்த போலீஸ்காரரை முகம் மாறாமல் பார்த்தபடி நின்ற சரோசா, அப்படியே சரிந்து குத்துக்காலிட்டு உட்கார்ந்தாள். இரண்டு கைகளையும் எடுத்து தன்னை அறியாமலேயே தலையில் வைத்து அசைவற்றிருந்தாள். பிறகு அவள் கண்முன்னால் ஆடிய லத்திக் கம்பின் ஊசலாட்டத்தைக் காணும் சுரணை இன்றி ஒப்பாரியிட்டாள் :

"தொரண்ணே! அய்யய்யோ, தொரண்ணே! கட்சியிலே அந்த தட்டுவாணி தடிச்சியும், அண்ணாத்தேயும் சேர்ந்து உன்னைத் தீர்த்துக் கட்டிட்டாங்களே. நானு பாவிண்ணே. இந்த ஒரு மாசத்துல ஒரு வாட்டியாவது ஒரு நட நடந்து உன்னைப் பார்க்காமப் பூட்டேனே. நீ அருண்டு மருண்டு துடிச்சப்போ ஒனிக்கு ஆறுதல் சொல்லாம இருந்துட்டேனே. ஏய் அண்ணாத்தே, நீ உருப்படுவியா? ஒன்னையும் உன் வப்பாட்டியயும் இதே மாதிரி அடிச்சுக் கொல்ற காலம் வராதா? அய்யோ... அய்யய்யோ...!"

சரோசா, வாயில் அடித்துக் கொண்டாள். எல்லோரும் அவளைக் கொலைகாரியாகப் பார்த்தபோது இளங்கோவின் கண்கள் கலங்கிவிட்டன. சிலர் பிரமிப்போடு எழுந்தார்கள். போலீஸ்காரர் லத்திக் கம்பை தரையில் தட்டியபடியே அதட்டினார் :

"இன்னும் ரெண்டு கொலை செய்வேன்னா சொல்றே? நல்லாத்தான் நடிக்கே? இல்லாட்டி ஒரு ஆம்பளைய பதினாறு இடத்தில் வெட்டி கடலுல போடுவியா? எழுந்திருடி."

போலீஸ்காரர், அவள் முடியைப் பிடித்துத் தூக்கப் போனபோது, இளங்கோ அந்தக் கையை லேசாகப் பிடித்தான். இதற்குள் அவர் கை அவள் முடியைப் பற்றியபடி மேலே வந்தது. ஏதோ பேசப் போன இளங்கோவை பேச முடியாதபடி சில அலுவலக வாசிகள் உலுக்கினார்கள் :

"என்ன மிஸ்டர் இளங்கோ! இந்த மாதிரி ஒரு கிரிமினல் கேர்ள எங்க தலையில கட்டிட்ட பாரு. உன்னை நல்லவன்னு நெனத்தா. என்னப்பா... இதெல்லாம்... ஊமை ஊரை கெடுக்கும். பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும் என்பது சரியா இருக்கே..."

போலீஸ்காரரும் இளங்கோவைச் சந்தேகமாகப் பார்த்தார். வார்த்தைகளில் மரியாதை போட்டு அதே சமயம் அவமரியாதைக் குரலில் கேட்டார் :

"உங்களுக்கும் இந்தப் பொண்ணுக்கும் என்ன சார் சம்பந்தம்? நீங்களும் அநேகமா ஸ்டேஷனுக்கு வரவேண்டியது இருக்கும்."

இதற்குள் நடப்பதை கேள்விப்பட்டு, பழைய செக்ஷன் ஆட்களும் கூடிவிட்டார்கள்.

அஸிஸ்டெண்ட் டைரக்டர் அருணாசலம், இளங்கோவைப் பார்த்துக் கொலை பழிக்கு சாட்சியாய் போகவேண்டியது வருமோ... என்கிற பயத்தில் உண்மையை கொட்டுவதாக நினைத்து உளறிக் கொட்டினார்.

"என்னப்பா இளங்கோ! உன்னோட உல்லாச சல்லாபத்தை யெல்லாம் வெளில வச்சுக்காம எங்களையே புரோக்கர் மாதிரி ஆக்கிட்டியே. கவர்மெண்ட் சர்வண்ட் காண்டக்ட் ரூல்படி உன்மேல ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப் போறோம். நல்லவேளை, போலீஸ்காரர் சரியான சமயத்துக்கு வந்துட்டார். இல்லாட்டி, இவள் எங்களையும் ஒரு வழி பண்ணியிருப்பாள். ஆப்டர் ஆல் ஒரே ஒரு மாதச் சம்பளம் கிடைக்கலேன்னு எப்படிக் குதிச்சா?"

"இளங்கோ! உன்னை விடப்போறதில்ல மேன்..."

பித்துப் பிடித்து நின்ற இளங்கோவின் தோளில், மோகன் கை போட்டான். "டோண்ட் ஒர்ரி இளங்கோ. என்கொயரி இல்லாம உங்களை எதுவும் செய்ய முடியாது. அதுல நான் உங்களுக்கு டிபன்ஸ் அஸிஸ்டெண்டா இருந்து, இவங்களை நார் நாராகக் கிழிக்கப் போறேன் பாருங்க."

சரோசா அங்குமிங்குமாய்ப் பார்த்தாள். இளங்கோவை உற்றுப் பார்த்தாள். 'துரைண்ணே' என்று மீண்டும் கத்தப் போனாள். பிறகு எதுவோ நெஞ்சில் கத்த, அதன் உந்தலில் அவள் வாயாடியது.

"அடப்பாவிங்களா! ஒண்ணுமே அறியாத இந்த கொழந்தப் பையன் மேல பழி போடறீங்களே; இந்த அல்பத்துக்காக படாத

பாடுபட்டவரு அவரு. போலீஸ் அண்ணாத்தே, வாரியா போகலாம். அடேய் அல்பங்களா, இளங்கோ சாரை விட்டுடுங்கடா."

இளங்கோ, இன்னும் பிரமை கலையாமல் நின்றபோது, சரோசா சித்தப்பிரமை பிடித்தவள் போல் வாசலுக்கு வெளியே வந்தாள். போலீஸ்காரர் பின்தொடர்ந்தார். இவள் என்னவோ பெண் போலீஸ் போலவும், அவர் என்னமோ யூனிபாரத்தில் தப்பு செய்தவர் போலவும் தோன்றியது. சரோசா, மீண்டும் அந்த அறைக்குள் ஓடிப்போய் இளங்கோவின் இரண்டு கன்னங்களுக்கும் இரண்டு கைகளையும் உறையாகப் போட்டுக் கொண்டு "உன்னால நானு புதுசா பெறப்பெடுத்த சரோசா சாரே! உன்னோட சரோசா கொலைகாரியும் இல்ல, குடிகாரியும் இல்லன்னு நம்பு சாரே. நீ நம்பினா போதும் சாரே. போலீஸ் நம்புறதும் நம்பாததும் அவங்க இஷ்டம். அந்த அண்ணாத்தையோட இஷ்டம்" என்று சொல்லி விட்டு மீண்டும் திரும்பி நடந்தாள்.

அவள் வேகவேகமாக நடந்ததால், போலீஸ்காரர் எக்கி எக்கி ஓடினார். அவள் மூலம் தங்களுக்கும் விமோசனம் கிடைக்கும் என்று நினைத்து ஆங்காங்கே நின்ற கேஷுவல் ஊழியர்கள் அநாதைகள் போல தவித்தார்கள். இனிமேல் நிரந்தர ஊழியர்களிடம் தாங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்றும், பிராண்டி கிராண்டி கேட்டால் சொந்தக் காசில்கூட வாங்கிக் கொடுக்க முயற்சி செய்ய வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டார்கள்.

அந்தப் போலீஸ்காரரும், இந்த சரோசாவும் அலுவலக வளாகத்திற்கு வெளியே வந்தார்கள். சரோசா, ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தாள், ஆண்டவன் இருக்கிறானா என்பது மாதிரி. அவள் மனதில் எந்தப் பயமும் ஏற்பட்டது போல் தோன்றவில்லை. உணர்வுகள் இருந்தால்தானே பயம் என்ற

உணர்வு ஏற்படும்? இதற்குள் ஒரு ஆட்டோ ரிக்ஷாவை போலீஸ்காரர் அதட்டிக் கூப்பிட்டார். அது அவர்கள் முன்னால் வந்து உறுமியபோது, சரோசா போலீஸ்காரர் அதட்டும் முன்னாலேயே ஏறிக் கொண்டாள்.

ஆட்டோவிற்கு, போலீஸ்காரர் கையால் வழிகாட்டியபோது, முனியம்மா அங்கே ஓடிவந்து, போலீஸ்காரர் பக்கத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். அதிசயமாகப் பார்த்த அவர், ஆச்சரியத் தொனியில் கேட்டார் :

"அடடே.... முனியம்மா, என்ன இப்படி ஜேம்ஸ்பாண்ட் மாதிரி?"

"அப்போ நீ என்ன ஆபீஸ்ல பார்க்கலியா?"

"எந்த ஆபீஸ்ல?"

"அதே அந்த கேடி ஆபீஸ்ல; திருட்டு ஆபீஸ்ல; தெனாவட்டு ஆபீஸ்ல; அங்கதான் வேலை பாக்கேன். சொந்தப் பெரியப்பா பிள்ளையா இருந்தும், நீ என்னை கண்டுக்கலியேன்னு எனக்கு எப்படி அழுகை வந்தது தெரியுமா?"

"தப்பா நினைக்காதே தங்கச்சி. ஒரு போலீஸ்காரனுக்கு எப்பவுமே குற்றவாளிமேலதான் கண்ணு இருக்கும். வீட்டுல வந்து ஆற அமர பேசறேன். இப்ப நீ இறங்கு."

"வழியிலேயே இறங்கிக்கறேன் அண்ணே."

"ஆட்டோ, நீ பாட்டுக்கு ஓட்டுப்பா."

# 31

அந்த ஆட்டோ அதுபாட்டுக்கு ஓடியது. முனியம்மா தனது அண்ணன் - போலீசிடம் சரோசாவைப் பற்றி தனக்குத் தெரிந்ததைச் சொல்லிக் கொண்டே வந்தாள். "பாவமண்ணா... என்ன மாதிரி கேஷுவல். அடுத்தவங்க கஷ்டப்பட பொறுக்காதவள். இவளோட குடும்ப நிலமை எனக்குத் தெரியும். கொலை செய்யக்கூடியவள் இல்லண்ணா. அவளோட முகத்தை உத்துப் பாரு, உனக்கே தெரியும்!"

"அதனாலதான் சொல்றேன், நீ இதுல தலையிடாதேன்னு. அதோட, பெரிய பெரிய ஆளுங்க கிட்ட இருந்து போன் மேல போனா வருது. இவள் ஸ்டேஷன்ல கொண்டு ஒப்படைக்கதுதான் என்னோட வேலை."

சரோசா, அவர்கள் பேசுவதை காதில் வாங்காமலும், கண்ணில் விழும்படி ஏறெடுத்துப் பார்க்காமலும் ஆட்டோவுக்குப் பின்புறமாக இரண்டு கைகளையும் நீட்டியபடி அப்படியே கிடந்தாள். இதற்குள் அந்த ஆட்டோ கத்திக்கொண்டும், கதறிக்கொண்டும், மூன்று கிலோ மீட்டர் வரை ஓடிவிட்டது. இடது பக்க ஒரு மாடிக் கட்டடத்தைப் பார்த்த முனியம்மா, அதை அந்த ஆட்டோ சிறிது கடந்த பிறகு, ஆட்டோவை நிறுத்தும்படி டிரைவரின் சட்டையைப் பிடித்து இழுத்தாள். அது நின்றதும், போலீஸ் அண்ணனிடம் முறையிட்டாள் : "என்னைப்பத்தி உங்களுக்குத் தெரியுமுண்; தலையை அடகு வச்சாவது சொல்லுற சொல்லைக் காப்பாத்துறவள். இந்தப் பொண்ணு அதோ அந்த வீட்டில் ஐநூறு ரூபாய் கடன் வாங்குனாள். இவளுக்கு நான்தான் ஜாமீன் போட்டேன். ஜெயிலுக்குப் போற இவளோட கடன கொஞ்சம் கொஞ்சமா அடைக்கேன்னு கடங்காரம்மாகிட்டே சொல்லணும். அதுக்கு இந்தப் பொண்ணு

என்னோட வரணும். வேணுமுன்னா நீயும் வா, அஞ்சே நிமிஷம்தான். ஒருவேளை அந்த அம்மா இல்லாட்டி ரெண்டே ரெண்டு நிமிஷம்தான். குளிச்சிட்டுகிளிச்சிட்டு இருந்தால் பத்து நிமிஷம்; ஒன் தங்கச்சி மேல நம்பிக்கை இருந்தா விடு."

அந்த போலீஸ்காரர் பதில் பேச முடியாமல் வாய் மட்டும் திறந்து காட்டினார். முனியம்மாவைப் பற்றித் தெரியும். அவளால் தனது பதவிக்கு ஆபத்து ஏற்படாது. ஆனால், இவள் அவளைத் தட்டிவிட்டுப் போயிட்டா?

"நான் பிள்ளை குட்டிக்காரன் தங்கச்சி. நீ ஆயிரம் சொல்லு கேப்பேன், ஆனா. இந்த விஷயத்துல என் போக்குல விட்டுடு. யூனிபாரம் போயிட்டா கோமணம் கூட கெடையாது. உன் நாத்தானரும் கொழுந்தைகளும் இன்னிக்குக்கூட சமைக்க அரிசி இல்லாம தவிக்குதுங்க. பேருதான் போலீஸ்; தனக்குப் போகத்தான் தானம்."

முனியம்மா, இடுப்பில் தொங்கிய சுருக்குப் பையை, அவருக்குக் காட்டாமலே மாராப்பு சேலைப் பக்கம் கொண்டு போனாள். வயிற்றின் இரண்டு பக்கமாக இரண்டு கைகளையும் உள்ளே விட்டாள். அந்த சுருக்குப் பையைத் திறந்து ஒரு நோட்டை எடுத்துக்கொண்டு அந்தப் பையின் வாயை அடைத்துவிட்டு, மீண்டும் அதை இடுப்பில் சொருனாள். வலது கையை வெளியே கொண்டு வந்து, அது பிடித்திருந்த ஒரு நூறு ரூபாய் நோட்டை அண்ணனின் பைக்குள் அவரது கண்ணில் படும்படியாகக் காட்டினாள். அவர் அதை பத்து ரூபாய் நோட்டு என்று நினைத்துவிடக்கூடாதே என்பதற்காக 'வரவர நூறு ரூபாய் நோட்டுங்க கூட சின்னதா இருக்கு' என்றாள். பிறகு ஆட்டோவிலிருந்து கீழே குதித்து சரோசாவைக் கையைப் பிடித்துக் கீழே இழுத்தாள். அவள் இழுத்த இழுப்பிற்கு சரோசாவும் பொம்மை போல தரைக்கு வந்தாள்.

போலீஸ்காரரும் இறங்கினார். வீடு பக்கத்தில்தான் இருக்கு; ரூபாயோ பையில; ரெண்டு எட்டு நடந்து காலைல உதைபட்ட மனைவியோட கன்னத்தை அந்த நோட்டால் தடவலாமா என்று யோசித்தார். இந்தச் சாக்கில் சரோசா ஓடிவிடக்கூடாதே என்று ஒரு பயம். ஆகையால் முன்னால் நடந்த அந்தப் பெண்களின் பின்னால் இவரும் நடந்தார்.

சரோசா, தன் கையைப் பிடித்திருக்கும் முனியம்மாவைத் தட்டி விட்டுவிட்டு ஓடினால், அவளைத் தாவிப் பிடிப்பதற்குத் தயாராக போலீஸ்காரர் பக்கவாட்டில் நடந்தார். ஒருவேளை, தங்கச்சியும் இதற்கு உடந்தையாக இருக்கலாமோ என்று அவளையும் பார்த்தார். இன்சூரன்ஸ் ஏஜெண்ட் 'எல்லார் உயிருக்கும் ஆபத்து' என்று நினைக்கிற மாதிரி, 'என் புத்தியும் போலீஸ் புத்தியிலிருந்து மாற மாட்டேங்கே' என்று தனக்குள்ளே பேசிக் கொண்டார்.

இதற்குள், சரோசா நடந்த நடையும், பார்த்த பார்வையும் அவள் விழுந்தாலும் விழுவாளே தவிர, ஓடமாட்டாள் என்று அவரது அனுபவ அறிவு உணர்த்தியது. அந்த இரண்டு பெண்களும் அந்தத் தெருமுனையை திரும்பியபோது அது ஒரு முட்டுச்சந்து என்பதாலும், இவருக்குப் பசி வயிற்றை முட்டியதாலும், "சீக்கிரமா வந்துடு தங்கச்சி, சீக்கிரமா கூட்டிட்டு வந்துடு தங்கச்சி" என்று சொல்லியபடியே ஆட்டோ பக்கம் வந்தார்.

இதற்குள், முனியம்மா சரோசாவை கூட்டிக்கொண்டு ஒரு கட்டிடத்தின் மாடிப்படிகளில் ஏறினாள்.

# 32

சரோசா, முனியம்மாவிடம் எந்தக் கேள்வியும் கேட்காமல் அவள் பின்னாலேயே போனாள். ஆட்டோவிலும் அவளும் போலீஸ்காரரும் பேசிய பேச்சுக்கூட அவளுக்குக் கேட்கவில்லை. இப்போது எந்த இடத்தில் இருக்கிறோம் என்ற தெளிவும் இல்லை. தெரிந்து கொள்வதற்குரிய அக்கறையுமில்லை. ஒரே ஒரு சமயத்தில் மட்டும் கொலைக்காரர்களை விசாரிக்கும் தனிப்பட்ட காவல் நிலையம் அந்த மாடியில் இருக்குமோ என்று லேசாய் நினைத்துக் கொண்டாள்.

முனியம்மாவும் அவள் முதுகைப் பிடித்து லேசு லேசாகத் தள்ளினாளே தவிர அவளிடம் எதுவும் பேசவில்லை.

மூன்று சாலைகள் சந்திக்கும் முக்கிய சந்திப்பில் வடக்கு - தெற்கான சாலையின் முனையில் உள்ள இரண்டாவது கட்டிடத்தின் முதலாவது மாடி. விசாலமான பெரிய அறை. அதன் இரு முனைகளிலும் சின்னச் சின்ன அறைகள். கதவுக்கு மேலேயும், அந்த அறைச்சுவர் ஒன்றிலும் 'சமதர்ம மாதர் மன்றம்' என்ற போர்டுகள் தொங்கின. உள்ளே ஒரு பக்கமாய் ஒரு சாதாரண நாற்காலி; அதன் முன்னால் சராசரி மேஜை. கட்டுக்கட்டான பேப்பர்கள். ஒவ்வொன்றும், ஒன்றின் மேல் ஒன்றாக இல்லாமல், ஒன்றன்பின் ஒன்றாய் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. மேஜை முனையின் இருபுறமும் பிரம்பு நாற்காலிகள். அதன் முன்னால் இரண்டு வரிசையில், சின்னச் சின்ன இரும்பு நாற்காலிகள். பக்கவாட்டில் பெஞ்சுகள். மேஜையோடு ஜோடி சேர்ந்த 'எஸ்' வடிவ நாற்காலியில் உட்கார்ந்திருந்த பெண்ணிற்கு, நாற்பது வயதிருக்கலாம். பொட்டில்லாத நெற்றி. நகை நட்டுக்களால் சின்னாபின்னமாகாத கூரிய மூக்கு. எவரையும் பார்த்ததும்

மோவாயை கீழே தள்ளி, கண்களை முன்னால் தள்ளிப் பார்க்கும் ஒரு ஆர்வப் பார்வை. பெஞ்சுகளில் பஞ்சையாய் - பராரியாய்ப் போன பல பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களது ஆடைக்கு அப்பால் வெளிப்பட்ட முதுகுகளிலும், முகங்களிலும் வரதட்சணைத் தழும்புகள்; பெற்ற பிள்ளைகள் கொடுத்த நன்றிக் கடன்கள். இவர்களில் சிலர் தள்ளாடும் மூதாட்டிகள். சிலர், தாலாட்டும் இளம் பெண்கள். ஒவ்வொருத்தி தலையும் ஏதோ சுமக்க முடியாத ஒரு பெருஞ்சுமையை சுமப்பது போல் தாழ்ந்து கிடந்தது. முனியம்மாவை அங்கீகாரத்துடனும், அவளோடு வந்தவளை அழுத்தமாகவும் பார்த்த தனி நாற்காலியில் உட்கார்ந்திருந்த அந்த அம்மா, கும்பிட்ட முனியம்மாவிற்கு பதில் கும்பிடு போட்டுவிட்டே கேட்டாள் :

"எப்படி இருக்கே முனியம்மா? உன் வீட்டுக்காரன் மாசா மாசம் தர வேண்டியதைத் தரானா?"

"கழுதப் பய தாராம்மா."

"இன்னும் உனக்குக் கோபம் போகலையா?"

"என் வயித்துல எரியறது அணையா அக்னிம்மா. அதை மூட்டுனவனாலகூட இப்ப அணைக்க முடியாது. ரெண்டாவது ஒருத்திய சேர்த்து அவளுக்கும் மூணு வருஷத்துல ரெண்டு பிள்ளையைக் கொடுத்திட்டான். அவள்தான் என் வாழ்க்கையில அறிவில்லாம குறுக்கிட்டாள்; எனக்கு உரிமை இருந்தாலும், நான் அவள் வாழ்க்கையில குறுக்கிட விரும்பலம்மா. அதோட, ஒப்புக்கு வாழுறவனோட வாழுகிற வாழ்க்கை உப்பில்லாத சாப்பாடு மாதிரின்னு உங்களுக்குத் தெரியாதா என்ன ஏதோ நீங்க தலையிட்டு இந்த அடாவடிக்காரனை அரட்டி உருட்டி அவங்கிட்டருந்து பொண்டாட்டியா, ரிட்டயரான எனக்கு பென்சன் வாங்கிக் கொடுத்திட்டீங்க. நீங்க நல்லா இருக்கணும். அப்பதான் என்னை மாதிரி இவள மாதிரி இருக்கற பொண்ணுங்க நல்லா இருக்க முடியும்."

அந்த அம்மாவுக்கு அவள் சொன்னதில் பெருமைப்படுவதா அல்லது சிறுமைப்படுவதா என்று தெரியவில்லை. முழுமையாகப் பலன் கொடுக்க முடியவில்லையே என்ற ஆதங்கமும், பாதி அளவுக்காவது பலிக்கிறதே என்ற திருப்தியும் முகத்தில் ஒருசேரத் தெரிந்தது. பிறகு இதற்கெல்லாம் தான் மட்டும் காரணமல்ல; அதோ தன் முன்னால் நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கும் ஐந்தாறு பெண்களும், அந்த அமைப்பும் காரணம் என்பதுபோல் அவர்களைப் பார்த்தாள்.

அந்தப் பெண்களில் இருவர், அந்த அம்மாவைப் போல் நடுத்தரங்கள். அவர்கள் முகங்களிலும் தீட்சண்யப் பார்வை. எஞ்சிய மூவரில் இருவர் இளம் பெண்கள். ஆனாலும், ஒருவித முதிர்ச்சியான பார்வை. ஒரே ஒருத்தி மட்டும் அங்குமிங்குமாய் பராக்குப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய தோற்றத்தை வைத்து எதுவும் அனுமானிக்க முடியவில்லை. முனியம்மா, சரோசாவையே பார்த்துக் கொண்டிருந்த அந்த அம்மாவுக்குக் கோடி காட்டினாள்.

"இதோ பித்துப் பிடிச்சு நிக்குதே பாவிப்பொண்ணு, இது பட்டபாடும், படும் பாடும் கொஞ்சநஞ்ச மில்லம்மா. செய்யாத ஒரு குற்றத்தை, அதிலும் கொலைக் குற்றத்தை செய்ததா போலீஸ், ஒரு பெரிய மனுஷன் தூண்டுதல்ல பழி போட்டிருக்கும்மா. இப்பவும் கீழ போலீஸ்காரரை ஆட்டோவில் காக்க வைச்சுட்டு வந்திருக்கேம்மா. நீங்க மட்டும் இப்ப எங்ககூட வராட்டா, இவள, ராத்திரியோட ராத்திரியா ஏதாச்சும் செய்துடுவாங்கம்மா. ஏய் சரோ, நான் முன்னால ஒன்கிட்ட அடிக்கடி சொல்லுவேன் பாரு, அந்த அம்மா இவங்கதான். இன்னிக்கு என்னை என் ஆம்படையான் தெருவில போட்டு உதைக்காம இருக்கான்னா, இதுக்கு இவங்கதான் காரணம். இப்பக்கூட இவங்க பேர் எனக்குத் தெரியாது; ஆனா, அம்மாவுக்கு பேர் எதுக்கு?"

"தப்பும்மா! எனக்கும் உனக்கும் இதோ இங்க இருக்கவங்களுக்கும் அம்மா நம்ம மன்றம்தான். என்றைக்கு

தனிப்பட்டவங்க ஒரு அமைப்பைவிட உயரமா தெரிய ஆரம்பிக்கிறாங்களோ, அப்பவே அந்த அமைப்போட உயிர்த்துடிப்பு போயிடும். நாங்க அரசியல் கட்சிகள் மாதிரி இல்ல. நாங்க எல்லோரும் ஒருவர் தலைமேல் ஒருவர் ஏறி நின்னாலும் இந்த மன்றம் தான் அதிக உயரம்."

"சரிம்மா. இந்தப் பொண்ணுக்கு..."

அந்தம்மாவும், அங்கு இருந்த இதரப் பெண்களும், பெஞ்சிகளில் இருந்த பஞ்சைப் பராரிகளும் சரோசாவை ஒருசேரப் பார்த்தார்கள். எந்தப் பிரச்சினைக்கும் ஒரு முடிவு கிடைக்கும் என்பதுபோல் நாற்காலிப் பெண்கள் அவளுக்கு நம்பிக்கை தரும் வகையில் பார்த்தபோது, பெஞ்சிப் பெண்களோ, கஷ்டம் என்பது தங்களுக்கு மட்டும் உரியதல்ல என்பது போல், அவளை கண்சாய்த்துப் பார்த்தார்கள். ஆனால் சரோசாவோ, "தொரண்ணே, தொரண்ணே" என்று வாய் கூவிக் கொண்டிருக்க, அதில் மட்டும் உயிரை வைத்திருப்பவள் போல் அசைவற்று நின்றாள்.

அவளையே பார்த்தபடி அந்தம்மா மேஜையில் கையூன்றி எழுந்தாள். அவள் அருகே போனாள். அவள் மோவாயை நிமிர்த்தினாள். வெறுமையாய் கிடந்த அவள் கண்களை தலையோடு சேர்த்துத் தடவி விட்டாள். அவள் தோளில் கை போட்டபடியே மேஜையோரம் இருந்த பிரம்பு நாற்காலியில் உட்கார வைத்து, தானும் உட்கார்ந்து கொண்டு ஆவேசமில்லாமலும், அதே சமயம் ஏனோ தானோ என்று இல்லாமலும் தன்னம்பிக்கையோடு ஆறுதல் சொன்னாள் :

"இந்தா பாரும்மா, உன் மேல தப்பில்லன்னா எந்த போலீசும், எந்த ரவுடியும், எந்த கோர்ட்டும் உன்னை தண்டிக்க முடியாது. ஒருவேளை நீ இந்த மன்றத்துக்கு வராமல் இருந்தா அது வேற விஷயம். எப்போது எங்க கிட்ட நீ வந்திட்டியோ அப்போ நீ செய்யாத குற்றத்துக்குத் தண்டனை வாங்க முடியாது.

அதைத் தடுக்கிற சக்தி எங்க மன்றத்துக்கு உண்டு. இது சத்தியம். வாயைத் திறந்து உன் வாழ்க்கை முழுசையும் நல்லதோ கெட்டதோ அப்படியே கொட்டு. நீயே உனக்கு சாட்சி சொல்லாட்டால், என் பேச்சோ, இந்த முனியம்மா பேச்சோ எடுபடாது. நீ மட்டும் கொலை செய்யாட்டால் உன் மேல ஒரு துரும்பு கூட விழாது. சொல்லும்மா."

சரோசா, லேசாய்க் கண் விழித்தாள். அந்த இடத்தை அப்போதுதான் பார்ப்பது போல் பார்த்தாள். அந்த அம்மாவை நம்பாதது போலும் பார்த்தாள். லேசு லேசாய் உறைந்து போன அவள் உடம்பினுள், ஏதோ ஒரு சூடு உட்பரவி, உள்ளத்துள்ளும் பரவியது. பனிக்கட்டியாய் உறைந்து போன மனம் மெல்ல மெல்ல கசிந்தது. மனக்கட்டி உடைந்து, மனோவாதை குணமாகவில்லை என்றாலும், குறைவது போன்ற ஒரு மாற்றம். மனதுக்குள் இருந்த பனிக்கட்டியை ஏதோ ஒரு நெருப்புக்கட்டி எரித்துவிட்டு ஜோதி மயமாய் ஒளிர்ந்தது. அதில் அண்ணாத்தே எரிந்து கொண்டிருந்தான். துரை அண்ணனின் 'தர்மபத்தினி' கரிந்து கொண்டிருந்தாள். சரோசா அந்த அம்மாவையே உற்று உற்றுப் பார்த்தாள். லேசாய் சிரித்தாள். அதைவிட, சிரிக்கப் போனாள் என்று சொல்லலாம். இதற்குள் நாற்காலிகளில் இருந்த பெண்கள், 'சொல்லும்மா,' 'சொல்லும்மா' என்று மாறி மாறிச் சொன்னார்கள். சரோசா அந்த அம்மாவையே பார்த்தாள். 'எல்லாம் எனக்குத் தெரியும்' என்பது மாதிரியான தோரணை இல்லாமல், 'எல்லாம் தெரிய வேண்டும்' என்பது மாதிரியான நளினமான முக இறுக்கம். அதே சமயம், பயபக்தியை உருவாக்காமல் தோழமை உணர்வை ஏற்படுத்தும் பார்வை.

சரோசாவின் தலை, அந்த அம்மாவின் தோளில் விழுந்தது. ஒரு குழந்தையாகி அந்தத் தோளே ஒரு தொட்டில் என்பதுபோல், அங்குமிங்குமாய் தலையை புரட்டி அரற்றினாள். அவளை, அவள் போக்கில் சில நிமிடங்கள் விட்டு வைத்த அந்த அம்மாள், அவள் தலையை நிமிர்த்தினாள். பிறகு "நீ இங்கே வைச்சு சொல்லணும்

என்றாலும் சொல்லு. இல்ல, அந்த அறைக்குள்ள வந்து சொல்லணும் என்றாலும் சொல்லு" என்றாள்.

சரோசா, தன் பார்வையில் பட்ட அனைவரையும் பார்த்தாள். அத்தனை முகங்களிலும் அவளுக்கான ஒரு ஆறுதல் பார்வை இருப்பதைக் கண்டுகொண்டது போல் முகத்தைத் துடைத்தாள். தன்னாலும் மீள முடியும் என்ற ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. அண்ணாத்தைக்கும் சவால்விட ஆட்கள் இருக்கிறார்கள் என்ற எண்ணம் ஏற்பட்டது. மண்ணில் பிறந்தது, பெண்ணாய்ப் போனது, ஆத்தா ஓடியது, அவள் தாத்தா வளர்த்தது, எடுபிடி வேலை செய்தது, ஏனமாய் நடத்தப்பட்டது, போலீஸ் தொல்லைகள், போக்கிரிகளின் சீண்டல்கள், அதனால் துரையண்ணன் மூலம் அண்ணாத்தையிடம் அடைக்கலமானது, சாராய உறவுகள், இளங்கோவுடன் போட்ட சண்டை, அவனை ஆளை வைத்து அடித்துப் போட்ட அடாவடித்தனம், அவனால் மனுஷியாகி, இப்போது ஆபீஸ்காரர்களால் மீண்டும் பழைய நிலைக்கப் போக வேண்டும் என்ற எண்ணமும், அப்படிப் போய்விடுவோமோ என்ற அச்சமும் கலக்க, அவள் ஒன்று விடாமல் சொன்னாள். அவள் அனுபவித்த துயரங்களைக் கேட்கக் கேட்க அங்குள்ள அத்தனை பேருக்கும் காதுகள் போதாது என்பது போல், பலர், இரண்டு கைகளையும் தத்தம் காதுகளுக்கு மேல் காதுகளாகக் குவித்துப் போட்டார்கள்.

அவள், தனது கதையை, சுருக்கியும் சொல்லாமல், விரியவும் விடாமல் ஒப்பித்தபோது, அவள் சொல்வதை ஆரம்பத்தில் இப்படித்தான் எல்லோருக்கும் நடக்குது என்ற தோரணையில் பார்த்த அந்த அம்மா, இறுதியில் முகம் வெளிறிப் போனாள். அவள் வார்த்தையில் தொனித்த சத்திய ஒலியில் கட்டுண்டவள் போல், சரோசாவின் முகத்தைத் துடைத்துவிட்டு, கண்ணீரைச் சுண்டி விட்டாள். பிறகு, பெஞ்சில் உட்கார்ந்திருந்தவர்களைப் பார்த்துக் கேட்டாள் :

"நீங்க என்ன நினைக்கீங்க?"

"அந்த அண்ணாத்தையை இப்பவே கழுத்தை நெறிச்சுக் கொன்னு போடணும் போலத் தோணுது."

"கதையில வாரது மாதிரியே வருதே?"2

அந்தம்மா, சிறிது உணர்ச்சி வசப்பட்டுப் பேசினாள் :

"இந்தப் பெண்ணோட பிரச்சினை நமக்கு ஒரு சவால் பிரச்சினை மாதிரி. இதுவரைக்கும் கொலை செய்யப்பட்ட பெண்களைப் பற்றியும், அப்படி கொலை செய்யப்படப் போன பெண்களைப் பற்றியும்தான், நாம் விவகாரம் செய்திருக்கோம். இப்போத கொலைப்பழியை சுமந்து நிக்கிற ஒரு பெண்ணோட பிரச்சினையை நாம சந்திச்சுத்தான் ஆகணும். இந்த மாதிரி தெருவில நிக்கிறவள், சாராயம் காய்ச்சுறவள், இப்படி ஒவ்வொரு பெண்ணுக்குப் பின்னாலும் ஒரு சமூக மேடு பள்ள வரலாறு நிக்குது. சரியம்மா, இனிமே இது உன் பிரச்சினை இல்ல, எங்க பிரச்சினை. முனியம்மா! நீ சரோசாவைக் கூட்டிட்டு ஸ்டேஷனுக்குப் போ; நாங்க பின்னாலயே வந்துடறோம். என்ன யோசிக்கே?"

"கண்டிப்பாய் வரணும்மா" என்ற வார்த்தைகளை வாயில் வைத்திருந்த முனியம்மா, அவற்றை "ஒண்ணுமில்லேம்மா" என்று ஆக்கிக்கொண்டு, நாற்காலியில் உட்கார்ந்திருந்த சரோசாவை சந்தோஷமாய் தூக்கிவிட்டாள். அலுவலகத்தில் கடன் கேட்பாள் என்பதற்காக தன்னை மறைத்துக்கொண்ட அவளுக்கு குற்ற உணர்வு இப்போது முழுவதுமாக மறைந்து விட்டது. போர்டை பக்தியோடு பார்த்துக்கொண்டே சரோசாவை படிகளில் இறக்கிக்கொண்டு கீழே வந்தாள்.

இதற்குள் ஆட்டோ பக்கம் நின்ற போலீஸ்காரர் ஒரு நிம்மதிப் பெருமூச்சுடன் மேலும் காலவிரயத்தைத் தடுப்பது போல், அவர்களைக் கையாட்டிக் கூப்பிட்டார். அந்த மூவரோடும் ஆட்டோ பறந்தது.

# 33

அந்த ஆட்டோ போலீஸ் வளாகத்திற்குள் பாய்ந்தது. ஆட்டோவிற்குள் சரோசாவிடம் கரிசனம் காட்டிய அந்த போலீஸ்காரர், இப்போது லத்திக் கம்பாலேயே சரோசாவை நெட்டித் தள்ளி கீழே இறக்கினார். கூட வரப்போன முனியம்மாவை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டார்.

சரோசா, அந்தப் போலீஸ்காரரோடு முதல் மாடிக்கு வந்தாள். இன்ஸ்பெக்டரின் அறைக்கு வெளியே அவளுக்கு வேண்டியவர்களும், வேண்டாத ஒருத்தியும் சுவரோடு சுவராய் நின்று கொண்டிருந்தார்கள். தலையை தொங்கப்போட்டு நின்ற ருக்குமணி, அவள் தோளைத் தட்டிக் கொடுக்கும் கோவிந்து, அவள் கையைப் பிடித்து வீட்டுக்குப் போகலாம் என்பது மாதிரி தன்பக்கம் இழுக்கும் ஆறுமுகப்பயல், பத்துப் பதினைந்து குடிசை வீடுகளுக்குச் சொந்தக்காரியான ஒரு கிழவி, எல்லாவற்றுக்கும் மேலாக தரையில் முட்டிக்கால்களை மேலே தூக்கி, முகத்தைக் கீழே வளைத்துக் கிடக்கும் நாயினா.

வீட்டுக்காரி, சரோசாவைப் பார்த்துக் கத்தினாள் : "பாவி, கெடுத்திியேடி. கொலைகாரிக்கு என் வீடுதானா கெடைக்கணும்? ஆமை புகுந்த வீடு மாதிரி என் வீட்டை ஆக்கிட்டியேடி. போலீஸ்காரங்க உன்னால என்னையும் பிடிச்சு வைக்கிறது என்னடி நியாயம்? உடனே போய் அந்தக் கொலைக்கும் வீட்டுக்காரம்மாவுக்கும் சம்பந்தம் இல்லேன்னு போலீஸ்ல போயிச் சொல்லுடி."

சரோசா, வீட்டுக்காரியை விநோதமாகப் பார்த்தாள். ருக்குவைப் பார்த்த போது பீறிட்ட அழுகை நாயினாவைப் பார்த்தபோது வெறும் ஒலி வடிவங்களாய் உருமின.

அதே போலீஸ் இருக்கையில் இன்ஸ்பெக்டர் முன்பு மாதிரியே உட்கார்ந்திருந்தார். மீசை மட்டும் கொஞ்சம் தடித்திருந்தது. அவர் அருகே பழைய கிரைம் சப்-இன்ஸ்பெக்டர்; இன்ஸ்பெக்டர் ஊதிக் கக்கிய புகையால் கண்ணீர்ப் புகை பிரயோகத்திற்கு ஆளான துபோல், கண்ணெரிய உட்கார்ந்திருந்த சப்., தனது எரிச்சலைக் காட்டுவதற்கு ஆள் தேடிக் கொண்டிருந்தார். கோபம் வந்தால், இவர் உதடுகளையே பற்கள் மாதிரி சில மடிப்புகளை ஏற்படுத்திக்கொண்டு, அவற்றை முன்பக்கமாகக் குவித்துக் கொள்கிறவர். இது 'கரும்பு மாமூல்' கான்ஸ்டபிளுக்குப் புரியும். ஆகையால் உள்ளே எட்டிப் பார்த்தவர் பின்வாங்கிக் கொண்டார்; சுவரோடு சுவராய் பதுங்கிக் கொண்டார். இந்தச் சமயத்தில்தான், சரோசா ஒப்பாரி போட்டாள். புகைத் தாக்குதலில் புகைந்துபோன சப்-இன்ஸ்பெக்டர் கத்தினார் : "இந்தாப்பா, ஒப்பாரி போடுறவள இழுத்துட்டு வா."

கரும்பு கான்ஸ்டபிள், சரோசாவை ஒரு கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து, அந்த அதிகார அறைக்குள் வந்ததும், அவள் முதுகில் வலது கையை ஊன்றி ஒரு தள்ளுத் தள்ளினார். இதனால் இன்ஸ்பெக்டர் மேல் முட்டி மோதப்போன சரோசா, தன்னை அறியாமலேயே மேஜையில் கையூன்றி, தன்னை சரிப்படுத்திக் கொண்டபோது, வெளியே ருக்கு, வீட்டுக்காரி முகங்களும், இந்த இரண்டிற்கும் இடையே கோவிந்து முகமும் உடம்புகளைக் காட்டாமல் மூன்று தலைகளையும், ஒரு உடம்பின் தலைகளாகக் காட்டின. சப்-இன்ஸ்பெக்டர், சரோசாவைப் பார்த்து கேலியும் கிண்டலுமாய் கேட்டபோது, இன்ஸ்பெக்டர் அவளைப் பார்க்காதது போல் எங்கேயோ பார்த்து புகைவிட்டார்.

"வாம்மா, வா. நீ அங்க சுற்றி, இங்க சுற்றி, எப்படியும் எங்கப் பக்கம் வருவேன்னு தெரியும். ஒன் மூஞ்சிக்கு கவருமெண்ட் வேல வேற கேக்குதா? சொல்லுடி, துரைய நீ மட்டுமா கொன்னியா, இல்ல ஆட்கள வச்சிக் கொன்னியா? ஸார்!

இவளையெல்லாம் வெளியில விட்டுருக்கப்பிடாதுன்னு நான் அப்பவே சொன்னது, சரியாப் போச்சுது பாருங்கோ சார்.”

சரோசா, எதுவும் பேசாமல், நின்று கொண்டே செத்துப் போனவள் போல் தோன்றினாள். இன்ஸ்பெக்டர், துண்டு சிகரெட்டை ஆஷ்டிரேயில் வைத்து அழுத்திவிட்டு, இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்தார். கோபம் வந்தால் அவர் செய்கிற முதல் காரியம் இதுதான். செயின்-ஸ்மோக்கிங். ‘என்ன நினைச்சிருக்கான் இந்த சப்-இன்ஸ்பெக்டர்? அப்போ ஒரு பேச்சு, இப்போ ஒரு பேச்சு. பிரமோஷன்ல போகட்டும்... அதுக்காக பேச்சை மாத்துறதா? இவள விடும்படி சொன்னதே இவன்தானே?’

இன்ஸ்பெக்டருக்கு, அந்த சப்-இன்ஸ்பெக்டர் மேல் கோபம் கூடியதால், சரோசா மீதிருந்த கோபம் குறைந்தது. ஆனாலும் அவள் போட்ட அந்த பெட்டிஷனை நினைத்துக் கொண்டார். ‘எவ்வளவு தைரியம் இருந்தா கமிஷனருக்கு கம்ப்ளைண்ட் எழுதுவாள்? அதுவும் ஏ.சி-யா பிரமோஷன் வரப்போற சமயத்துல. டெப்டி கமிஷனருக்கு ஒரு போன் போட்டு, அவர ‘விடுவிடு’ன்னு விடலாமா? ‘நீங்க அப்ப விடச் சொன்னீங்க... இப்போ அப்படிச் சொல்ல முடியுமா’ன்னு சவால் விடலாமா?

“இந்தாப்பா, இவள அந்த ரூமுக்குள்ள கொண்டு போ; விசாரிக்கிறபடி விசாரிச்சா சரியாயிடுவாள்.”

சரோசாவை, அங்கிருந்து உடம்பையும், உள்ளத்தையும் விசாரிக்கிற ஒரு நீண்ட, நெடிய இருண்ட அறைக்குள் இட்டுப் போவதற்காக இரண்டு போலீஸ்காரர்கள் வந்தபோது, நான்கைந்து பெண்கள் வாசலில் சிறிது நேரம் நிதானித்து நின்றுவிட்டு, பிறகு உள்ளே வந்தார்கள். அவர்களில் ஒருத்தி கறுப்புக் கோட்டுப் போட்டிருந்தாள். சரோசாவிடம் ‘குசலம்’ விசாரிப்பதற்காக இருக்கையை விட்டு எழப்போன இன்ஸ்பெக்டர், இப்போது அங்கே

வந்தவர்களுக்காக மரியாதையின் பொருட்டு, அப்படி எழுந்ததுபோல் ஒரு சிரிப்புச் சிரித்தபடியே, "வாங்கம்மா... வாங்க" என்று சொன்னபடியே உட்கார்ந்தார். பிறகு ஐந்தாறு விநாடி இடைவெளி விட்டுவிட்டு, "இந்தாப்பா, இவள வெளியில கொண்டு போய் நிறுத்து" என்றார். உடனே, அங்கு வந்த பெண்களில் தலைவி மாதிரியான அந்தம்மா, உட்காரப்போன நாற்காலியைப் பிடித்துக்கொண்டு நிதானமாகச் சொன்னார் :

"இந்த சரோசாவும் இங்கேயே நிற்கட்டும் சார்... நாங்க வந்ததே இவளுக்காகத்தான்."

இன்ஸ்பெக்டருக்கு நெஞ்சுக்குள் ஏதோ ஒரு இடத்தில் இடித்தது. அந்த வேகத்தில் ஒரு சிகரெட்டை எடுக்கப் போனார். பிறகு எடுத்ததைக் கீழே போட்டுவிட்டு எடுத்த எடுப்பிலேயே முந்திக் கொண்டார் :

"இந்த மாதிரி கொலைகாரிங்களுக்கு ஒங்கள மாதிரி ஆட்கள் வரப்படாதும்மா."

நாற்காலியில் வேசாய் சாய்ந்து உட்கார்ந்திருந்த அந்தம்மா, இன்ஸ்பெக்டரின் இருக்கைக்கு எதிரான நாற்காலியின் முனைக்குத் தன்னை நகர்த்திக் கொண்டு, அவரை, உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வை தாளமாட்டாது, அவர் அல்லாடினார். நியாயம் கேட்க வரும் வக்கீல்களைக்கூட அடித்துப் பிடித்து உள்ளே போட்டவர்தான். காவலில் இருப்பவர்களைப் பார்ப்பதற்காக நிராயுதபாணிகளாக - அதுவும் வெறுங்கையோடு வருகிற சொந்தக்காரர்களைக் கூட குற்றவாளிகளுக்கு உடந்தை என்று உள்ளே தள்ளியவர்தான். ஆனால், இந்தம்மாவை அப்படிச் செய்ய முடியாது. தொலைக்காட்சியை சாட்சியாக வைத்து, அமைச்சர்களை கதாநாயகர்களாக்கி, பெண்களுக்கு ஏதோ பாடுபடுவது போல பாவலா செய்து, அரசாங்க மானியத்தை வாங்கித் தின்னும் டைப்

அல்ல இவர். மந்திரிகளையும், பெரிய மனிதர்களையும் கைக்குள் போட்டு, ஏற்கனவே குழந்தை பெற்று, கணவன்களோடு வாழும் பெண்களுக்கு மேடையில் அதே கணவன்களோடு போலிக் கல்யாணம் செய்து வைக்கும் அமைப்பும் அல்ல, இவரது அமைப்பு. ஓசைப்படாமல் ஆங்காங்கே உதவி செய்கிறவர்கள். இவர்கள் எப்போதாவது ஓசை எழுப்பினால், அதை துப்பாக்கி ஓசையாலும் தடுக்க முடியாது என்பது இன்ஸ்பெக்டருக்குத் தெரியும். ஆகையால், “ஒன் மினிட் மேடம்” என்று சொல்லிவிட்டு யாருக்கோ அவசர அவசரமாய் டெலிபோன் செய்வதுபோல், டயலில் ஒன்பது எண்களைச் சுழற்றினார். பிறகு லைன் கிடைக்காதவர்போல் முகத்தைச் சுளித்துக்கொண்டே அந்தம்மாவைப் பார்த்தபோது, அவள், நேரிடையாகவே கேட்டாள் :

“இந்தப் பெண்ணோட பேக்ரவுண்ட் எனக்கு நல்லாவே தெரியும் சார். பாவப்பட்டவள். இவளோட அண்ணாத்தே, அதான் ஒங்களுக்கும் தெரிஞ்ச பெரிய மனுஷன் இருக்காரே...”

இதற்குள் எஞ்சிய நான்கு பெண்களில் வாய் தூக்கலான ஒருத்தி இடைமறித்தாள் :

“எதுக்காக, ஒரு தாதாவுக்கு ‘ரே’ போடுறீங்க?”

“நீ சும்மா இரும்மா. அந்தப் பெரிய மனுஷன் இந்தப் பெண்ணை, ராத்திரியோட ராத்திரியா வேட்டையாடி இருக்கான். எப்படியோ தப்பித்து இந்தப் பொண்ணு, கமிஷனருக்குப் புகார் செய்திருக்காள். ஒங்களுக்கு நேரடியாய் எழுதாதது தப்புத்தான். அதுக்காக இவ்வளவு பெரிய குற்றத்த அவள்மேல் சுமத்தப்படாது. ஒங்களுக்கும் பிள்ளகுட்டி இருக்கு.”

இன்ஸ்பெக்டருக்கு, இப்போதும் ஒரு சிகரெட் பிடிக்க வேண்டும்போல் இருந்தது. அதை, அந்தம்மா ஆட்சேபிக்கப் போவதில்லை; ஆனாலும் ஒரு தயக்கம். இந்தச் சமயம் பார்த்து

நழுவப் போன கிரைம் சப்-இன்ஸ்பெக்டரை 'சிட்-டவுன்' என்றார். பிறகு பட்டும், படாமலும் பார்த்தபடியே, நீதிமன்றங்களில் கூறப்படுமே கசங்கிப்போன வார்த்தை, "சொல்வது அனைத்தும் உண்மை, உண்மையைத் தவிர வேறெதுவும் இல்லை'' என்ற தொனியில் பேசினார் :

''நீங்க நினைக்கிறது மாதிரி இல்லம்மா. இந்தப் பொண்ணோட புகார் கமிஷனர்கிட்டேயிருந்து என்கிட்டே என்கொயரிக்கு வந்தது. நான் விசாரிக்கப் போனேன். அப்போதுதான் ஒரு அக்கிரமம் தெரிஞ்சுது. துரை என்கிற கள்ளச்சாராயக் காரனோட பிணம், ஒரு கோணிப்பையில் மகாபலிபுரம் கடலுல மிதந்ததுக்கும், இவளுக்கும் சம்பந்தம் இருக்குது. நாங்களா தேடாமல் தானாக கிடச்ச கேஸ்."

"தொரண்ணா, அய்யோ... தொரண்ணா..."

"ஏய், சும்மா இருடி..."

இன்ஸ்பெக்டர் அப்படிக் கத்திவிட்டு, முகம் குன்றிய அந்தம்மாவை, குற்ற உணர்வோடு பார்த்தார். நீண்டகாலப் பழக்கம் அப்படிப் பேச வைத்து விட்டது. அதைச் சரிக்கட்டும் வகையில், "இந்தாப்பா, ஏழு கப் டீ வாங்கிட்டு வா" என்று சத்தம் போட்டார். வெளியே நிற்கும் எந்த சிபாரிசுக்காரரின் காதுலயாவது விழுந்து அவன் வாங்கிக்கிட்டு வருவான் என்கிற நம்பிக்கை. பிறகு அவர், கதை சொல்வது போல் சொன்னார் :

''நான் நேரடியா விசாரிக்கலதான். எங்கம்மா இந்த செக்யூரிட்டி காலத்துல டைம் இருக்குது? ஊருக்கு இளைச்சவன் இன்ஸ்பெக்டர். சரி அந்தக் கதையை விடுங்க. இவரு கிரைம் சப்-இன்ஸ்பெக்டர். அவரை விசாரிக்கச் சொன்னேன். இவர் விசாரணையில் இந்த சரோசா கள்ளச் சாராயம் கடத்தினவள் என்கிறதும், இவளுக்கும் கொலையான துரைக்கும் ஏதோ தகராறு

ஏற்பட்டு, இரண்டு பேரும் பிரிஞ்சுட்டாங்கன்னும் தெரிய வந்தது. ஒருநாள், நைட்ல இவள், நாயினா வெளியில கிடக்கிறானே ஒரு கிழவன், அவனோட, துரை வீட்டுக்குப் போயிருக்காள். அவனைக் கண்டபடி திட்டியிருக்காள். துரை பொண்டாட்டி இதைத் தட்டிக் கேட்டிருக்காள். உடனே இவள், அவளையும் பிடிபிடின்னு பிடிச்சிருக்காள். அந்தம்மா, கொஞ்சம் நாகரிகமானவள். கதவைப் பூட்டிக்கிட்டாள். அன்னிக்கி ராத்திரியே கொலை நடந்திருக்கு. சூழ்நிலை சாட்சியங்கள் இவளைத்தான் கொலைகாரின்னு சுட்டிக்காட்டுது."

இன்ஸ்பெக்டர், தான் பேசியது சரியா என்பதுபோல், சப்-இன்ஸ்பெக்டரை கண்ணசைத்துப் பார்த்தார். அவரும் தலையாட்டினார். அப்போது சிறிது நிசப்தம். அதைக் கலைத்து தேநீர் கோப்பைகளின் சலசலப்புக்களில், அந்த அம்மாவுடன் வந்த பெண்கள், சுவரில் சாய்ந்தபடி, சுவாசிப்பதில் மட்டுமே உயிரை வைத்திருப்பது போல் தோன்றிய சரோசாவையே பார்த்தார்கள். அந்த அம்மாவும் தம்மிடம் நீட்டப்பட்ட தேநீர் கோப்பையை வாங்கிக் கொண்டாள். ஆனால், வாயருகே கொண்டு போகவில்லை. சரோசா குற்றமற்றவள் என்று நம்பிக்கை ஏற்பட்டாலும், அவள் கண்ணீரும், கம்பலையுமாய், அவசர அவசரமாய் தன்னிடம் கூறிய தகவல்களை மீண்டும் சரிபார்க்க வேண்டும் போல் இருந்தது. சரோசாவையே இன்ஸ்பெக்டர் முன்னிலையில் பேசச் சொல்லலாமா, அதற்கு அவர் சம்மதிப்பாரா என்று அந்தம்மாள் யோசித்தாள். இந்த யோசனை வேளையையே தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொள்வது என இன்ஸ்பெக்டர் உபதேசித்தார்:

"பேசாமல் வரதட்சணைக் கொடுமை, விவாகரத்து, விதவைப் பிரச்சினை, பெண் தொழிலாளர் சம்பளம் இந்த மாதிரியான பிரச்சினைகளை மட்டும் எடுத்துக்கங்கோ மேடம். சேரிப் பொண்ணுங்கக் கிட்ட வராதீங்கோ. இவளுக ஒங்களையும் பார்ப்பாளுங்க; எங்களையும் பார்ப்பாளுங்க."

"நீங்க சொல்றது, 'ராமன் கெட்டதும் பெண்ணாலே, ராவணன் கெட்டதும் பெண்ணால' என்கிறது மாதிரி ஒரு தப்பான அணுகுமுறை."

"அப்படியில்லம்மா! கேளுங்க, இவளப்பத்தி... ஒங்களவிட எங்களுக்கு நல்லாத் தெரியும். அசல் கேடி. அதனாலதான் சொல்லுறேன். நீங்க இப்போ எந்த அபலைப் பெண்ணுக்காவது உதவி செய்யணுமுன்னா அது துரை பெண்டாட்டிக்குத்தான். பாவம் படுத்த படுக்கையா கிடக்காள்."

இதற்குள் அந்தம்மாவுடன் வந்த பெண்கள் மத்தியில் லேசான சிரிப்பு. இன்ஸ்பெக்டர் அப்படிச் சொன்னதும் அவர்களில் ஒருத்தி "யாரோடயாம்" என்று தோழிகளிடம் கிசுகிசுப்பாய் சொல்லி விட்டாள். இந்தச் சிரிப்பு பெரிதானதும், அந்தம்மா அப்போதைய சூழலை நினைவுபடுத்துவது போல் அவர்களை எரிச்சலோடு பார்த்தாள். அந்தச் சிரிப்பு அண்ணாத்தேக்கு துணைபோன தன்னைப் பற்றிய சிரிப்பாய் இருக்கும் என்று உடனடியாக நினைத்துக்கொண்ட இன்ஸ்பெக்டருக்கு, இப்போது கோபம் வந்தது. அந்த அம்மாவிடம் வெட்டொன்று துண்டு இரண்டு என்ற தோரணையோடு பேசினார் :

"அப்போ போயிட்டு வாரீங்களா? செய்த கொலையை மறைக்கிறதுக்குத்தான், இந்த சரோசா, கமிஷனருக்கு பெட்டிஷன் போட்டிருக்காள். இவள் செட்டுல எவனோ ஒருத்தன், எவரையோ வச்சு எழுதிக் கொடுத்த புகார அனுப்பியிருக்காள். துரையை கொன்னது இவள்தான். அதுக்கு முன்னால, இளங்கோன்னு, ஒரு அப்பாவி இளைஞனை கிட்டத்தட்ட உயிர் போகிற அளவுக்கு அடித்துப் போட்டிருக்கிறாள். இதுவும் விசாரணையில தெரிய வந்திருக்கு. அதனால, இவள்தான் துரையை கொன்னாள் என்பதை யாராலயும் மறுக்க முடியாது."

"ஆனா, என்னால மறுக்க முடியும் சார்"

அங்கிருந்தவர்களும், இன்ஸ்பெக்டரும் குரல் வந்த திசையை நோக்கியபோது, அவர்கள் கண்களில் முட்டுவதுபோல் கான்ஸ்டபிள் திருமலையப்பன் உள்ளே வந்தார். இன்ஸ்பெக்டரை அடிக்கப்போவது போல் ஒரு சல்யூட் போட்டார். பிறகு, தண்ணீர் கொட்டுவது போல் ஒப்பித்தார் :

"துரை கொலை செய்யப்பட்டதாய் கூறப்படும் ராத்திரி, எனக்கு நைட்டுல பீச்சுல பீட்டு சார். இந்த சரோசாவ, ஐந்தாறு ரவுடிங்க தொரத்தி வந்தாங்க. நான்தான் ஓடிப்போய் இவளையும், இவள் நாயினாவையும் காப்பாத்தினேன். ரெண்டு பேரையும், என் பாதுகாப்புல வச்சிட்டு, மறுநாள் காலையில பூக்காரி ருக்குமணி வீட்டுல விட்டுட்டு வந்தேன்."

இன்ஸ்பெக்டர், திகைத்துப் போனபோது கிரைம் சப்-இன்ஸ்பெக்டர் தன்னையும், அறியாமலேயே கத்தினார் :

"ஆக நீ ஒரு கொலைகாரிக்கு புகலிடம் கொடுத்திருக்கே. ஒன்னை சர்வீஸிலிருந்து சஸ்பெண்ட் செய்து, ஒன் யூனிபாரத்தை நானே கழட்டுறேன் பார்."

திருமலையப்பன் வீறாப்பாய் நின்றார். இதற்குள் கறுப்பு அங்கி போட்ட பெண் எழுந்தாள். அத்தனை சட்டங்களையும் வாய்க்குள் வைத்திருப்பது போல் கன்னங்களை பலூன்கள் மாதிரி உப்பவைத்தாள். பிறகு சரமாரியாகப் பேசினாள் :

"இந்தியன் பினல் கோட் சட்டத்தின்படி..."

# 34

அன்பு மனைவி பிரசவிக்கும் அறைக்கு உள்ளேயும் போக முடியாமல், அதே சமயம் வெளியேயும் நிற்க முடியாமல் தவிக்கும் கணவன்போல் இளங்கோ தவித்தான். அந்தக் காவல் நிலையத்திற்கு வந்து விட்டான். ஆபீஸ்காரர்களை மேலும் கொஞ்சம் திட்டிவிட்டு, அடித்துப் பிடித்து ஓடி வந்தான். சரோசாவுக்கு என்ன செய்ய வேண்டும் என்பது புரியவில்லை. ஆனால், ஏதாவது செய்தாக வேண்டும் என்று வேகமான வேகத்தில் வந்தவன், அந்தக் காவல் நிலையத்திற்கு அருகே அங்குமிங்குமாய் அல்லாடினான். அப்போது சரோசாவுடன், ஆட்டோவில் போலீஸ்காரர் சகிதமாய் வந்த முனியம்மா, அவனைப் பார்த்து லேசாய் சிரித்தபடி கையாட்டி விட்டுச் சென்றது, அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. சரோசாவும் அவனைப் பார்ப்பதுபோல் தெரிந்தது. ஆனால், பார்த்தாளா என்பது சந்தேகமே. எப்படியும் முனியம்மா வெளியே வந்ததும், அவளை விசாரித்துக் கொள்ளலாம் என்று உள்ளே போகாமலேயே நின்றான். சரோசாவை ஜாமீனில் எடுப்பதற்குத் தனக்குத் தெரிந்த வக்கீல்களை அவர்களின் திறமையின் அடிப்படையில் இல்லாமல், நட்பின் அடிப்படையில் மனதிற்குள் வரிசைப்படுத்திக் கொண்டான்.

இந்தச் சமயத்தில், பாமா ஒரு 'ஜே' பேருந்தில் இருந்து இறங்கினாள். அவள் முகம் தெளிவற்றுக் கிடந்தது. கன்னங்கள் லேசாய் குழிபட்டுக் கிடந்தன. ஆடை அக்கறையற்ற வகையில் தென்பட்டது. ஒற்றைச்சடையின் முடிவில் படர்ந்து விரிந்து மெல்லிய இரும்புக் கற்றைகள் போல் தோற்றம் காட்டும் முடி, இப்போது ஒரே 'சடையாய்', பூவற்று அங்குமிங்குமாய் பிசிறு தட்டி ஆடியது.

இருவரும் ஒருவரையொருவர் தற்செயலாக சந்தித்துக் கொண்டார்கள். பழக்க தோசத்தில் மெல்ல நெருங்கினார்கள். இறுதியில் பாமா பின்வாங்கினாள். அவன் சட்டையில் ஒரு பை கிழிந்து பனியனைக் காட்டிக் கொண்டிருப்பதை ஆச்சரியமாகப் பார்த்து விட்டு நடந்தாள். ஆனாலும், குறிப்பிட்ட இடத்தில் நின்றபடி கால்களை மட்டும் அங்குமிங்குமாய் தரையில் தேய்த்தாள். இப்போதுதான் ஒருவரையொருவர் முதன்முதலாக நேருக்கு நேராய் சந்தித்துக் கொள்கிறார்கள். அவனையே பார்த்த பாமா, முகத்தைக் குவித்து அங்குமிங்குமாய் தாழ்த்தி, தோள்பட்டைகளை ஈரப்படுத்தினாள். தந்தை ரமணனுடன் அந்த வீட்டை விட்டு வெளியேறும்போது இளங்கோவின் பார்வையைத் தவிர்த்தவள், இப்போது அதைத் தடுக்க முடியாமல் தடுமாறி நின்றாள். “நல்லா நாலு கேள்வி நாக்கைப் பிடுங்குற மாதிரி கேட்கணும். அவர் மட்டும் என்கிட்ட பேசட்டும், அப்போ தெரியும் சேதி” என்று தனக்குத்தானே பேசிக்கொண்டு, தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டு, இனிமேலும் ஏமாற மாட்டேன் என்று நினைத்துக்கொண்டு நின்றாள்.

இளங்கோ, அவளை வேகவேகமாக நெருங்கினான். பிறகு அவளருகே போக வேண்டாம் என்பதுபோல் பாதியிலேயே நின்றான். அப்புறம் அதை ஈடு செய்யும் வேகத்தில் நடந்தான். அவளோ, அவனைப் பார்த்தும் பாராததுபோல் முந்தானை முனையைத் தூக்கி முகத்தில் வீசிக்கொண்டு, அவனிடம் நாலு கேள்வி நல்லாக் கேட்கணும் என்ற தோரணையில் சாய்வாகப் பார்த்தபடியே நின்றாள். அந்தப் பார்வைச் சரிவாலோ என்னமோ, இளங்கோ அவளிடம் முன்னைப்போலவே நெருங்கி நின்றான். உடனே அவள் ஒரு அந்நியனிடமிருந்து விலகுபவள் போல் சிறிது விலகினாள். பிறகு இவனும் மரியாதைக்குரிய தூரத்திற்கு பின்வாங்கிக் கொண்டே, மரியாதையற்ற குரலில் கேட்டான் :

"அந்தப் பாவிப் பொண்ணு சரோசா, நீ நெனைச்சது மாதிரியே ஒரு கொலை கேசுல சிக்கிட்டாள். அதோ அந்த அறைக்குள்ளேதான், ஒருவேளை இந்நேரம் உதை வாங்கிட்டிருப்பாள். நீங்க எல்லாரும் விரும்பினதுமாதிரி அவளுக்கு ஆறு வருஷம் கிடைக்காது. தூக்குத் தண்டனைதான் கிடைக்கும். இப்போ ஒனக்கு திருப்திதானே? ஒங்கப்பா கிட்டயும் சொல்லு... எங்கம்மாக்கிட்டயும் சொல்லு. சந்தோஷப்படுவாங்க. பிறத்தியார் கஷ்டத்துல சந்தோஷம் பிறக்கும் என்கிறதை ஒங்க மூலம் தெரிஞ்சுக்கிட்டேன்."

பாமா, அவனை ஏறெடுத்துப் பார்த்தாள். அவன் முகத்தின் ஒவ்வொரு சுருக்கமும், வேதனையை இறுக்கிப் பிடித்து நிறுத்தி வைத்திருப்பதுபோல் தோன்றியது. அவளுக்கும் என்னமோ போலிருந்தது. ஆனாலும், வீம்பாகப் பதிலளித்தாள் :

"யாரும் யாரைப் பற்றியும் என்கிட்டப் பேசவேண்டிய அவசியமில்லை."

"நானும் இப்போ ஒன்கிட்ட ஆசையில பேச வரல. ஒரு ஆண், ஒரு பெண்ணுக்கு உதவி செய்தால், அது காதலின் சமிக்ஞைன்னு நினைக்கிற உன்னை மாதிரி பெண்கள் கிட்ட பேசியும் பிரயோஜனம் இல்ல. ஆனாலும், அவளோட மனிதாபிமானத்தை உன்கிட்ட சொல்லியாகணும். நானும் அவள்கிட்ட இன்-டிப்பரண்டா நடந்துக்கிட்டேன். ஆனாலும், அவள் போலீஸ்கூடப் போகிற நேரத்துல கூட, நாம ரெண்டு பேரும் ஒண்ணாச் சேரணுமுனு சொல்லிட்டுப் போறாள்; அப்படிச் சேரணும் என்கிறதுக்காக நான் சொல்லல. காலேஜ்காரியான ஒன்னையும், என்னையும் ஒரு சேரிக்காரி மனிதாபிமானத்துல மிஞ்சிட்டான்னு சொல்ல வந்தேன். சரி... இதையெல்லாம் ஒனக்குப் புரிஞ்சுக்க முடியாது."

"இருக்கலாம், ஆனாலும் சரோசாவ இரண்டு பேருமா சேர்ந்துதான் மீட்டினோம். நீங்க ஆஸ்பத்திரியில் கிடக்குறபோது பக்கத்திலேயே பழிகிடந்தேன். ஒங்களுக்காக ஏயேசு, கிருஷ்ணன்,

அல்லா-ன்னு மனசுக்குள்ளேயே பல தடவை மதம் மாறினேன். ஆனாலும் நீங்க என்கிட்ட உண்மையைச் சொல்லல. உயிருக்கு உயிராப் பழகின ஒருத்திக்கிட்ட உண்மையைச் சொல்லாத ஒருவரு - இப்பக்கூட சொல்றேன் - எனக்குத் தேவையில்ல."

இளங்கோ, அவளை விக்கித்துப் பார்த்தான். அவள் சொல்வதில் நியாயம் இருப்பது புரிந்தது. "தப்புத்தான்" என்று சொல்லிவிட்டு, அதற்காக அவள் மன்னிக்க வேண்டும் என்பதுபோல் தலைக்கு மேல் ஒரு கும்புடு போட்டுவிட்டு அவளையே தழுதழுத்துப் பார்த்தான். பிறகு கண்களை அங்குமிங்குமாய் ஆட்டிப் பன்னீர் தெளிப்பது போல் தெளித்தபடி மீண்டும் நின்ற இடத்திற்கு வந்தான். அவனுள் இப்போது, சரோசாவே முழுமையாக நின்றாள். 'சரோசாவை எப்படியாவது காப்பாற்ற வேண்டும். சரோசா வலியப் பேசும்போது, நான் முகம் கொடுத்திருந்தால், அவள் பிரச்சினைகளைச் சொல்லியிருப்பாள். என்மூலம் அவளுக்கு ஒரு வழிகூடக் கிடைத்திருக்கும். ஆனால், இப்போது வழியற்று நிற்கிறாள். போலீஸ்காரன், அவளை அடிப்பதைவிட நான் அவளிடம் பேசாமல் இருந்தது பெரிய கொடுமை. அவளை, அவள் மனசிற்குள்ளேயே சிறை போட்டுட்டேன். அதிலேயே அவள் சந்தோஷத்தையும் தூக்குப் போட்டுட்டேன்...'

இளங்கோ, அந்தப் போலீஸ் வளாகத்தையே வெறித்துப் பார்த்தான். இறுதியில் ஒரு தீர்மானத்திற்கு வந்ததுபோல், அந்தக் காவல் நிலையத்திற்குள் போனான். யாரோ ஒருவர் தோளில் கை போடுவது போலிருந்தது. முகத்தைத் திருப்பினால் ஒரு வளைக்கரம். பின்பக்கமாய் திரும்பினால் பாமா... நீர் முட்டும் கண்களுடன் அவன் தோளில் சாய்ந்தாள். இளங்கோ, அவள் தலையை நிமிர்த்தினான். அவள் தோளைப் பிடித்திழுத்து தனக்கு இணையாக நிறுத்திக் கொண்டு அவள் கைகளைப் பற்றினான்.

சரோசா, ஐந்தாறு பெண்களுக்கு மத்தியில் அலுங்காமல், குலுங்காமல், அங்கேயும் இங்கேயுமாய் பார்க்காமல், படியிறங்கிக்

கொண்டிருந்தாள். அவளைச் சூழ்ந்திருந்த கும்பலுக்குப் பின்னால் அவள் நாயினாவும், ருக்குவும் கோவிந்தும், வீட்டுக்கார அம்மாவும் இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

சரோசா, இளங்கோவைப் பார்த்ததும். இறங்கிய படியில் அப்படியே நின்றாள். அவனோடு சேர்ந்து அர்த்தநாரீஸ்வரி போல் நின்றவளைப் பார்த்ததும், அவளுக்கு ஒரு இன்ப அதிர்ச்சி ஏற்பட்டது. அந்த அதிரிச்சியில் அவள் மெல்ல மெல்ல சுயஉணர்வு பெற்ற, அவர்கள் பக்கமாய் குதித்தாள். முன்னால் காம்பவுண்ட் சுவரிலிருந்து ஏறிக் குதித்தாளே அப்படிப்பட்ட குதிதான்; ஆனால், எவ்வளவு வித்தியாசம்! சரோசா இளங்கோவைக் காட்டி, அந்தம்மாவிடம் ஏதோ பேசப் போனாள். உணர்ச்சிக் குவியலில் பேச முடியவில்லை. முனியம்மா, அவளுக்கு வாய் கொடுத்தாள் :

“இதுதாம்மா இளங்கோ என்கிற தம்பி. பாவம் இவரையும் ஆபீசுல ‘ஒருமாதிரி’ பார்க்கிறாங்க. ஆயிரத்துல ஒரு தம்பி. இன்னிக்குத்தான் இவரு அதிர்ந்து பேசினத பார்த்திருக்கிறேன். கேஷுவல், பர்மனெண்டுன்னு வித்தியாசம் காட்டாதவரு. சாரே! உனிக்கி எப்போ கல்யாணம் ஆச்சு? கடைசியில கேஷுவல்னு நீயும் எனக்கு இன்விடேஷன் கொடுக்கல பாரு.”

பாமா, நாணிக்கோணிய போது, முனியம்மா சொன்னதன் தாத்பரியம் புரியாத மனோநிலையில், இளங்கோ “என்ன ஆச்சுது” என்று ருக்குவைப் பார்த்துக் கேட்டான். பிறகு தனது கேள்விக்குரியவள் அந்த அம்மாதான் என்பதுபோல் அவளைப் பார்த்தான். அந்தம்மா, சரோசாவின் கையைப் பின்பக்கமாகப் பற்றி, தன் தோளில் போட்டுக் கொண்டு, அவள் மூக்கைத் தடவி விட்டு, அந்தத் தள்ளாடும் மனிதரை சிறிது நேரம் பார்த்தபடி நின்றவள், இளங்கோவைப் பார்த்து தன்னிலை விளக்கமளித்தாள்:

“நாங்க சமதர்ம மாதர் மன்றத்தைச் சேர்ந்தவங்க. எங்களால ஒரு அண்ணாத்தைக்கு தண்டனை வாங்கிக் கொடுக்க முடியாது.

ஆனால், சரோசாவை மாதிரி எளியவங்கள மீட்க முடியும். இனிமேல் இவள யாரும் தொல்லை பண்ண மாட்டாங்கன்னு நினைக்கேன். அப்படிச் செய்யறது எங்கள மட்டுமில்ல, எங்க அமைப்பையும் எங்க அமைப்புக்குப் பின்னால இருக்கிறத ஆயிரக்கணக்கான மனிதாபிமானிகளையும் வம்புக்கு இழுக்கிறதுக்கு சமானமுன்னு போலீசுக்கும் தெரியும், அண்ணாத்தைக்கும் தெரியும்."

சரோசா, முன்பின் அறியாத அந்தப் புதிய பெண்களின் அன்புப் பார்வையில் நெகிழ்ந்தாள். சற்றுத் தொலைவில் இன்னும் அதிர்ச்சியிலிருந்து மீளாமல் இருந்த ருக்குமணியை கையாட்டி, தன் பக்கம் கூப்பிட்டாள். மெல்ல மெல்ல நடந்தவளை வேகவேகமாய் பிடித்திழுத்து, அவள் முதுகுக்கு சுவர்போல் ஆனாள். இளங்கோவைப் பார்த்துவிட்டு, அவன் அருகே இருக்கும் பாமாவையும் பார்த்துவிட்டு, அவர்கள் இருவரையும் கண்களால் சோடி சேர்த்துப் பார்த்த மகிழ்ச்சியில் லேசாய் தலையாட்டினாள். உடனே, அந்த மகிழ்ச்சி தொற்றிக் கொண்டவள்போல், பாமா, இளங்கோவை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு சரோசாவின் பக்கம் போய் நின்று கொண்டாள்.

அந்தம்மா, தனது கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். புறப்படுவதற்கு ஆயத்தமாக கால்களை செருப்பு நுனிவரை நகர்த்திவிட்டு, பிறகு முக்கியமான ஒன்றைச் சொல்ல மறந்ததுபோல், செருப்புக்களை அகற்றிவிட்டு, சரோசாவைப் பார்த்துக் கேட்டாள் :

"ஒனக்கு ஆபீசுல வேலையும் போயிட்டுது. இனிமேல் நிச்சயம் சேர்க்க மாட்டாங்க... ஒரு மாசம் வரைக்கும் மட்டும்தான் கேஷுவலா இருந்த ஒனக்கு எங்களால் அந்த ஆபீசுல எதுவும் செய்யவும் முடியாது. அமைச்சர்கிட்ட சொன்னாலும் கடைசியில அதுல ஒரு கிளார்க்தான் முடிவெடுப்பான்."

ருக்கு, சரோசாவை தன் பக்கமாக இழுத்து வைத்துக்கொண்டு அந்த அம்மாவிடம் கெஞ்சுவதுபோல் பேசினாள்:

"ஆமாம்மா... அந்த ஆபீசுல செத்துப் போன ஒரு டிரைவரோட சம்சாரத்துக்கே ஒன்பது மாசம் ஆகியும் பாடாதிப் பசங்க பென்ஷன் தரலயாம். சரோசா அதுக்காக எவ்வளவு வருத்தப்பட்டா தெரியுமா? அப்புறமா, நாயினாவோட தனி மரமா நிக்கிற இந்த தற்குறிக்கி, நீங்கதாம்மா, ஒரு வழி காட்டணும். அவளுக்கு யாருமே இல்லம்மா. திருந்தினவங்களுக்கு சரியான வழி கிடைக்காட்டி, அப்படித் திருத்துறது, பாதிக்கிணறு தாண்டினது மாதிரிம்மா. பல்லும் பூடும்; சொல்லும் பூடும். இல்லியா கோவிந்து மச்சான்?"

கோவிந்து மச்சானுக்கு இல்லியா என்பது 'மில்லியா' என்று கேட்டது; உடனே, அதற்காக அவன் மகிழ்ந்து போய் தலையாட்டினான். அந்தம்மா சற்று விலகிப் போய் நின்று கொண்டு தன்னுடன் வந்த பெண்களை அங்கே வரும்படி முகம் ஆட்டினாள். அந்தப் பெண்கள் அவள் அருகே போனார்கள். எல்லோரும் கும்மி அடிப்பது போல் வட்டமாய் நின்று கொண்டு தலைகளைக் குவித்தார்கள். சிறிது நேரத்தில் அந்தம்மா சிறிது, முன் நடந்து, சரோசாவின் தோளில் கை போட்டபடியே அபயம் அளித்தாள். அவள் முகத்தை நிமிர்த்தியபடியே, அவள் பிரச்சினைக்கு, விடையளித்தாள்:

"எங்க அமைப்புக்கு ஒன்ன மாதிரி பல அபலைப் பெண்கள் வராங்க. பெரிய இடத்து அபலைகள், சிறிய இடத்து அபலைகள்னு... இதில் சாதி பேதமோ, அந்தஸ்து வித்தியாசமோ கிடையாது. அபலைங்க என்கிற ஒரேயொரு அந்தஸ்துதான். இவங்களுக்காக பல இடங்களில் பல ஆபீசர்களுக்கு லட்டர் எழுதுறோம். அதுகளை கொண்டு கொடுக்கணும். எங்க சங்கத்துக்கு பல கிளைகள் இருக்குது. அவங்களுக்கு சர்க்குலர் கொண்டு போகணும். அவங்க எழுதுற லட்டர்களை கொண்டு வரணும். ஆபீசையும் பார்த்துக்கணும். ஆபீசுக்கு இப்போ கட்டிடம் கட்டிக்கிட்டு இருக்குறோம். அதுல ஒரு குடியிருப்பும் கட்டுறோம்.

அது தயாரானதும், நீ அங்கேயே ஒன் தாத்தாவோட தங்கிக்கலாம். நான் சொன்ன வேலையெல்லாம் செய்யறதுக்கு ஒனக்கு மாசம் 700 ரூபா தாறோம். உன்ன வேலைக்காரியா கூப்பிடல. எங்களில் ஒருத்தியாகத்தான் கூப்பிடுறோம். நானே இப்படி வந்தவள்தான். உன்ன, பணிவிடைக்காகக் கூப்பிடல. எங்க பணிகளைப் பங்கிட்டுக்கத்தான கூப்பிடுறோம். எங்களுக்குத் தெரிஞ்ச ஒரே வார்த்தை, 'தோழர்', 'தோழியர்', என்கிறதுதான்; வேலைக்காரன், வேலைக்காரி என்கிறதில்லை. என்ன சொல்றே சரோசா?"

பல பொதுக்கூட்டங்களை இஷ்டத்துக்கு விரோதமாகக் கேட்டுப் பழகிய ருக்குமணி, தன்னையும் அறியாமலேயே கை தட்டினாள். சரோசாவை தூக்கிப் பிடித்து அவள் கன்னத்திலும், உச்சியிலும் மாறி மாறி முத்தமிட்டாள்.

சரோசாவுக்கு உச்சி முதல் பாதம் வரை எதோ ஒன்று, பூப் பூவாய் விழுவதுபோல் இருந்தது. மனதிற்குள் இதயம் என்று சொல்லுகின்ற இடம் பிரபஞ்சம்போல் விரிவது மாதிரி தோன்றியது. இதுதான் மகிழ்ச்சி என்று ஏதோவொன்று முதன்முறையாய் அவளிடம் உணர்த்திக் கொண்டிருந்தது. இதயத்தை யாரோ பூவால் வருடிவிடுவது போல் இருந்தது. அங்கிருந்து வாய்க்குள் சிரிப்புச் சிரிப்பாய் ஏதோவொன்று வந்தது. அதுவே அழுகை அழுகையாயும் நின்றது. அவள் தன் மகிழ்வைப் பகிர்ந்து கொள்ள ஆள் தேடுபவள் போல் இளங்கோவையும், பாமாவையும் ஒருசேரப் பார்த்தாள். ருக்குவை தனித்துப் பார்த்தாள். பின்பக்கமாய் நின்ற நாயினாவை முன்பக்கமாய் நகர்த்திக் கொண்டாள். பின்னர் அந்தம்மாவை கண்ணீரும் கம்பலையுமாகப் பார்த்து, "நான் சேரிக்காரிம்மா. படிக்காத முண்டம்மா" என்றாள். இப்படிச் சொன்னதினால் ஒருவேளை வேலை கிடைக்காமல் போய்விடுமோ என்று கைகளை

உதறிக்கொண்டே, "ஆனாலும், நானு சாவுறது வரைக்கும் விசுவாசமா இருப்பேம்மா..." என்றாள்.

அந்தம்மா, அவள் முதுகைத் தட்டிக் கொடுத்து, அவள் மட்டுமே அங்கே நிற்கிறாள் என்ற அனுமானத்துடன் அமைதியாகப் பேசினாள் :

"இந்தக் காலத்துல படிச்சவங்கதான், ஏன் படிச்சோமுன்னு தலைகுனியணுமே தவிர, படிக்காத நீ தலைய நிமிர்த்த முடியாட்டாலும் அப்படியே வச்சுக்கலாம். சேரிக்காரி என்கிறதுக்காக நீ பெருமைப்படணும். காரணம், கூடிக்கிட்டே அடிச்சுக்கிறவங்க ஆபீசுக்காரங்க. அடிச்சிக்கிட்டே கூடிக்கிறவங்க சேரிக்காரங்க. சரி, அதவிடு... யாரு கண்டா, நம்ம மன்றத்துக்கு நீயே, ஒரு காலத்துல தலைவியாகலாம். எல்லாத்தையும் விட ஆயிரக்கணக்கான ஆட்களைக்கொண்ட ஒரு பெரிய குடும்பச் சங்கிலியில் நீ ஒரு வளையமா இருக்கப் போறே! இந்தக் கூட்டுக் குடும்பத்துல இனிமேல் நீயும் ஒருத்தி."

சரோசா, அந்தம்மாவை, அம்மாவாக நினைத்து மார்பில் சாயப்போனாள். இதற்குள், அவள் நாயினா, பேத்தியை இழுத்துப் பிடித்து தன் தோளில் போட்டுக் கொண்டார். இந்தச் சமயத்தில் வீட்டுக்காரம்மா, ஒரு பாயிண்டைக் கொண்டு வந்தாள்.

"இந்தப் போலீஸ்காரன் என்னை எப்படிம்மா கூட்டிக்கிட்டு வரலாம்? இந்தப் பாயிண்ட அந்தக் கறுப்புக் கோட்டுப் பொண்ணு ஏம்மா கேட்கல?"

"ஆயா, நீ எப்படி கரண்ட, சாப்பிடும்போது கட் பண்றியோ, அப்படி, அந்த போலீஸ்காரங்க செய்ததும் தப்புதான்."

பூக்கார ருக்குவை, வீட்டுக்காரம்மா கோபத்தோடு பார்த்துவிட்டு, பிறகு சிரித்தாள். இந்தச் சமயத்தில் போலீஸ் மாடி

மேடையில் திருமலையப்பன் தோன்றினார். எல்லோரும் அவரை கையெடுத்துக் கும்பிட்டார்கள். அது அவருக்கு விடை கொடுப்பது போலவும், அதே சமயம் அவரை ஒருமித்து வணங்குவது போலவும் இருந்தது. அந்தக் கைகள் நிமிர்ந்தவை நிமிர்ந்தவைகளாக நின்றன.

சரோசா, கோழி முட்டையிலிருந்து வெளிப்பட்ட குஞ்சு போல் மனதாலும், உடலாலும் லேசுப்பட்டாள். தாய் கோழியின் இறக்கைகளுக்குள் அடைக்கலமாய் நிற்கும் குஞ்சு போல் அவளுக்குள் ஒரு தன்னம்பிக்கை; பிறகு அண்ணாத்தே என்ற கழுகைப் பார்த்தபடியே, தாயின் இறக்கைக் கைகளில் நம்பிக்கை வைத்து, வெளியே நகரும் குஞ்சுபோல் ஒரு எண்ணம். படிப்படியாய் பெரியதொரு கோழியாகி அந்தப் பருந்தையே துரத்தப்போவது போன்ற ஒரு ஆளுமை உணர்வின் முளைக்கீற்று, அவள் உள்த்துள் துளிர்த்ததைப் பார்த்தாள்.

வாசனைப் பூக்களை மட்டுமே சூடியும், சூட்டியும் மகிழும் சமூகத்தில், தாழம்பூவான தன்னை எடுத்து அலங்கரித்துக்கொண்ட அத்தனை பேரையும் தோழமையோடு பார்த்தாள்.



